# நட்சத்திரம் விரும்பும் நட்சத்திர ஷாம்பூ




CHIK

கண்டிஷனர் ஷாம்பூ

**புதிய சிக் ! விசேஷ ஃபார்முலாவுடன்**

வந்து விட்டது புதிய சிக் : மேம்படுத்தப்பட்ட உயர்தர விசேஷ ஃபார்முலாவுடன். இதன் இயற்கை வளம் கொண்ட 'சூப்பர் சாஃப்ட்' கண்டிஷனர் உங்கள் கூந்தலில் உண்டாக்கும் இதமானதோர் புதிய தோற்றம்.

'புதிய சிக்' கின் புதிய ஃபார்முலா அளித்திடும் செறிந்த நுரைவளம் மிருதுவாக, ஆனால் முழுமையாகக் கூந்தலின் வேர்வரை சென்று சுத்தம் செய்யும் இதன் பாங்கு, அலை அலையாய் அழகழகாய் அடர்த்தியாகக் கூந்தலைத் திகழச் செய்யும் இதன் நேர்த்தி, நிறைவான ஊட்டம் – ஆரோக்கியமான வழியில் தரும் அருமை, பார்ப்போர் மயங்கும் பளபளப்பு உள்ளம் கொள்ளை கொள்ளும் அழகுப் பூரிப்பு கமழும் மலர்களின் நறுமணம்.

இவையனைத்தையும் அளிக்கும் 'புதிய சிக்' வருகிறது இப்போது கவர்ச்சியான தோற்றத்துடன். வசதியான புதிய பாட்டில்களிலே, சிக்கனமான பாக்கெட்டுகளிலே.

உங்கள் இரசனைக்கேற்பத் தேர்ந்தெடுக்கவோ 6 வகைகளில்.

குஷ்புவின் கூந்தல் எழில்மிகு தோகை. அவரது ஷாம்பூ? அந்த இரகசியம் உங்களுக்கே தெரியும்.

**குஷ்பு சிக். இரு இணையற்ற நட்சத்திரங்கள்.**






# ஸ்ரீ கணபதி சச்சிதானந்த ஸ்வாமிகள்

**வாழும் மகான்கள் - 3**

# சுட்டும் சுடர்விழிகள்!

அந்தச் சிறிய மண்டபத்தில் 'ஜேஜே' என்று கூட்டம் நிரம்பி வழிந்தது. அப்போதுதான் ஹோமம் முடிந்திருந்தது. ஆண்களும் பெண்களுமாய் அலைமோதிக் கொண்டிருந்தார்கள். ஒரு பெண் கையில் ஏழெட்டுப் படங்கள்.

''எங்க வீட்டில் இவர்தான் கண்கண்ட தெய்வம், குரு எல்லாம். ரொம்ப நாளா என் தம்பி, பெரிய படம் வேணும் வேணும்னு கேட்டுக்கிட்டு இருந்தான். இங்கேதான் கெடச்சது.''

பெருமையோடு பக்கத்துப் பெண்மணியிடம் கூறிக் கொண்டு இருந்தார். எங்கு பார்த்தாலும் ஸ்வாமிஜியின் பெருமை தான். இந்த ஜனத் திரளைத் தாண்டிப் போனோம். அங்கேயும் தேர்ந்தெடுத்த கூட்டம். கால் மணி காத்திருப்பு. பிறகு கதவு திறந்தது. உள்ளே நுழைந்தால் நடுவில் ஸ்வாமிஜி. பக்கத்தில் மண்டியிட்டு இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு ஆறுதலாகப் பேசி அனுப்பிய வரை, எங்களை அழைத்துச் சென்ற சங்கரன் அணுகினார். குனிந்து பயபக்தியாகச் சொன்னார்.

நிமிர்ந்து பார்த்தார் ஸ்ரீ கணபதி சச்சிதானந்த ஸ்வாமிகள். இரண்டு சுடர்கள் ஒளி விடுவது போல இருந்தது. சுடர்களிலே சாந்தமும் ஞானமும் விரவி நின்றன. கையுயர்த்தி ஆசீர்வாதம் செய்தார். நாங்கள் குனிந்து வணங்கினோம்.

''வாங்களேன். சிவராத்திரி நேரத்தில மைசூர் வாங்க'' என்றார். மந்திரம் போன்ற சொற்கள். அந்தக் கண்களின் ஒளியைச் சுமந்து வெளியே வந்தோம்.

கர்னாடகாவில் 'மேகதாது' என்ற சிறிய கிராமத்தில் 1942-ல் நரசிம்ம சாஸ்திரிக்கும், ஜெயலக்ஷ்மி மாதாவிற்கும் மகனாக சத்யநாராயணா பிறந்தான். வளரும்போதே வித்தியாசமானவனாக வளர்ந்தான். பஜனைப் பாடல்களும், வேத கோஷமும் இவனை வெகுவாகக் கவர்ந்து விடும். ஏழைகளுக்கு அன்னதானமா? அங்கே போய் ஆர்வத்தோடு பரிமாறுவான். ஹோமங்கள் மிகவும் பிடிக்கும். பள்ளிப் படிப்பில் இவன் பல்வேறு வேத உபநிஷத்துக்களை மேற்கோள் காட்டிப் பேசுவதைப் பார்த்து சாஸ்திரிகளும், பண்டிதர்களும் பயந்து போயிருக்கிறார்கள்.

சத்யநாராயணா 1965-ல் தனக்குள் தானே மூழ்கி மறுபிறப்பு எடுத்தார். சாமுண்டீஸ்வரி மலைகளின் அடிவாரத்திலே தங்க ஆரம்பித்தார். அவரின் சக்தியை உணர ஆரம்பித்த பக்தர்கள் சேர்ந்து ஒரு ஆஸ்ரமத்தை நிறுவினர். தத்தாத்ரேயர் ஆஸ்ரமமாக அது மலர்ந்தது. அங்கு ஸ்ரீ கணபதி சச்சிதானந்த ஸ்வாமிகளாக அமர்ந்தார். அன்று முதல் அவருடைய ஞான வேள்வி துவங்கியது. நிறைய பக்தர்கள் வந்து குவிய ஆரம்பித்தனர்.

பக்தி, ஞானம், வைராக்கியம் இவை மூன்றுமே வாழ்வின் இக, பர உயர்விற்கு ஏணிப் படிகள் என்றார் ஸ்வாமிஜி. ஒவ்வொரு மனிதனும் பக்தியோடு வாழ வேண்டும். அது முதிரும் போது ஞானம் பிறக்கிறது. ஞானத்தின் வழி வைராக்கியம் மலருகிறது. நல்வழி பிறக்கும் வைராக்கியம் கொண்ட மனிதனால் வாழ்வில் சாதிக்க முடியாதது எதுவுமே இல்லை.

ஸ்வாமிஜி என்பவர் சொர்க்கத்திற்கு மட்டுமே வழிகாட்டுபவராக இருப்பவர் அல்ல. இருக்கும் உலகத்திலும் சுகமாக நல்லவிதமாக வாழ வேண்டும் என்பார். அதற்காகத்தான் 'அனகாஷ்டமி விரதம்' எனும் மறந்து, மறைந்து விட்ட விரதத்தை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தார்கள்.

செல்வமோ, புகழோ வந்து விட்டால் மனிதனுக்கு மமதை அதிகமாகி தீய வழியிலே அல்லவா செல்ல ஆரம்பித்து விடுகிறார்கள். அதற்காகத்தான் பக்தியோகத்தை வலியுறுத்துகிறார். ஸ்வாமிகள் பக்தியிலும் இசை கலக்கும் போது மனம் எளிதாக நெகிழ்கிறது என்கிறார். சிறு வயதில் இருந்தே தானே இசையுடன் பாட வல்ல ஸ்வாமிகள் அருமையாகப் பல பாடல்களை அமைத்துள்ளார்கள். அனைத்து இசைக் கருவிகளையும் இசைக்க வல்லவர். மனதை சாந்தப்படுத்தி தியானத்தில் ஆழ்த்தக்க வகையில் இசையையே அமைத்திருக்கிறார்கள் ஸ்வாமிகள்.



இசையைப் போலவே வேதம், யோகா, ஹோமம் எனப் பல்வேறு நிலைகளிலே மனிதனின் ஞானக் கதவுகள் மனதிலே திறக்க வழி வகைகள் செய்து வருகிறார்.

ஸ்வாமிஜி ஆஸ்ரமத்தில் செய்யும் ஹோமங்கள் பிரசித்தி பெற்றவை. கணபதி ஹோமங்கள் செய்யப் படுகின்றன. நவராத்திரி ஒன்பது நாளும் அம்பாள் அழகுத் தேவதையாக சக்தியின் ஞானப் பிழம்பாக வழிபடப் படுகிறாள். ஒன்பது நாளும் ஒன்பது விதமாக அவளுக்கு ஆராதனைகள். சிவராத்திரியில் நடைபெறுவது மாபெரும் ஹோமம். அதன் முடிவிலே பார்த்துக் கொண்டிருக்கும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் மனம் படபடக்கும் விதத்தில் ஸ்வாமிகள் ஹோமகுண்டத்தில் இறங்குவார். உள்ளிருந்து சிவலிங்கத்தை எடுத்து வருகிறார்.

''ஸ்வாமிஜியின் சக்தி மகத்தானது'' என்கிறார் அவருடைய பக்தரான வழக்கறிஞர் கோபாலன். முதன் முதலாக ஸ்வாமிஜியை மைசூரில் சந்தித்த கோபாலன் பிறகு படிப்படியாக முழுமையாக அவருக்கே அடிமையானதையும், அவரின்றி இவர் வாழ்வில் எதுவுமே அசையாமல் போனதையும் ஒரு புத்தகமாகவே விவரிக்கிறார்.

ஸ்வாமிஜியால் இருந்த இடத்திலிருந்தே தன் அன்பர்களின் வாழ்வில் நடக்கின்ற உண்மைகளை அறிந்து கொள்ள முடிந்ததை விவரித்து இருக்கிறார். அப்படியும் கால தேச வர்த்தமானங்களுக்குக் கட்டுப்பட்டவராகவே தன்னைக் காண்பித்துக் கொண்டதை அவர் விவரிக்கிறார்.

ஒருமுறை கோபாலனின் மாமியாருக்கு உடல்நலம் மிகவும் சரியில்லாமல் போனது. ''ஸ்வாமிஜியின் அருள்வேண்டி போய் நின்றோம். கவலைப்படாதே. அவருக்கு ஒன்றும் ஆகாது. நீ தைரியமாக இருக்க வேண்டும்'' என்று சொல்லி அனுப்பி விட்டார்.

ஊர் திரும்பியவரின் தாயாருக்கு திடீரென்று உடல்நலக் குறைவு. மருத்துவமனையில் அவரைச் சேர்த்து விட்டு ஸ்வாமிஜியிடம் பேச வேண்டும் என முயன்றிருக்கிறார். மைசூருக்கு, பெங்களூருக்கு என எங்கே பேசினாலும் அவர் கிடைக்கவில்லை. பேச முடியவில்லை. அதற்குள் தாயாரின் உடல்நிலை மோசமாகி அவர் காலமாகி விட்டார்.

அதைப் பற்றிப் பிறகு பேசும் போது ஸ்வாமிஜி குறிப்பிட்டு இருக்கிறார், ''நான் முன்னமே உனக்குச் சூசகமாகச் சொன்னேன், அவருக்கு (மாமியாருக்கு) ஒன்றும் ஆகாது. மனம் தைரியமாக இரு'' என்று. என் வார்த்தைகளை நன்கு புரிந்து கொண்டு இருந்தால் மனோதிடம் பெற்றிருப்பாய். தவிர நான் அந்தச் சமயத்தில் பேசியிருந்தால் எப்படியாவது என் தாயாரின் உயிரை மீட்டுக் கொடு என்பாய். உன் அன்னையாரின் காலம் முடிந்து விட்டது. அந்த நல்ல ஆத்மா உயர்ந்த இடத்தில் சேர்ந்து விட்டது'' என்றாராம்.

அதே போல உயர் போலீஸ் அதிகாரியான லட்சுமிராவ் ஸ்வாமிஜியைப் பற்றிப் பேசும்போதே உணர்ச்சிவசப்படுகிறார் -

''என் வாழ்க்கையே ஸ்வாமிஜி காட்டும் பாதையில்தான் நடைபெறுகிறது.

அவர் எனக்கு எப்போதும் என்னுடனேயே இருந்து குருவாக நின்று வழிகாட்டுகிறார். அதைப் பலமுறை நான் பல நிகழ்ச்சிகளில் அனுபவபூர்வமாக உணர்ந்திருக்கிறேன். ரோந்துப் பணியில் ஈடுபட்டு இருக்கும் போது திடீரென்று குறிப்பிட்ட அந்த இடத்துக்குப் போக வேண்டும் என்று தோன்றும். அதே போல அங்கே போனால் ஏதாவது ஒன்று என்னால் தீர்க்கப்பட வேண்டிய பிரச்னை இருக்கும்.

காலையில் இருந்து வெளியில் போயிருப்பேன். அதுவரை எந்த போனும் வந்திருக்காது. உள்ளே நுழையும் போது போன் அடிக்கும். உயர் அதிகாரியின் உத்தரவு காத்திருக்கும். காவல் துறையில் எஸ்.பி.யாக பணியாற்றும் நான் ஏதேனும் சிறியதாக வேனும் செய்கிறேன் என்றால் அதற்கு ஸ்வாமிஜிதான் காரணம். என்னைப் புரிந்து கொண்ட கணவர், ஸ்வாமிஜியின் ஆசிர்வாதத்தால் கிடைத்ததால் குடும்ப வாழ்விலும் எனக்குப் பிரச்னைகள் இல்லை'' என்கிறார்.



லக்ஷ்மிராவ் தன் பூஜை அறைக்கு அழைத்துக் கொண்டு போய் காட்டினார். அவர் மனதில் ஸ்வாமிஜி நிறைந்திருப்பது போலவே பூஜையறை முழுவதிலும் ஸ்ரீ ஸ்வாமிகளின் விதவிதமான படங்கள்.

''எனக்கு ரெகுலரா பூஜை புனஸ்காரமெல்லாம் பண்ணத் தெரியாது. காலையில எழுந்து குளிச்சுட்டு இங்கே வந்து ஒரு நமஸ்காரம் பண்ணுவேன். ஸ்வாமி, எனக்கு வழிகாட்டியா நீங்க எப்பவும் இருக்கணும்னு ஒரு நிமிஷம் ப்ரார்த்தனை பண்ணுவேன். அவ்வளவுதான். அப்புறம் யூனிஃபார்ம் போட்டுக்கிட்டு கிளம்பிட்டேன்னா அவ்வளவுதான்'' என்று சிரிக்கிறார்.

அதே போல சங்கரன். வாழ்வின் ஆரம்ப கட்டத்திலே மிகுந்த சிரமப்பட்ட சங்கரன் ஸ்வாமிஜியை உணர ஆரம்பித்த பிறகு தன் குடும்பக் கஷ்டங்களில் இருந்து கொஞ்சம் கொஞ்சமாக மீண்டு இருக்கிறார். தன் பெண் கல்யாணத்தையே வெகு எளிதாக முடித்து விட்டார். ஸ்வாமிஜியின் வழிகாட்டுதலால் பெண்ணிற்கு நல்ல வரன் முடித்ததால், பெண்களுக்கு வரன் சொல்வதை ஒரு சேவையாகவே தன் இல்லத்தில் ஆரம்பித்து விட்டார். அங்கு வருபவர்களுக்கு எல்லாம் ஸ்வாமிஜியின் பெருமையைக் கூறுகிறார். மைசூர் ஆஸ்ரமத்திற்குச் சிலரை தன் சொந்தச் செலவிலே அழைத்துச் செல்கிறார். இவ்வளவும் ஸ்வாமிஜியின் மேல் அவர் கொண்ட அளவு கடந்த ப்ரேமையின் காரணமாகத் தான்.

இப்படிப் பல்வேறு தரப்பினரையும் தன் 'சுட்டும் சுடர்' விழியால் ஆட்கொண்ட ஸ்ரீ கணபதி சச்சிதானந்த ஸ்வாமிகள் பெருமைமிக்க நம் புராதன சாஸ்திர வேதங்கள் வெளிநாட்டிலும் பரவ வேண்டும் என மிகுந்த ஆவல் கொண்டார். அதனால்தான் உலகமெங்கும் சென்று அருளாசி வழங்கும் அவர் தத்தாத்ரேயர் ஆஸ்ரமத்தைப் பல்வேறு நாடுகளிலே நிறுவியும் இருக்கிறார். அவர்பால் ஈர்ப்பு கொண்ட ஆயிரக்கணக்கான வெளிநாட்டினர் மைசூரை நோக்கி வருகின்றனர்.

'ஸ்ரீதத்த பீடம்' என ஏன் ஸ்வாமிகள் தேர்ந்து எடுத்தார் எனப் பலருக்கும் கேள்விகள் பிறக்கலாம். மிகத் தொன்மையான பீடம் ஸ்ரீ தத்தாத்ரேயர் பீடம். ஸ்ரீதத்தர் ஜாதி இன மொழி கடந்தவர். அவருக்குக் குறிப்பிட்ட மதம் கிடையாது. எனவேதான் ஸ்வாமிகள் அவரைத் தன் குருவாக ஏற்று மிகப் புராதானமான ஆனால் பிறகு செயலற்றதாகி விட்ட அந்த பீடத்தையும் தேர்ந்தெடுத்தார். அதற்காக ஒரு அழகான கதையையும் சொல்கிறார்.

''ஒரு மனிதன் ரொம்ப நாளாக நோய் வாய்ப்பட்டு இருந்தான். எத்தனையோ விதமான மருந்துகள். ஒன்றுக்கும் குணமாக வில்லை. பிறகு ஒரு மகானின் யோசனைப்படி ஒரு விருக்ஷத்தின் கீழ் போய் நின்றான். அவன் நோய் குணமாகி விட்டது. அந்த மனிதனுக்கு ஒரே ஆச்சர்யம். பார்ப்பதற்கு எல்லா மரங்களைப் போலத்தான் இதுவும் இருக்கிறது. இது எப்படி நம் நோயைத் தீர்த்தது. ஒருவேளை வேருக்குள் எதுவும் வித்தியாசமாக இருக்குமோ?'' என மரத்தின் கீழே மண்ணைத் தோண்ட ஆரம்பித்தான். அவன் தோண்டத் தோண்ட மரமே அவன் மேல் சாய்ந்து விட்டது.

அது போலத்தான் பக்தியும் நம்பிக்கையும். மரத்தின் வேர் களைத் தோண்டாதீர்கள். மாறாக, உங்களைக் குணப்படுத்திய மரத்திற்கு நீரை ஊற்றுங்கள். அது பூவும் பிஞ்சுமாகக் காய்த்து இன்னும் நிறைய பேருக்குப் பலனளிக்கும்.

அசையாத நம்பிக்கை, பக்தி - எப்பேர்ப்பட்ட பிரச்னையானாலும் தீர்க்கவல்லது. மனிதனால் வெல்ல முடியாதது மரணம் என்பார்கள். எப்பேர்ப் பட்ட யோகியும் காலத்திலே முடிந்து விடுகிறார்கள். ஆனால் மார்க்கண்டேயன்? சிவனை இறுகப் பற்றிக் கொண்டான்! அசைக்க முடி யாத தெய்வ நம்பிக்கை! மரணத் தேவனே தோற்றுப் போனான். அப்படிப்பட்ட நம்பிக் கையை உங்கள் மனத்தில் கொள் ளுங்கள். அது எந்தப் பிரச்னையையும் தீர்த்து விடும்'' என்கிறார் ஸ்வாமிகள்.

''இந் நிலைதான் தெய்வீக முக்தி நிலை'' என்று அதற்குப் பெயரிடுகிறார்.

''இன்று உலகில் இத்தனை பிரச்னைகள் இருக்கின்றனவே. அதற்கு என்ன காரணம்?''

''இரண்டுதான். மாறுபட்ட கருத்துக்கள், அமைதியின்மை. இவ் விரண்டால் இந்த உலகம் இந்தப் பாடுபடுகிறது.''

எத்தனை அற்புதமான அருள் மொழிகள். எதற்கெடுத்தாலும் மாறுபட்ட கருத்துக்களைத்தானே நாம் பார்க்கிறோம். யாரைப் பார்த் தாலும் நம் மனிதர், நம் சகோதரர் என்ற உணர்வே வருவதில்லையே. 'நீ சொல்வது சரியில்லை. இவர் தப்பு...' இப்படித்தானே ஒவ்வொருவர் சிந்தனை யும் செல்கிறது. ஒற்றுமை, மனித நேயம் இன்மை அல்லவா உலகமெங்கும் இன்று கொடிகட்டிப் பறக்கிறது. அதனால்தான் இருவர் வாழும் சிறிய வீடு முதல், கோடிக் கணக்கில் வாழும் நாடு

---

இந்தக் கட்டுரையை எழுதும் போதே இரண்டு சந்தேகங்கள் மனதில் எழுந்தன. ஸ்ரீ தத்தாத்ரேயர் பற்றி இன்றைய நாட்களில் சாதாரண மக்களுக்குத் தெரியாது. அவருடைய வரலாறு என்ன? யார் அவர்? ஸ்வாமிகளிடம் கேட்கும் போதோ நம்பிக்கை வேண்டும் எனக் கண்டிப்புச் சொல்லி விட்டார். ஆனாலும் மனதில் அரிப்பு. அதே போல அனகாஷ்டமி விரதம் என்றால் என்ன? கட்டுரையை எழுதி முடித்து விட்டாலும் மனதுக்கு மட்டும் திருப்தியில்லை.

அன்று மதியம். மிக நீண்ட நாட்களுக்குப் பிறகு ஸ்வாமிகளின் அன்பர் சங்கரன் போன் செய்தது ஒரு ஆச்சர்யம். அதை அவரிடமே தெரிவித்து விட்டு என் இரு சந்தேகங்களையும் கேட்காமல் தத்தாத்ரேயர் பற்றிக் கேட்டேன்.

''தத்தாத்ரேயர் கோயில் கட்டின ஒருத்தரையே இன்னிக்குச் சாயங்காலம் பேசச் சொல்றேன்'' என்றார் அவர்.

மாலையில் வேணுகோபாலைச் சந்தித்தேன். அவர் கையில் 'ஸ்ரீ குரு சரித்திரம்' என்ற தத்தாத்ரேயர் சரித்திரம் விரிவாக.

''ஸ்வாமிகளோடு உங்களுக்கு எப்படித் தொடர்பு?'' என்றேன்.

''அது ஒரு ஆச்சர்யம்தான். எங்களுக்குக் குழந்தைகள் இல்லை. என் உறவினரின் தூண்டுதலால் நம்பிக்கையில்லாமல்தான் ஸ்வாமிகளைப் போய்ப் பார்த்தேன். அவரிடம் எதுவும் நான் கேட்கவில்லை. ஆனால் அவர், ''எங்க ஆஸ்ரமத்தில் ஒருத்தருக்குக் கல்யாணம் [illegible] அடுத்த வருஷம் கழிச்சுக் குழந்தை பொறக்கும்'' என்றார். நான் புரிந்து கொண்டேன். அதற்கப்புறம் எத்தனையோ அற்புதங்கள் என் வாழ்விலே'' என்றார்.

''தத்தாத்ரேயர் கோயிலை ஸ்வாமிகளின் ஆசிப்படி செங்கற்பட்டு பக்கத்திலுள்ள அச்சிறுப்பாக்கத்தில் கட்டினேன். அப்போதுதான் தத்தாத்ரேயரைப் பற்றி நிறைய தெரிந்து கொண்டேன். தத்தாத்ரேயர் சிவன், பிரம்மா, விஷ்ணு மூன்றும் இணைந்தவர். அதைக் குறிக்கும் வகையில்தான் மூன்று தலைகள் இருக்கும். ரஜோ, தாமஸ, சத்துவ [illegible] திக்குணம் கொண்டவர். அவர் குரு அவதாரம். [illegible]களின் மேல் தன் சைதன்யத்தைக் கொண்டு வருபவர். அதனால்தான் துறவிகள் பல பேர் தத்தாத்ரேயரை குருவாக வழிபடுகிறார்கள். எல்லா அவதாரங்களுக்கும் முடிவு உண்டு. தத்தாத்ரேயர் இன்றும் இருப்பதாகத்தான் ஐதீகம். அவருடைய அருள்பெற்றவர்கள் 'அவதூதர்களாக' ஆகிறார்கள்.

குருவின் மேல் அதீதமான நம்பிக்கை கொண்டால் கடக்க முடியாத பிரச்னையே இல்லை. குரு பக்தியே சிறந்தது. இதனால்தான் ஸ்வாமிகள் தத்தாத்ரேயரை ஆராதித்து நம்பிக்கையை மனிதர்களிடையே பரப்பி வருகிறார்கள்...''

என்று சொல்லிக் கொண்டே வந்தவர், ''தத்தாத்ரேயர் தர்மபத்தினி அனகாதேவி. அந்த அன்னையின் பெயரிலே ஒரு விசேஷமான விரதம் உண்டு. அதை கிருஷ்ண பக்ஷ அஷ்டமியிலே செய்தால் அவ்வளவு பலன்'' என்றவுடன் ஆச்சர்யத் [illegible].

''அனகாஷ்டமி விரதமா?''

''ஆமாம். அனகாதேவி லக்ஷ்மியின் அவதாரம். [illegible] இல்லாத லக்ஷ்மி'. செல்வம் வந்[illegible] இருக்கட்டுமா போகட்டுமா என குழப்[illegible]. அந்தக் குழப்பம் இல்லாத லக்ஷ்மியே அனகாதேவி. எனவே இந்த விரதம் தெய்வீக சம்பத்தை அளிக்கும் என்பதால்தான் இந்த விரதத்தை அனுஷ்டிக்க ஸ்ரீ ஸ்வாமிகள் பெண்களிடையே சொல்லி வருகிறார்.

அதே போல ஸ்ரீ தத்தாத்ரேயர் பரசுராமருக்கு ஸ்ரீ [illegible] 'சொல்ல அவர் ரிஷிகளுக்குச் சொன்னார் என்று வருகிறது. சுப்ரமண்யரை சிஷ்ய[illegible] அவதூத கீதை கூறினாராம். இப்படி நிறைய குருவின் மகிமைகள் கூறப்படுகின்றன.

அனகாஷ்டமி விரதத்தை இன்னும் கொஞ்சம் விரிவாக அடுத்த இதழில் பார்க்கலாம்.

வரை அமைதி யின்மை அல்லவா பரவிக் கிடக்கிறது.

அப்படியென்றால் இவற்றிற்குத் தான் என்ன வழி? ஸ்வாமிகளே சொன்னாரே, பக்தி... தெய்வீக முக்தி நிலையெனும் நம்பிக்கை. அதோடு வேறு சில அறிவுரைகளும் கூறுகிறார் -

''உங்களால் இயன்ற வரை அடுத்தவருக்கு உதவுங்கள். உங்கள் ஓய்வு நேரத்தை பலன் எதிர்பாராமல் தொண்டு செய்யப் பழகுங்கள்... ஆனால் இந்த உலகில் நடப்பவை யாவும் உங்கள் செயலுக்கப்பாற்பட்டவையாகும். உங்களைக் கருவியாகக் கொண்டு செயல்படுபவை. இதை மறக்க வேண்டாம்.''

'நான்தான் இத்தனை செய்தேன் என்று மமதை கொண்டு திரிய வேண்டாம்' எனக் கூறாமல் கூறுகிறாரோ ஸ்வாமிகள்?

ஒரு குழந்தைக்குச் சொல்வது போல வாழ்வின் இரகசியங்களை, வெற்றிகரமான நல்ல உத்தமமான வாழ்க்கை வாழ்வதற்கான வழிகளை இப்படிப்பட்ட மகான்களே அன்றி யாரே உரைப்பார்கள்?

### திருநாம ஜபத்தின் மகிமை

கேள்வி பதில் முறையில் சுவாமி ராம்ஸுரத்தாஸ் அவர்கள் திருநாம ஜபத்தின் மகிமையைக் கூறுகிறார்.

விலை ரூ. 7.00

(கோபால் சேவா டிரஸ்ட், 82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு, ஈரோடு - 638 003)

### பாரதிதாசன் உவமைநயம்

அழகை ரசிப்பவர்கள் அழகு பக்தர்கள்; அழகை மற்றவர்களுக்குச் சுட்டிக் காட்டுபவர்கள் அழகுப் பித்தர்கள் என்று கூறி பாவேந்தரின் உவமைநயத்தைக் கூறுகிறார் வல்லிக்கண்ணன்.

விலை ரூ. 10.00




### வீட்டுக்கு வீடு

ந. ராமதாஸ் அவர்கள் எழுதிய நாடகம்

விலை ரூ. 18.00

(இரண்டும் - உதயா புக் சென்டர் பிரைவேட் லிமிடெட், 6, சிவப்பிரகாசம் தெரு, அண்ணா சாலை, சென்னை - 600 002)

### ஆரோக்கிய வாழ்வுக்கு வழிகாட்டும் யோகாசனங்கள்

ஆசனம், பிராணாயாமம், முத்ரா, தியானம் விளக்கப் படங்களுடன் டாக்டர் ஏ. எஸ். அசோக்குமார் எழுதியுள்ளார்.

விலை ரூ. 60.00

(ஏ. கே. வரலெக்ஷ்மி யோகா புக்ஸ் பப்ளிகேஷன், 8, யோகாம்பாள் தெரு (மாடியில்) தி. நகர், சென்னை - 600 017)

### தேவ பூஜாபத்ததி

ஆசிரியர் - எம். ராமாராவ்

விலை ரூ. 8.00

(ஆர். நரஸிம்ஹாச் சார், 18, ரெட்டிராயர்குளம், வடகரை, கும்பகோணம் - 612001)

### சோமவார விரத மஹிமை

திருக்கடவூர் தல வரலாறும் திருப்பதிகங்களும். ஆசிரியர் - ஆங்கிரஸ வெங்கடேச சர்மா.

விலை ரூ. 3.00

(எஸ். வெங்கடேச சர்மா, 43, ஏழாவது அவென்யூ, அசோக் நகர், சென்னை - 600 083)

### சமணர் நாட்டுப்புறப் பாடல்கள்

'ஆனைகட்டும்
தானடியாம்
மானமுட்டும்
போரடியாம்
குதிரை கட்டும்
தானடியாம்
குன்றுமுட்டும்
போரடியாம்'

இன்றும் வாழும் சமணர்களிடையே பாடப்படும் நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்துள்ளவர் வி. அசோக்குமார்.

விலை ரூ. 17.00

### அகிம்சைக் கதைகள்

இன்றைக்கு மிகவும் தேவையான அகிம்சையை வலியுறுத்தி புராண, இதிகாச இலக்கியங்களில் இருந்து கதைகளைத் தொகுத்து வழங்குகிறார் வி. அசோக்குமார்.

விலை ரூ. 14.00

(இரண்டும் - ஜினப் பிரபா பதிப்பகம், 8, 4-வது குறுக்குத் தெரு, தேரு நகர், காரைக்கால் - 609 605.)

### தகவல் தொடர்புச் சாதனங்களின் கதை

விலை ரூ. 20.00

### புத்திர தோஷமும் பரிகாரமும்

ஜோதிட சாஸ்திர அடிப்படையில் எழுதப்பட்டுள்ள நூல்.

விலை ரூ. 10.00

### 30 வகையான ஓட்டு வீடுகளுக்கான மாதிரிகள்

விலை ரூ. 30.00

### நீலக்குயிலே கண்ணம்மா

பெண்கள் சமுதாயத்தில் அல்லல்படுவதை எடுத்துக் கூறும் ஆர்னிகா

நாசரின் நாவல்.

விலை ரூ. 30.00

(நான்கும் - மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண் 1447, 4, தணிகாசலம் சாலை, தி. நகர்., சென்னை - 600 017)

## நம்மைத் தேடி....

மனம், அதன் செயல்பாடுகளை இந்திய ஆன்மீகச் சிந்தனைகளுடன் இணைத்துத் தருகிறார் சுவாமி பஜனானந்தா.

விலை ரூ. 10.00

## ஸ்ரீராமானுஜர்

பக்தியுடன் வேதாந்தத்தைக் கலந்து புரட்சிகரமான மத மாற்றங்களையும் செய்த ஸ்ரீ ராமானுஜரைப் பற்றிய அற்புதமான ஆராய்ச்சி நூல். வங்கமூலம் - சுவாமி ராமகிருஷ்ணானந்தர். தமிழில் - கா.ஸ்ரீ.ஸ்ரீ.

விலை ரூ. 38.00

## அறிவுக் கனலே, அருட்புனலே!

அறிவுக் கனலாகவும், அருட்புனலாகவும் வாழ்ந்த ஸ்ரீ இராமகிருஷ்ணர்; அவருடைய சீடராக அமைந்து உலகுக்கே அறிவையும், அருளையும் தந்த விவேகானந்தர் இவர்கள் இருவரும் வாழ்ந்த அற்புத வரலாற்றை பக்திரசம் ததும்பத் தருகிறார் ரா. கணபதி.

விலை ரூ. 100.00

(மூன்றும் - ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 600 004)

## யாதும் ஊரே

கடைச்சங்க காலத்தில் செழித்துக் கிடந்த தமிழகத்தின் நிலையினைக் கதையாக வடித்துள்ளார் சித்தார்த்தன்.

விலை ரூ. 35.00

(உதயா புக் சென்டர் பிரைவேட் லிமிடெட், 6, வெப்ரகாசம் தெரு, சென்னை - 600 002.)

## ஏக்கங்களின் தாக்கங்கள்

*'சிறகற்ற மீனாகப்*
*பிறந்தால் கூட*
*சிக்கடல்கள் சுழன்று வரச்*
*சிக்கல் ஏது?*
*இறைமையிலாப் பாழ்படைப்பே!*
*மனிதன் செல்லத்*
*தேசமெலாம் தடைகள் ஏன்?'*

கவிஞர் வேழவேந்தனின் கவிதைத் தொகுப்பு. பல்வேறு துறைகளில் அவருக்கு இருக்கும் புலமையை விளக்கிறது.

விலை ரூ. 25.00

## தூறலும் சாரலும்

கவிஞர் கா. வேழவேந்தன் அவர்களின் கவிதைத் தொகுப்பு.

விலை ரூ. 25.00

(வேந்தர் பதிப்பகம், 103, டாக்டர் இராதாகிருஷ்ணன் சாலை, மயிலை, சென்னை - 600 004.)

## குடும்பச் சமையல் - பாகம் 1

சாதம், குழம்பு போன்ற அன்றாட சமையல்.

விலை ரூ. 14.00

## குடும்பச் சமையல் - பாகம் 2

அதிரஸம், அப்பம் போன்ற பலகார வகைகள்

விலை ரூ. 13.00

## கோதையர் இடும் கோலங்கள்

கிழமைகளுக்குரிய கோலங்கள், தெய்வங்களுக்குரிய கோலங்கள் எனத் தொகுத்துத் தருபவர்கள் ஆர். சரஸ்வதி, எல். விஜயலட்சுமி.

விலை ரூ. 7.00

## இலாபம் தரும் காளான் வளர்த்துப் பணம் குவியுங்கள்

ஆசிரியர் : அசோக்குமார்

விலை ரூ. 8.00

## ப்ராய்லர் கோழி வளர்த்துப் பணம் குவியுங்கள்

ஆசிரியர் : அசோக்குமார்

விலை ரூ. 12.00

(ஐந்தும் பதிப்பு - இலக்குமி நிலையம், 17, அம்மையப்பன் சந்து, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

## விஷக் கடிகளுக்கு வீட்டு வைத்தியம்

பல்லி முதல் நல்ல பாம்பு வரை விஷக் கடியினால் ஏற்படும் அபாயத்திற்கு முறிவு. ஆசிரியர் : முருகேசன்.

விலை ரூ. 11.00

(வள்ளி மயில் பதிப்பகம், 32/1 கங்கையம்மன் கோயில் தெரு, வடபழனி, சென்னை - 600 026.)

## மெட்டி

மனநிறைவற்ற ஆணின் காரணமாக பல பெண்கள் அலைக்கழிக்கப்படுவதை நாவலாகச் சித்திரிக்கிறார் டைரக்டர் மகேந்திரன்.

விலை ரூ. 25.00

## மருதாணி

டைரக்டர் மகேந்திரனின் நாவல்.

விலை ரூ. 18.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர்., சென்னை - 600 017.)

# திருமதி கோபா நாராயண்



## வாரிசாகப் பெற்ற

## தங்க நகைக

## புற்றுநோய்.

இதில் வேதனை என்னவென்றால், -
யும் 20 ஆண்டுகள் கழித்துத் தன் அன்பு மகளுக்கு அளித்துவிடுவார், மார்பகப்
எல்லா பெண்களுக்குமே — சாதி மத பேதமின்றி — இந்தக் கொடிய நோய் வரச்
கூடுதல் எடை • குழந்தை இல்லாத நிலை • குடும்ப வாழ்க்கை 30 வயதுக்கு மேல் தொ
போது முறையாக மேம்மோகிராம் பரிசோதனை செய்து வந்தால், இந்த அ
சிறுகாயங்கள் (lesions), கால்சிபிக்கேஷன்ஸ் (calcifications) மற்றும் லூசென்ஸீஸ் (lu
பாலும், இதைத் தொடக்கநிலையிலேயே கண்டுபிடித்துவிட்டால், அது முழுமையா

இன்னொரு முக்கியமான விஷயம், மேம்மோகிராபி என்பது, கிட்டத்தட்
செல்வ மகளுக்குச் சீதனமாக நல்லவற்றை மட்டுமே வழங்க வேண்டும். அதை நீ
கட்டும். நீங்கள் உங்கள் பெண்ணுக்கு வழங்குவதைத்தான், தொடர்ந்து அவளு

மக்கள் நலனை முன்னிட்டு வெளியிடுவோர் - அப்போலோ ஹாஸ்பிட

யது 42, பாட்டியிடமிருந்து

ரு தென்னந் தோப்பு,

புத்துடன் மார்பகப்

யப் பெண்களையும் போலவே, இவரும் தான் வாரிசாகப் பெற்ற எல்லாவற்றை
உள்பட, ஒன்றை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். 40 வயதுக்கு மேற்பட்ட
ரும் காரணங்களால் இந்த நோய் தாக்கக் கூடிய அபாயம் இரு மடங்காகிறது:
அல்லது பாட்டிக்குப் புற்றுநோய் இருந்திருப்பது. மாறாக, 40 வயதுக்குமேல் அவ்வப்
வாகக் குறைந்துவிடும். சுய பரிசோதனை அவசியம் என்றாலும்கூட, மார்பகத்தில்
வற்றைக் கண்டுபிடிக்க ஒரே வழி மேம்மோகிராபி மட்டுமே. அதிலும் பெரும்
ய வழி வகுக்கும். அத்துடன் அறுவை சிகிச்சையின் வேதனையும் இருக்காது.
-ரே எடுப்பது போலத்தான். இதற்கு ஆகும் நேரம் 15 நிமிடங்கள்தான். உங்கள்
க் கொள்ள இந்த நேரத்தை ஒதுக்குவது, முடியாத காரியமா என்ன? நினைவிருக்
களுக்கும் பேத்திகளுக்கும் வழங்கப் போகிறாள்...

ல்ஸ் லேன், கிரீம்ஸ் ரோடு பிரிவு, சென்னை 600 006 போன்: 477447



## கூடி

காலை எட்டு மணியில் இருந்தே சென்னை சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சித் திடல் கலகலப்பாக இருப்பது என்பது அபூர்வம். கோலப் போட்டிக்குக் கூட பத்து மணி வாக்கில் தான் வர ஆரம்பிப்பார்கள். ஆனால் மங்கையர் மலரும் தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகமும் இணைந்து 24.2.93 அன்று நடத்திய மகளிர் மேளாவில் காலை எட்டு மணிக்கே பெண்கள் திரள ஆரம்பித்து விட்டார்கள்.

இதற்கு முதல் நாளே போஸ்டர் போட்டி கல்லூரி பள்ளி மாணவிகளுக்காக நடத்தினோம். நடுவர்களாக நாயுடு ஹாலைச் சார்ந்த கவிதா நாயுடுவும், எழுத்தாளர் கிரிஜா ராகவனும் வந்திருந்தார்கள்.

மகளிர் மேளா பெண்களுக்கான ஒரு அருமையான கூட்டு மையமாக அமைந்தது என்றுதான் சொல்ல வேண்டும். அனைத்துத் தரப்புப் பெண்களும் இங்கு ஒன்று சேர்ந்தார்கள். தனியே வீட்டில் பொம்மை, பாவாடை, நைட்டி முதலியவற்றைத் தயாரித்து விற்கும் பெண்மணிகள், சங்கங்கள் அமைத்துப் பல புதுமைகளைச் செய்யும் பெண்கள் ஒருபுறம். நைட்டி வேலை என நுணுக்கமான கைவேலைப்பாடுதிறன் கொண்ட பெண்மணிகள் ஒரு பக்கம். சட்டவுதவிக்குழு, மருத்துவ உதவிக் குழு, சிறு சேமிப்புத் துறைக் குழு என ஒரு பக்கம். எரிபொருள் சிக்கனம் பற்றிக் கூற ஒரு குழு. பிராணிகளை நேசியுங்கள் என ப்ளூகிராஸ். உங்கள் சக மனிதர்களை நேசியுங்கள் என ரெட்கிராஸ்.

இப்படியாக மகளிர் மேளாவுக்கென கொடுக்கப்பட்ட பந்தல் நிரம்பி வழிய ஆரம்பித்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பெண்களுக்கு அன்று இலவசமாக ஸ்டால்கள் கொடுக்கப்படும் என





## மகிழ்ந்தோம்!

அறிவித்து இருந்ததால் விண்ணப் பங்களின்படி எழுபதுக்கும் மேற் பட்ட ஸ்டால்கள் அமைத்துக் கொடுக்கப்பட்டன. அதே போல சேவை நிறுவனங்களுக்கும், அரசுத் துறை நிறுவனங்கள் பல வற்றிற்கும் கடிதங்கள் மூலம் தொடர்பு கொண்டோம். 'பெண்க ளின் நலன் வேண்டி மகளிர் மேளா நடத்தப்படுவதால் மகளிருக்காக நீங்கள் செய்யும் சேவைகளை இங்கு கூறலாம். மற்றும் நேரடி யாகச் சேவையும் செய்யலாம் என்று அரசுத் துறையைச் சார்ந்த நிறுவனங்களுக்கும் எழுதினோம். அரசாங்க மருத்துவமனையைச் சார்ந்த மருத்துவக் குழு அமைக் கப்பட்டது. நூற்றுக்கும் மேற்பட்ட பெண்களுக்கு இலவச ஆலோ சனை, பரிசோதனை வழங்கப் பட்டன. சட்டவுதவி, தொழில் ஆலோசனை, சிறுசேமிப்பு ஆலோ சனை உதவி, இந்தியன் வங்கி கடனுதவி பற்றி ஆலோசனை என ஆங்காங்கே அமைக்கப்பட்டிருந்த முகாம்களில் பெண்கள் மொய்த் தனர்.

இலவசமாக இரத்தப் பரி சோதனையும் செஞ்சிலுவைச் சங் கத்தினரால் நடத்தப்பட்டது. எரி பொருள் சிக்கனம் பற்றி நிறைய படங்கள் அடங்கிய அட்டைகள், விளக்கங்கள். இது போதாது என்று கலை நிகழ்ச்சிகள் நடுவே நாங்களும் பேசுகிறோம் என விண்ணப்பம் வேறு. 'இந்தியத் தரக் கட்டுப்பாடு நிறுவனம்' (ஐ.எஸ்.ஐ.) அற்புதமான விளக் கங்களைச் சொல்லிக் கொண் டிருந்தார்கள்.

விழாவில் கலந்து கொண்ட ஒவ்வொருவரும் ஏதோ தங்கள் வீட்டுத் திருமணம் போல உற்சாக மாக இருந்தது மனதுக்கு நிறை வைக் கொடுப்பதாக இருந்தது.

இத்தனைக்கும் நடுவே காலை பதினொரு மணியிலிருந்து கலை நிகழ்ச்சிகள் ஆரம்பித்தன.





மஞ்சளும் சிவப்புமாக வண்ண உடையணிந்த இராணி மேரி கல்லூரி பெண்கள் பாண்டு வாத்தியம் முழங்க, 'விஸ்ராந்தி'யைச் சேர்ந்த வயதான பெண்மணிகள் நடக்க, சில்ட்ரன் கார்டன் ஸ்கூலைச் சார்ந்த சாரணியர் மாணவிகள் விறுநடை போட அழகான மார்ச் ஃபாஸ்ட்! ஒன்பது வயது சிறுமி முதல் தொண்ணூறு வயது பாட்டி வரை ஒன்றாக நடைபோட்டது மகளிர் மேளாவிற்கே அழகிய விளக்கம் கொடுப்பது போல அமைந்திருந்தது. சப்-இன்ஸ்பெக்டர் வசந்தியின் தலைமையில் பெண் காவல் துறையினர் முத்தாய்ப்பாக மார்ச்ஃபாஸ்ட்டில் இருந்தனர்!!

பள்ளிப் பாடநூல் நிறுவனத்தின் மேலாண்மை இயக்குநர் திருமதி சுலோசனா சம்பத் குத்துவிளக்கு ஏற்ற, சுற்றுலா வளர்ச்சித் துறைச் செயலர் சுரியாவி உடனிருந்து மகிழ அழகாக விழா துவங்கியது.



(தொடர்ச்சி 113 - ஆம் பக்கம்)





# MYTHILI'S THE SCHOOL OF BEAUTY CULTURE & HAIR DRESSING

MYTHILI'S BEAUTY CLINIC
14, RAMS BAZAAR, 3, PRAKASAM ROAD,
(PANAGAL PARK NORTH) T. NAGAR,
MADRAS - 600 017.
PHONE 882863

இல்லத்தரசிகளுக்கு, பள்ளி, கல்லூரி மாணவிகளுக்கு கோடை விடுமுறை காலப் பயிற்சி அளிக்கப்படும். எந்த வயதினரும் படிக்கலாம்.

1. முறைப்படி பயிற்சி பெற்று அழகுக் கலை நிலையம் துவங்க, கட்டணம் ரூ 5000/- காலம் - 1 மாதம்; 60 வகுப்புகள் (இதில் அழகுக் கலை, சிகையலங்காரம், முடி வெட்டுதல் அடங்கும்.)

2. அழகுக் கலை மட்டும் பயில ரூ 1500, சிகையலங்காரம் மட்டும் பயில ரூ 1500, முடி வெட்டுதல் மட்டும் பயில ரூ 2500/-

3. தன்னைத் தானே அழகுப்படுத்துதல் பற்றிப் பயில ரூ 1000/-

4. ஹெர்பல், கெமிக்கல் கிரீம்கள், ஷாம்பூ போன்ற 20 வகையான Product கள் தயாரிக்க, கட்டணம் ரூ 2000, 3 நாட்கள் வகுப்புகள்.

5. எலெக்ட்ராலிஸிஸ் பயில ரூ 1800, நறுமண சிகிச்சை முறை பயில ரூ 1500. வலியின்றி காது குத்த ரூ 1000. இது போல பல அட்வான்ஸ் கோர்ஸ்கள் நடைபெறும்.

மைதிலீஸ் நிறுவனம் கீழ்கண்ட சிகிச்சைகளும், ஆலோசனைகளும் அளிக்கின்றார்கள்.

1. விடியோ மேக்கப், (இயற்கையாக தோற்றம் அளிக்க) கல்யாணப் பெண்களுக்கு புதுவிதமான தலை அலங்காரம் செய்தல் எங்களது சிறப்பு.

2. முடியை புதுவிதமாக வெட்டுதல், முடி கொட்டுதல், பொடுகு தொல்லை, இளநரையை தடுக்க, முடிக்கு ஹெர்பல் சாயமிடுதல், மைதிலீஸ் பேஷியல், அரோமா, தெர்மோ பேஷியல்ஸ், 'இயற்கை' முறையில் இளைக்க வைத்தல், முகத்தில் உள்ள தேவையில்லாத முடியை எலக்ட்ராலிஸிஸ் வலியின்றி குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் காது குத்துதல், புருவத்தை பெரிதுபடுத்துதல்.

கை, கால்களில், உடம்பில் உள்ள கருக்கல்களை போக்குதல், "Thermo herb wax treatment" புதிய முறையில் அறிமுகப்படுத்தி உள்ளோம்.

கை, கால்கள் இடுப்பு எந்தப் பகுதியில் வலி இருந்தாலும், எந்த வயதினருக்கும் "Aroma treatment" மூலம் சிகிச்சைகள் தருகின்றோம். இதுவும் புதிய முறை. தென்னிந்தியா, மலேசியா, துபாய் போன்ற இடத்தில் உள்ள மாணவிகள் மிக அதிக அளவில் பயற்சி பெற்று உடனடியாக அழகு நிலையம் துவங்கி வெற்றிகரமாக நடத்துவது எங்களின் திறமையான பயிற்சிக்கு சிறந்த சான்று. வெளிநாட்டு மாணவியருக்கு முன்னுரிமை அளிக்கப்படும். ஹாஸ்டல் வசதி உண்டு.

சென்ற பிரிவில் பயிற்சி பெற்ற அயல்நாட்டு மற்றும் வெளிமாநில மாணவிகள்.



Mrs Radhabai
Selangor,
West Malasia



Mrs Ganeswari
Thiagarajan
Penang Malasia



Mrs Jayashree
Kolalupur,
Malasia.



Miss Shanthi
Coorg,
Mysore

குறுநாவல்

சுசன்

## 1

மாப்பிள்ளை வீட்டில் தான் சாந்தி முகூர்த்தம் என்று முடிவாயிற்று.

அறைக்குள் இரட்டைக் கட்டில் இருந்தது. கட்டிலின் மேல் மெத்தை இருந்தது. மெத்தையின் மேல் மலர்கள் படுத்திருந்தன. மெத்தையை ஒட்டினது மாதிரி டீபாய் இருந்தது. அதன் மேல் பழங்கள் இருந்தன.

நந்தினியின் கண்கள் ஒரு சுற்றில் இவற்றையெல்லாம் பார்த்தது. சட்டென்று கீழி றங்கி தரையோடு பரவி யோடிற்று. ஓடின நீளத் தரையின் முகட்டில் வெளீரென்ற பாதம் தெரிந்தது. பாதத்தை மறைத்துக் கொண்டு வேஷ்டி. பட்டு வேஷ்டி. ஃபேன் காற்றில் அசைந்தது.

அவளால் அதற்கு மேல் பார்க்க இயலவில்லை. தேவா... பெயரை ஒரு முறை உச்சரித்துக் கொண்டாள். பெயர் சுகமே மனசுக்குள் ஜிலுஜிலுவென நீர்ப்பாவல் போல் ஓடிற்று.

சாத்தின கதவுக்குப் பின்னால் இன்னும் பெண்களின் இதமான கேலிச் சிரிப்பு ஓயவில்லை. அந்தச் சிரிப்பினால் வருகிற நாணம் ஒரு பக்கம். 'பாத்து நடந்துக்கணும்மா. ரொம்ப மொரண்டு புடிக்கக் கூடாது. மாப்பிள்ளை சொல் பேச்சு கேக்கணும்...' அம்மாவின் எச்சரிக்கை மறுபக்கம். எல்லாவற்றிற்கும் மேலாய் ஒரு புது மனிதனை தாலி கட்டும் போது கொஞ்சம், அக்கம் பக்கம் திரும்பிப் பேசுகிற போது கொஞ்சம் எனப் பார்த்த ஆணைத் தனியே நேராய் சந்திக்கப் போகிறோம் என்கிற கிலி இன்னொரு பக்கம்...

''புருஷன் தொடறது கூடப் பெரிசில்லடீ. பால் டம்ளரோட உள்ளே நுழைஞ்சு, போறதா நிக்கறதான்னு குழம்பி நிக்கறமே அதான்டீ அவஸ்தை...''

தோழி இன்று காலை சொன்னது இப்போது நிஜமாய் எதிரே நடப்பது போலிருந்தது. முதலிரவு இத்தனை சங்கடமா. சுகமென்றார்களே...! சங்கடம் தான் சுகமோ...

''ஏன் நின்னுட்டே... வா நந்தினி...''

ஆண் குரல் அழைக்க உத்தரவுக்குக் காத்திருந்தவள் போல மெள்ள நடந்து கட்டிலருகே போனாள். பால் டம்ளரை டீபாயின் மேல் வைத்தாள். அவன் முகம் பார்க்கக் கூச்சப்பட்டு பாதம் பார்த்தாள். சட்டெனக் குனிந்து அவன் கால் தொட்டு நமஸ்கரித்தாள்.

தேவா அவள் புஜம் பற்றினான். தூக்கி நிறுத்தினான். அவள் தலை இன்னும் குனிந்திருக்க மோவாய் தொட்டு நிமிர்த்தினான். அவள் வெட்கமாய் நிமிர்ந்தாள்.

கட்டை மீசை. சந்தன முகம். மயங்கின கண்கள். தெளிதெளியாய் சிகை... ஒரு நொடியில் ஆணின் அருகாமை கம்பீரம் உணர்ந்தவளாய் தலைதாழ்த்தாள். எத்தனை அழகு. எத்தனை அழகு கனவா... கனவா... நான் காண்பதென்ன கனவா...

உள்ளே வார்த்தை ஓடிற்று.

தூக்கி நிறுத்தியவன் அவளை மெள்ள அணைத்துக் கொண்டான். அவள் உடல் லேசாய் சிலிர்த்துக் கொண்டது. அந்த சிலிர்ப்புக்கு இதமாய் அவன் நெஞ்சு மீதே சாய்ந்து கொள்ளலாம் போலிருந்தது.

இருந்தாலும் அம்மா சொல்லியிருந்தாள்.

''மொதல்ல நமஸ்கரிச்சிடு. அப்புறம் பால் குடுத்திடு. பேசிட்டே இருந்து பாலை ஆற வெச்சிடக் கூடாது. இளஞ்சூட்டில் குடிக்கணும். அவர் குடிச்ச பாதி உனக்கு.''

''பால் சாப்பிடுங்க...''

டம்ளரை நீட்ட அதை அவசரமாய் வாங்கிப் போய் வாய் பழத் தட்டருகே வைத்தான்.

''இப்ப இதுக்கா அவசரம். மொதல்ல பழம். அப்புறம் பால். வாடீ என் பழக் குலையே...''

அவன் இழுத்து அணைக்க அவள் கை நெஞ்சில் குத்தியது.

''கையை இப்படிக் கொண்டா நந்தினி...'' நெஞ்சில் இடித்த அவள் இடது கையைப் பிரித்து நேராக்க முற்பட அது பிரிபடாமல் முரண்டு பண்ணியது.

''என்னா மொரண்டு பண்றே. விடு வனா...'' செல்லமாய் கொஞ்சியபடியே அவள் கையை இன்னும் பலமாகப் பற்றியிழுத்தான். அது முரண்டு பண்ணியது.

''கையை எடு நந்தினி'' முனகினான்.

''முடியாதுங்க.''

''ஏன் முடியாது...'' கண் விரித்தான்.

''வராதுங்க.''

''ஏன் வராது?'' தலை உயர்த்தினான்.

''பிறவியிலேயே இப்படித்தான்...''

அவள் சொல்ல விருட்டென்று விலகி உட்கார்ந்தான். முகம் இருண்டிருக்க அசிங்கத்தைத் தொடுவது போல அவளின் இடது கையை இழுத்துப் பார்த்தான். அது பிரியாமல் முழங்கை உடைந்தவன் மாவுக் கட்டு போட்டிருப்பது போல 'எல்' வடிவத்தில் அசையாது நின்றிருந்தது. அவன் முகம் சடசடவென வேர்த்தது. சட்டென எழுந்து நின்று கத்தினான்.

''ஏமாத்திட்டே. என்னை ஏமாத்திட்டே...''

''இல்லீங்க. ஏமாத்தலையே. இது உங்களுக்கு முன்னமேயே தெரியாதா. சொல்லியாச்சுன்னு சொன்னாங்களே. மாப்பிள்ளைக்குப் பெரிய மனசு. ஒரு கை ஊனமாயிருந்தா என்ன, அதுவா வந்து சோறு போடுதுன்னு நீங்கச் சொன்னதா அம்மா சொன்னாங்களே...''

''எவன் சொன்னான். கூப்புடுடீ உங்கம்மாவை...''

''இப்ப வேண்டாங்க. காலையில பேசிப்போம்.''

''காத்தாலயா, அதுவரைக்கும் இந்த மொண்டிக் கையப் பாத்துட்டே உக்காந்திருக்கச் சொல்றியா. முடியாதுடீ. எனக்கு இப்பத் தெரிஞ்சாகணும். யார் யார் என்னைத் திட்டம் போட்டு ஏமாத்தினதுன்னு தெரிஞ்சாகணும்.''

''வேண்டாங்க. உங்களுக்குக் கோபம் இருந்தால் என்னையத் திட்டுங்க. கேட்டுக்கறேன். அடிங்க. பொறுத்துக்கறேன். இந்நேரத்துல எல்லாரையும் கூப்பிட்டுப் பிரச்னையைப் பெரிசு பண்ண வேண்டாம்.''

''நவுரு மொதல்ல.''

''வேண்டாங்க...'' அவள் அவன் கால் பற்ற உதறினான்.

கதவு திறந்து வெளியே முகம் இருண்டு வருபவனைப் பார்த்ததும் கூடத்தில் படுத்திருந்த அத்தனை ஜனங்களும் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தன. அம்மா ஓடி வந்தாள்.

''என்னடா ஆச்சு...''

''இவளுக்குக் கை ஊனம்னு உனக்குத் தெரியுமா...''

''கை ஊனமா... அடக் கடவுளே...'' அம்மா அதிர்ந்

தான்.

''என்னாங்க இங்கே வாங்களேன். இந்தப் பொண்ணுக்குக் கை ஊன

மாம்...''

அம்மா அழைக்க அப்பா ஓடி வந்தார்.





சப்பாத்தி குருமா செய் என்று என் மகன் சொன்னான். சப்பாத்திக்கு மாவு பிசைந்து வைத்தேன். காய்கறிகளை கவரிலிருந்து எடுத்துப் பார்த்த போது 2 காரட், 1 துண்டு பீட்ரூட்தான் இருந்தன. பக்கத்து வீட்டிலிருந்து 2 பப்பாளிக்காய்களை வாங்கி நறுக்கிப் போட்டு பட்டை, சோம்பு, தேங்காய் அரைத்து விட்டு குருமா செய்தேன். குழந்தைகள் பள்ளி விட்டு வந்து சாப்பிட்டுவிட்டுக் குருமாவிற்கு ஏகமாகப் பாராட்டினார்கள்.

– கமலா மூர்த்தி

"உங்ககிட்டே ஏற்கெனவே சொல்லியிருக்காங்களா. இவளுக்கு ஒரு கை ஊனம்னு..."

"ஐயோ... சொல்லலையே. சத்தியமாத் தெரியாதுடா தேவா."

"அப்புறம்... எப்படித் தெரியாமப் போச்சு. ஒரு தடவைக்கு நாலு தடவையா பொண்ணைப் போய் பாத்துட்டு வந்தீங்களே. எப்படி இதை கவனிக்காமப் போனீங்க" தேவா அலறினான்.

"தெரியலியேடா. அத்தனை சூட்சமமா பொண்ணை முழுசாப் பரிசோதிக்க முடியுமா. பேசச் சொல்லலாம் குரல் தெரிஞ்சுக்க. நடக்கச் சொல்லிப் பாக்கலாம் நிலம் அதிர நடக்குதா இல்லையான்னு தெரிஞ்சுக்க. உயரம் பார்க்கலாம் உனக்குத் தோதா இருக்குமான்னு தெரிஞ்சுக்க. இப்படிப் புடவைக்குள்ளே கையைப் பூத்திகிட்டு நொண்டி வெளையாட்டு ஆடுவான்னு யார் கண்டது" - அம்மா உள்ளங் கையடித்து நின்றாள். கண் ஜ்வாலை கக்கியது.

"காலையிலே மாலை மாத்தும் போதெல்லாம் கை வந்துச்சே" யாரோ கேட்டார்கள்.

"கை வருங்க. குடம் தூக்கித் தண்ணியெல்லாம் எடுப்பேன்."

"பேசாதடீ. திட்டம் போட்டு சதி பண்ணிட்டு இப்ப சால்ஜாப்பு வேலையா பண்றே. எங்கே இவ அம்மா. கூட வந்தவங்க யாரும் இல்லையா?"

"போயிட்டாங்க. காலையிலே வந்து கூட்டிட்டுப் போறோம்னு சொல்லிட்டுப் போயிட்டாங்க."

"அதானே பார்த்தேன். பெத்த புள்ளையை இங்க விட்டுட்டு ஆத்தாளும், தங்கச்சியும் வீட்டுக்கு ஓடுதுகளேன்னு. எப்படியோ கன்னி கழிஞ்சாப் போதும் காரியம் பண்ணிடலாம்னு திட்டம் போட்டுருக்காளுகடா தேவா..." அம்மா கண் உருட்டி விழித்தாள்.

"போனா விட்ருவனா. உடனே வரச் சொல்லுங்க. ரெண்டுல ஒண்ணு பாத்தே ஆகணும். ம்..."

தேவா அதிர சப்தமிட யாரோ இரண்டு பேர் ஸ்கூட்டர் எடுத்துக் கொண்டு நந்தினியின் தாய் வீட்டுக்கு சீறிக் கொண்டு போவது கேட்டது.

தேவா சட்டை போட்டுக் கொண்டு அங்கிருந்து வெளியேற சுற்றி நின்றிருந்த கூட்டம் மெள்ள அவளை நெருங்கியது. ஒரு பெண் அவளின் இடது கையை மெள்ள இழுத்துப் பார்த்தது. அது பிரியாமல் இரும்புத் தகடு போல் நிற்க பயம் கொண்டது போல் விலகியோடியது.

எல்லோர் கண்களும் அவளையே சூன்யமாய்ப் பார்த்துக் கொண்டிருக்க நந்தினிக்குத் தான் திடீரென அனாதையானது போலிருந்தது. தான் அடக்கியும் இயலாமல் கண்ணீர் முகத்திட்டு வழியே வழிந்தது. ஒவ்வொரு சொட்டாய் இடதுகையின் மேல் விழத் தொடங்கியது.

## 2

"நான் உங்களுக்கு என்ன துரோகம் செஞ்சேன். ஏன் என்னை ஏமாத்தினீங்க..."

தேவா கேட்க நந்தினியின் அப்பா மௌனமாய் உட்கார்ந்திருந்தார்.

"எம் பையனுக்கு என்ன குறைச்சல். அழகில்லையா, வசதியில்லையா, நல்ல உத்தியோகமில்லையா என்ன இல்லை. எதுக்குத் திட்டம் போட்டு ஒரு மொண்டிய எம் மகன் தலையிலே..."

"மொண்டின்னு சொல்லாதீங்க. தயவு செஞ்சு சொல்லாதீங்க" - அப்பா கண்கலங்கினார் தேவாவின் அம்மாவைப் பார்த்து.

"கை வராதவளை வேற எப்படிச் சொல்றது. பூரணகும்பம்னு கூப்பிடறதா..." தேவாவின் அம்மா எகிறினாள்.

''அது இதுன்னு கண்ட பேச்செல்லாம் வேண்டாம். எதுக்காக இந்த ஏமாத்து வேலை பண்ணினீங்க'' தேவா கேட்டான்.

''ஏமாத்தலே மாப்பிள்ளை...''

''மரியாதை வேண்டாம். பதில் சொல்லுங்க.''

''தரகர்கிட்டே சொல்லியிருந்தோமே. எங்கே நந்தினிக்கு வரன் பார்த்தாலும் அவளுக்கு இருக்கற குறை பத்தி சொல்லிருங்கன்னு. உங்ககிட்டேயும் இது பத்தி சொல்லிட்டதாச் சொன்னாரே. அவர் சொன்னதுக்கப்புறமும் எதுக்கு நாமளும் சொல்லணும்னு விட்டுட்டோம்.''

''ஆஹா. நல்லாயிருக்கே கதை.''

''கதையில்லே சம்பந்தி. நெஜம். முழு நெஜம். சூடம் கொடுங்க சத்தியம் பண்றேன்'' - அப்பா கை நீட்டினார்.

''எங்கிட்டே தரகர் இது பத்தி ஒண்ணும் சொல்லலே.''

''எங்கிட்டேயும்தான். முப்பது பவுன் நகை. சீர் சௌத்தி செய்வாங்கன்னு சொன்னாரு. போதும்னுட்டேன்.'' - தேவாவின் அம்மா கைவிரித்தாள்.

''தரகர் எங்கே...'' தேவா கேட்டான்.

''காணோம். தேடீட்டு வந்துட்டேன்.'' ஸ்கூட்டர் எடுத்துக் கொண்டு போன பையன் சொன்னான்.

''இப்ப அவர் எதுக்குங்க. நடந்தது நடந்து போச்சு. சரியோ தப்போ கல்யாணம்னு ஒண்ணு ஆயிருச்சு. நடந்ததை மாத்த முடியுமா. எல்லாத் தப்புக்கும் சேர்த்து நான் உங்ககிட்டே மன்னிப்பு கேட்டுக்கறேன்'' - அப்பா எல்லோரையும் பார்த்து கை கூப்பினார்.

''நீங்க பயப்படற அளவுக்கு நந்தினிகிட்டே ஒரு குறையும் இல்லே. ஒரு பேச்சு எதிர்த்துப் பேச மாட்டா. வீட்டு வேலை அத்தனையும் சலிக்காம செய்வா. அந்தக் கையால குடம் தூக்கித் தண்ணி கூட எடுப்பா...''

''ஆனா ரோட்டுல போறப்ப சேலைக்குள்ளே கையை மறைக்கப்பா...'' தேவா நந்தினியின் அம்மா பேச்சுக்கு நடுவே குறுக்கிட்டான்.

''அது கூட ஒரு கூச்சத்தாலதான் தம்பீ. போகப் போக அதுவும் சரியாயிரும். இது ஒரு பெரிய குறையா சொல்லுங்க. ஊர்ல எத்தனை பேர் இப்படியில்லே... ஆணுக்குப் பெண்ணும் பெண்ணுக்கு ஆணும் விட்டுக் கொடுத்துப் போறதில்லையா.''

''எவனோ எப்படியோ நடக்கலாம். என்னால அப்படி நடக்க முடியாது. இந்த மொண்டியக் கூட்டீட்டு வெளியே போக

---

# இம்மாத இல்லத்தரசி

## சமையல் கூப்பன்

பொருள் : விடுமுறை நேர உணவு கடைசி தேதி : 15.4.'93

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

முடியாது. நாலு பேர்கிட்டே என் பொண்டாட்டின்னு காட்டிக்க முடியாது. பேசாம இவளைக் கூட்டிட்டுப் போயிருங்க.''

''நீங்க சொல்றது...'' நந்தினியின் அப்பா தளர்வாய் தேவாவைப் பார்த்தார்.

''நடந்தது கல்யாணமில்லே. ஏமாத்து வேலை. என்னால ஏத்துக்க முடியாது. இவளைக் கூட்டிட்டுப் போயிருங்க. நிரந்தரமா இங்கிருந்து கூட்டிட்டுப் போயிருங்க...''

''மாப்பிள்ளே...'' அப்பா அலறினார்.

''சத்தம் வேண்டாம். கூட்டிட்டுப் போயிருங்க. நீங்க அழுதாலோ அடம் புடிக்கிறதாலோ இங்கே ஒண்ணும் நடந்துடாது.''

''மாப்பிள்ளை இப்படிப் பேசறாரே. சம்பந்தி நீங்களாவது எடுத்துச் சொல்லக் கூடாதா?'' நந்தினியின் அப்பா தேவாவின் அப்பாவைப் பார்த்தார்.

''இது அவன் சம்பந்தப்பட்ட விஷயம். நான் ஒண்ணும் சொல்ல முடியாது.''

''எதுக்கு மழுப்பலாப் பேசறீங்க. இனி இவ இங்கே இருக்கக் கூடாதுன்னு வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டா சொல் றதை விட்டுட்டு. இதோ பாருங்க, என் மகன் முடிவுதான் எங்க முடிவும். தயவுசெஞ்சு உங்க புள்ளையைக் கூட் டிட்டுப் போயிருங்க.''

மறுத்தும் மன்றாடியும் எத்தனை பேசிய போதும் எதுவும் எடுபடவில்லை. நந்தினி தன் பெட்டி படுக்கைகளோடு திரும்பவும் புகுந்த வீட்டுக்குப் புறப்பட்ட போது காலை சரியாகக் கூட விடியவில்லை.

ஆட்டோவில் வீடு வந்து இறங்கிய போது எதிர் மரத்துக் காக்கை 'என்ன அதுக்குள்ளே திரும்பி வந்துட்டே' என்பது போல ஒற்றைத் தலைசாய்த்துப் பார்த்தது.

## 3

**பி**றந்த வீடு பெண்ணுக்கு சுகம்தான் தாலி கட்டும் வரை. தாலி கட்டி கணவன் வீட்டிலிருந்து வெகு நாள் கழித்து வரும் போது பிறந்த வீடு காண சுகம் வரும். வீட்டு வாசலில் கால் செருப்பு கழற்ற மனக உடலை உந்திக் கொண்டு உள்ளே ஓடும்.

பாத்ரூம் திறந்து பார்த்து விட்டு வரும். கழிவறை சுத்தமா எனப் பார்க்கும். வீட்டு மூலையில் குப்பை தேங்கிக் கிடக்கிறதா என அலசும். துவைக்கிற கல், ஆட்டுகிற கல், அம்மி, குழவி என ஒவ்வொன்றாய்ப் பார்த்து முன்னதுக்கும் பின்னதுக்கும் எடை போடும். ஏன் வீடு இப்படியிருக்கு என அலசும். அக்கம் பக்கத்து வீட்டைத் தானே கூப்பிட்டு நலம் விசாரிக்கும். அவர் இருக்காரே... எவக் கணவன் பெருமை பேசும்.

இதுவெல்லாம் சராசரியாய்த் திருமண மாகிப் பிறந்த வீடு வருகிற பெண்ணின் நிலை.

நந்தினிக்கு இப்படியெதுவும் சொல் லிக் கொள்ளும்படியாய் அமையாது போயிற்று.

திருமணத்திற்கு வராதவர்கள் மறுநாள் தம்பதிகளைப் பார்க்க வீட்டுக்கு வந்தார் கள். பணமும், பாத்திரங்களுமாய் வந்து நந்தினியைப் பார்த்து அன்பளிப்பு கொடுத் தார்கள். எங்கே மாப்பிள்ளை என்றார்கள்.

அவள் பேசாதிருந்தாள். அவளுக்குப் பதிலாய் அம்மா பேசினாள். அப்பா எடுத் துரைத்தார். சேதி கேட்ட சனம் வாய் குலைந்தது.

''இது நல்லாயிருக்கே. தாலி கட்டிட்டு வேண்டாம்னு சொன்னா ஆகுமா...''

''ஆயிரம் தப்பு ஆம்பளைகிட்டே இருக்கலாம். அதெல்லாம் பொண்டாட் டியா வர்றவ பொறுத்துக்கணும். கை கொஞ்சூண்டு ஊனமாம். அதுக்காக வேண்டாம்னு யாராவது தொரத்துவாங் களா... சே!''

''நீங்களும் சரின்னு கூட்டிட்டு வந்துட் டீங்களாக்கும். முடியாது, இங்கதான் இருப்பான்னு விட்டுட்டு வர வேண்டியது தானே.''

''இவங்களையெல்லாம் சும்மா விடக் கூடாதுங்க. கேஸ் போட்டு உள்ளே தள்ள ணும்.''

வீடு விவாத மேடையாகிப் போனது. நந்தினி எல்லோர் பேச்சையும் அமைதி யாகக் கேட்டாள். கோர்ட்டில் வழக்குப் போடலாம் என்று அழைத்தவர்களைத் தடுத்தாள்.

''ஏன் நந்தினி வேண்டாம்ங்கறே. இதுல ஜெயிக்க மாட்டோம்னு நெனைக்க றியா?''

''ஜெயிச்சு என்ன பண்ணப் போறேன். மறுபடியும் அந்தக் குடும்பத்துக்குள்ளதான் போகணும். என்னைப் பத்தி நூறுவிதமாப் பேசினவங்க கூடத்தான் இருக்கணும். வழக்குப் போட்டதால வாழ்க்கை கெடைக்கும். சந்தோஷம் கெடைக்குமா?''

குடும்பம்ங்கிறது வெறும் புருஷன் மாமனார் மாமியாரில்லே. அவங்களோட சேர்ந்த சந்தோஷம். அது கெடைக்காதுன் னதுக்கப்புறம் மறுபடியும் அதையே நெனைக்கறது தப்பு. அர்த்தமில்லாதது.''

''அப்பஎன்னா உன் முடிவு.''

''விட்டுடுங்க. நான் முன்ன மாதிரியே இருந்துடறேன். இந்த வீட்ல என்ன குறைச்சல். அம்மா, அப்பா, தங்கை, வேலை, சோறு, தூக்கம் இது போதும்...''

ஆரம்பத்தில் அவள் முடிவு வீட்டுக்குப் பிடித்துதான் இருந்தது. பழசு மறந்து புதிதாய் சலனமில்லாமல் நந்தினி வாழ் வது அவர்களுக்குப் பிடித்துதான் இருந்தது.

ஆனால் காலம் எல்லாவற்றையும் புரட்டிப் போட்டு விடுகிறது. தன் வேகத் துக்கு தன் பாதைக்குத் தடையாய் இருப்ப வற்றைப் புரட்டிப் போட்டு விடுகிறது. இது அப்படியல்ல; இப்படித்தான் என்று புது வேதம் எழுதுகிறது.

''பொண்ணை எங்களுக்குப் பிடிச் சிருக்குது. நல்ல நாள் பார்த்து எல்லாம் பேசி முடிக்கலாம். ஆனா ஒரு சந் தேகம். கேட்டாத் தப்பா நெனைக்க மாட் டீங்களே. உங்க மொதல் பொண்ணு ஏன் கல்யாணம் ஆகியும் வீட்டோடயே இருக் குது...''

சமையலறை, குழந்தைகளின் புத்தக அலமாரி போன்றவற்றில் நாம் பேப்பர் அல்லது பிளாஸ்டிக் பேப்பர் போட்டு பொருட்கள், புத்தகங்களை அடுக்கி வைப்போம். அவ்வாறு நாம் போடும் பேப்பர்களை (ஓரங்களை) இதுபோல வளைவாக வெட்டிப் போட்டால், அலமாரிகள் கூடுதல் கவர்ச்சியுடன் தோற்றமளிக்கும்.

– கமலா மூர்த்தி





தையல் சாமான்கள் வைக்கும் பெட்டியில் ஒரு சிறிய காந்தத் துண்டை (மேக்னட்) வைத்துக் கொண்டால், தைக்கும் போது ஊசி சோபா விலோ, மொசைக் தரையிலோ விழுந்து விட்டால் சுலபமாகப் பொறுக்கி எடுப்பதற்கு உதவியாக இருக்கும்.

- உஷா



அப்பா கேள்வி கேட்ட பெண் வீட்டார்களை மௌனமாய்ப் பார்த்தார். அவருக்குப் பொய் சொல்ல விருப்பமில்லை. நந்தினிக்கு நடந்தது முழுவதும் சொன்னார். எல்லாவற்றையும் கேட்டு விட்டுப் போய் பதில் எழுதுகிறோம் என்று சென்றவர்களிடமிருந்து வெகு நாளாகியும் ஒரு பதிலும் இல்லை. விசாரித்த போது விபரீதமான காரணம் வந்தது.

'நீங்க சொன்னதையெல்லாம் ஏத்துக்கிட்டாலும் ஊருக்குள்ளே வேற விதமாப் பேசிக்கிறாங்க. உங்க பொண்ணுக்கும் வேறொரு பையனுக்கும் முன்னமேயே தொடர்பு இருந்ததாகவும் அது தெரிஞ்சு தான் மொதல் நாளே மாப்பிள்ளை வேண்டாம்னு விரட்டிட்டதாகவும்...'

அப்பா அந்தக் கடிதத்தை சுக்குநூறாகக் கிழித்து எறிந்தார். நந்தினி சிரித்தாள்.

"அதையேம்பா கிழிக்கறீங்க. வெறும் காகிதம்தான். எது எழுதறமோ அதை அப்படியே காட்டுது. மனுஷன் அப்படியில்லையேப்பா. நெஜம் எதுன்னு தெரிஞ்சும் பொய்யா ஒரு வதந்தி பரப்பறாங்களே. அதுல ஒரு அல்ப சுகம் தேடறாங்களே, அது கேட்டு என்ன ஏதுன்னு விசாரிக்காம சம்பந்தத்தை முறிச்சுக்கறாங்களே இவங்களை விட அந்தக் காகிதம் பெரிசுப்பா."

எத்தனை சமாதானம் சொன்ன போதும் அவளுக்குள் இங்கு வாழ்வது பற்றின ஒரு கேள்விக்குறி மெள்ள மெள்ளப் பெரிதாகிக் கொண்டே போய் ஒருநாள் விசுவரூபமாய் எழுந்து நின்றது.

தங்கைக்கு இன்னொரு வரனின் ஜாதகம் பார்த்து விட்டுத் திரும்பி வந்த அப்பாவிடம் சொன்னாள்.

"நான் ஒரு முடிவு பண்ணி வெச்சிருக்கேம்பா."

"என்னது..."

"இனி இங்கே தங்கறதில்லேன்னு."

"ஏம்மா..." அப்பா சட்டென்று நாற்காலி விட்டு எழுந்தார்.

"பளிச்சுன்னு சொல்லிடறேன்பா. பெண்கள் எத்தனையோ முன்னேறினதுக்கப்புறமும் இன்னமும் ஏதோவொரு விதத்துல அடிமைத்தனம் இங்கே இருந்துட்டுதான் இருக்கு. அதுல ஒண்ணு என் விஷயம்."

நான் இங்கே இருக்கறதுனால தங்கச்சிக்கு எத்தனையோ இடைஞ்சல்கள். நாலைந்து வரன் என்னாலேயே தவறிப் போச்சு. தவறினதுக்கு ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு காரணம் சொன்னாலும் நிஜமான ஒரே காரணம் நான்தான். பிரிஞ்சு வந்து தனியா இருக்கறதுதான். விமலாவுக்கும் வயசாயிட்டே போகுதுப்பா. அவளுக்காவது நல்லபடியா ஒரு வாழ்க்கை அமைய வேண்டாமா. அதான்..."

"அதனால..."

"தனியாப் போயிடலாம்னு இருக்கேம்பா. என் தோழி மூலமா ஒரு ஹாஸ்டல்ல எடம் கெடச்சிருக்கு. வாடகை கம்மி தான். வேலைக்கும் சொல்லியிருக்கேன். கெடைச்சிடும். அதுவரைக்கும் நீங்க கொஞ்சம் பணம் உதவி பண்ணுங்கப்பா. அப்புறம் என்னை நான் கவனிச்சுக்கறேன். இப்ப யாராவது கேட்டா புருஷன் வீட்ல இருக்கான்னு பொய் சொல்லீருங்க."

"என்னம்மா என்னென்னமோ பேசறே..." அப்பா நா தழுதழுத்தார்.

"உங்களையோ வீட்டையோ வெறுக்கறதுக்காக நான் இப்படிப் பேசலேப்பா. நெஜத்தைச் சொல்றேன். ஏத்துக்கங்க. ப்ளீஸ்.."

அப்பா அமைதியாகிப் போனார். அம்மா செய்தி கேட்டதும் எதுக்கு எதுக்கு என்று கேள்வி புரியாமல் அலைந்தாள். தங்கை விமலா ஓடி வந்து, 'எனக்குக் கல்யாணம் ஆகாமப் போனாலும் பரவாயில்லே. நீ பிரிஞ்சு போக வேண்டாம்' என்று அழுதாள்.

நந்தினி எல்லோரையும் சமாதானப் படுத்தினாள். தன் பெட்டி படுக்கையோடு அந்த லேடீஸ் ஹாஸ்டலுக்குக் குடிவந்தாள்.

## 4

இங்கு வந்தது பெரிய சாதனை போலிருந்தது நந்தினிக்கு. தன்னால்

வீட்டுச் சுமை இறங்கி விட்டது. இன்னும் சில மாதங்களில் தங்கைக்குத் திருமண மாகி விடக்கூடும் என்று நினைத்துக் கொண்டாள்.

அறை, வீடு மாதிரி அத்தனை சுக மில்லை. சௌகர்யமில்லை. ஆண்களின் தனியறையை விடப் பெண்களின் தனி யறை சுத்தமில்லைதான். அங்கேயாவது எப்போதாவது நண்பனின் தாயோ தந்தையோ வருவார்களென்றோ அல்லது யாருடைய கேர்ள் ப்ரண்டாவது வரக் கூடு மென்றோ அறையை அவ்வப்போது சுத்தப் படுத்துவார்கள். குப்பை கூட்டி வெளியே எறிந்து இடுப்பில் சரிகைத் துண்டு கட்டி கொஞ்சம் அழுக்கான வேட்டியைக் கூடத் துவைத்துப் போடுவார்கள்.

ஒருவன் துவைக்கிறபோதே அடுத்த வன் இதையும் துவை என்று தன் ஜூட்டியை விசிறி எறிந்தாலும் துவைத்து விடு வார்கள்.

லேடீஸ் ஹாஸ்டல் எல்லாவற்றிலும் மாறுபட்டு நிற்கிறது. அவசரத்திற்கு ஒரு துண்டு கேட்டால் தர மறுக்கிறார்கள். மீறிக் கொடுத்தால் அப்போதே கூடவே தொக்கிக் கொண்டு ஒரு கேள்வியும் எழுகிறது.

"இப்ப பீரியட் இல்லையே..."

இல்லையென்று சொன்னால் மட்டும் துண்டு தரப்படும். துண்டே இப்படியென் றால் சேலை அதற்கு மேல். ரவிக்கை அதற்கும் மேல். ஒருத்தி தொட அடுத்தவள் கத்துவாள். குச்சியால் அள்ளிக் கொண்டு போய் துவைத்துக் காய வைப்பாள்.

ஏன் பெண்கள் ஆண்களை விட இத்தனை மோசமாக இருக்கிறார்கள் என்று நந்தினி அடிக்கடி யோசிப்பாள். இத்தனை படித்தும் இத்தனை தெரிந்தும் பெண் ணுக்குப் பெண் ஏன் இப்படி எதிரியாக இருக்கிறார்கள் என்று தெரியவில்லை.

ஒருவேளை மனம்தான் இதற்குக் கார ணமோ, எதையும் முழுதாய்ச் சொல்லா மல் மறைத்து மழுப்பி சந்தேகத்தோடேயே பேசிப் பேசி பெண்ணுக்கு இந்த குணம் பழகி விட்டதோ. தலைக்குக் குளித்ததும் விரல் நீவி சிக்கெடுப்பது போல புடவை உடுத்தியதும் பின்னுக்குத் திரும்பிப் பார்த்து சுருக்கு தட்டி சரிப்படுத்துவது போல இதுவும் பழக்கமாகிப் போன ஒரு செயலோ. மாற்ற இயலாத ஒரு மாற் றமோ. தேவாவின் அம்மா மாதிரி...!

ஆனால் ஆண்கள் ஹாஸ்டலுக்கும் பெண்களின் ஹாஸ்டலுக்கும் ஒரு பெரிய வேற்றுமை உண்டு. இங்கே அதிகம் சிந்திக்க முடியும். தன் செயலுக்கென நேரம் ஒதுக்க முடியும். எதையும் அகழ்ந்து ஆய்ந்து பார்க்க முடியும். யாரும் சினிமா வுக்கோ தம்மடிக்கவோ இழுக்க மாட்டார் கள்.

நந்தினி தன்னைப் பற்றி நிறைய யோசித்தாள். வேலைக்காகத் தான் ஏறி இறங்கின கம்பெனிகளை, அவை சொன்ன பதில்களை, முன்னுக்கு விட்டுப் பின் னுக்குச் சிரித்த சிரிப்புகளைப் பற்றி யோசித்தாள்.

அத்தனை சீக்கிரம் வேலை கிடைக் காது என்பது தோன்றியது. அப்பாவிடமும் சகலத்திற்கும் பணம் வாங்குவதென்பதும் திருப்தியாய் இருக்கவில்லை. ஆனாலும் பணம் தேவையாய் இருந்தது. சம்பா திப்பது அவசியமானதாக இருந்தது. என்ன செய்யலாம்... யோசித்தாள். ஜன்னல் திறந்து வெளியே தெருவை வெறிக்கப் பார்த்தாள். கீழே மனிதர்கள் போனார்கள். வண்டிகள் போயின. ஆட்கள் புடைசூழ ஒரு கல்யாண ஊர்வலம் வந்து கொண் டிருந்தது.

விதவிதமான உடைகளில் பெண்களும் ஆண்களும் வந்து கொண்டிருக்க ஒருவன் சட்டைப் பார்த்தாள். வெளிர் நீலமாய் இருந்தது. அந்த உருவத்திற்கும் உயரத்திற் கும் அந்த சட்டியில் குறுக்கும் நெடுக்கு மாய்க் கோடுகள் இருந்தால் இன்னும் அழகாக இருக்கும் என்று தோன்றியது.

தக்காளி சீசனில் அடிக்கடி ஜூஸ் பண்ணிக் குடிக்கலாமே! சர்க்கரை சேர்க்காமல் சிறிது உப்பு, மிளகுப் பொடி, சீரகப் பொடி (பாக்கெட்டில் விற்கும்) தூவி ஜில்லென்று பரிமாறவும். அட்டகாசமாக இருக்கும்! ஜீரணத்துக்கும் நல்லது.

- உஷா



சட்டைக் காலரில் திட்டுத் திட்டாக விடாப்பிடியான அழுக்கா? சிறிது பற்பசையை காலரின் மேல் தேய்த்துச் சிறிதுநேரம் ஊறவிட்டுப் பிறகு துவைத்தால் புதிது போல ஆகிவிடும்.

- உஷா



வெள்ளைத் துணியில், கலர்த் துணியில் அப்படிக் கோடுகள் போட முடியும். அது பற்றி அவள் படித்திருக்கிறாள். எம்.எஸ்ஸியில் அது பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறாள். பத்திக் பிரிண்டிங் என்கிற அர்க அமைப்பு பற்றிப் பல்கலைக் கழகத்துக்கு ஒரு தலைகாணியளவுள்ள ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பித்திருக்கிறாள்.

என்றோ படித்தது. மதிப்பெண்ணுக்காக கண்விழித்து எழுதியது. கனவு மாதிரி ஞாபகத்தில் இருப்பது. மீண்டும் அது பற்றிப் படித்தால் என்ன என்று தோன்றியது. சுருசுருவென்று நினைவு அதைச் சுற்றி சுற்றி ஓடிற்று.

ஜன்னல் விட்டுப் பார்வையை கட்டிலுக்குக் கிழே திருப்பினாள். சுருட்டி வைத்திருந்த தன் புத்தகக் கட்டு பிரித்தாள். அதன் நடுவே அலுமினிய உடை உடுத்திப் படுத்திருந்த ஆராய்ச்சிக் கட்டுரையின் மாதிரிப் படிவத்தை எடுத்தாள். தூசி தட்டி உள்ளே புரட்டினாள்.

'Printed Designs in the Fabric are the first attraction to a Consumer...'

வரிகள் ஓடின. தான் சமர்ப்பித்த கட்டுரையை மீண்டும் தானே படிக்கையில் மனசுக்குள் ஒரு புதுத் தெம்பு வந்தது போலிருந்தது. துணிகளில் அச்சேற்றும் இந்த பத்திக் முறையையே ஒரு வேலையாகச் செய்தால் என்ன என்று தோன்றியது. அதையே செயல்படுத்த நினைத்தாள். மனக்கண் மூடி யோசிக்கத் தொடங்கினாள் நந்தினி.

## 5

“ஐயா வணக்கம்.''

நந்தினி கைகூப்ப எதிரேயிருந்த அறுபது வயது மனிதர் கண்ணாடி தூக்கி லென்ஸ் வழியே அவளை உற்று நோக்கினார்.

''என்னைத் தெரியுதுங்களா...''

''பார்த்த ஞாபகம். சட்டுன்னு யோசிக்க முடியலே.''

''நல்லது. நானே சொல்றேன். அஞ்சு வருஷத்துக்கு முன்னால என் எம்.எஸ்ஸி., பட்டப் படிப்பு ஆராய்ச்சிக் கட்டுரைக்காக இங்கே வந்தேன். பத்திக் பிரிண்ட் துணியில போட்டேன். ஐயா எனக்கு ரொம்ப உதவி...''



''ஆங்... ஞாபகம் வருது. ஊருக்குப் போனதும் நான் செஞ்ச உதவிக்கு கவிதை மாதிரி நன்றி எழுதனீங்க... உங்க பேர் கூட... பா... இல்லே ந...''

''நந்தினி.''

''யெஸ் நந்தினி. நல்லா எழுதியிருந் தீங்க. வருஷத்துக்கு ஒரு தடவை வர்ற எங்க கம்பெனி மலர்ல கூட அதைப் பிரசு ரம் பண்ணியிருந்தேன்.''

''ரொம்ப நன்றிங்க.''

''உக்காருங்க.''



எந்தக் கீரை செய்தாலும், தேங் காய் எண்ணெயில் தாளித்தால் அருமையான மணத்துடனும் ருசியுட னும் இருக்கும்.
- பார்வதி

''பேர் சொல்லிக் கூப்பிடுங்களேன். உங்க மக மாதிரியிருக்கேன். எதுக்கு வாங்க போங்கன்னு...''

பெரியவர் சட்டென்று ஒருகணம் கூர்ந்து அவள் முகம் பார்த்தார். மெள்ளச் சிரித்தார்.

''உக்காரும்மா. என்ன சாப்பிடறே டீ, காப்பி... டே கிருஷ்ணா...''

அவர் அழைக்க துணிகளில் ஏற்ற வர்ணம் கலக்கிக் கொண்டிருந்த இருபது வயதுப் பையன் ஓடி வந்தான்.

''ஒண்ணும் வேண்டாங்க. வந்த விஷ யம் சொல்லிடறேன். பத்திக் பிரிண்டிங் பத்தி நான் கட்டுரை எழுதினேன். அதையே பெரிய அளவில செஞ்சா மார்க் கெட்ல துணிகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கும்னு நெனைக்கறேன்.''

''அது முழு நேர வேலையாச்சேம்மா. உங்களுக்குக் கல்யாணமாயிருச்சில்லே. அடிக்கடி இங்கே வர வேண்டியிருக்கும். முழு நேரமும் இருக்க வேண்டியிருக்கும். இதுக்கெல்லாம் மேலே பத்திக் பிரிண்டிங் கொஞ்சம் ரிஸ்க் வேலை. குடும்பம் விட்டு வர முடியுமா?''

''முடியும் சார். எந்தக் கஷ்டமான வேலையையும் நான் ஏத்துக்கத் தயாரா இருக்கேன். ஏன்னா நான் இப்பத் தனி யாத்தான் இருக்...''

ஊராரிடம் எதுக்குத் தன் சோகம் சொல்ல வேண்டும் என்று தன்னையே எத்தனையோ தடுத்திருந்த போதும் மனசு மீறிக் கொண்டு வார்த்தையைக் கொட்டி விட்டது. கொட்டிய வார்த்தையை அள்ள முடியவில்லை. அவர் ஏன் என்று கேட்ட போது சொல்லாமல் இருக்க முடிய வில்லை.

அவர் எல்லாம் கேட்டார். என்ன அநி யாயம் இது என்பது போல மோவாயில் கை வைத்து வெகு நேரம் உட்கார்ந்திருந் தார். வெகு நேரம் யோசித்து விட்டுச் சொன்னார்.

''கவலைப்படாதம்மா. நான் உனக்கு உதவி பண்றேன். கொஞ்சம் ரிஸ்க்தான். ஆரம்பச் செலவு அதிகம்தான். இருந்தாலும்

(தொடர்ச்சி 97 - ஆம் பக்கம்)



ஸ்தாபிதம் : 1989

# திரு.வி.க.நகர் பெனி:பிட் :பண்டு லிமிடெட்

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் அருகில்),
சென்னை - 600 082. போன் : 610390
பாரீஸ் கிளை : 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (கந்தசாமி கோவில் அருகில்),
சென்னை - 600 003. போன் : 565760

## டெபாசிட் திட்டங்கள்

### பென்ஷனர் டெபாசிட்

| குறைந்த பட்ச டெபாசிட் | காலம் | வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ.10,000 | 1 வருடம்<br>2 வருடங்கள்<br>3 வருடங்கள் | 21% |

- ★ இத்திட்டத்தின் கீழ் ஓய்வு பெற்றோர், 50 வயது அடைந்தோர், விதவைகள், உடல் ஊன முற்றோர் மற்றும் கல்வி, சமய அறக்கட்டளை களும் பயன் பெறலாம்
- ★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்
- ★ வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### வைப்பு நிதி

| காலம் | வட்டி விகிதம் | |
|---|---|---|
| | ரூ.10,000 க்கு கீழ் | ரூ.10,000 மும் அதற்கு மேலும் |
| 1 வருடம் | 17% | 18% |
| 2 வருடங்கள் | 18% | 19% |
| 3 வருடங்கள் | 19% | 20% |

- ★ குறைந்த பட்ச டெபாசிட் ரூ.1,000
- ★ பிரதி மாதம் வட்டி வழங்கப்படும்
- ★ குறைந்த பட்சம் ரூ.10,000 டெபாசிட் செய்தால் வட்டிக்குரிய காசோலைகள் முன்னதாகவே அளிக்கப்படும்.

### மறுமுதலீட்டுத் திட்டம்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 12 மாதங்கள் | 1,185 |
| | 24 மாதங்கள் | 1,430 |
| | 36 மாதங்கள் | 1,760 |
| | 44 மாதங்கள் | 2,000 |

### ஐஸ்வர்யா டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | கால இறுதியில் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.1,000 | 10 வருடங்கள் | 6,919 |
| | 15 வருடங்கள் | 18,885 |
| | 20 வருடங்கள் | 52,827 |
| | 23 வருடங்கள் | 95,760 |

- ★ மாதாந்திர சேமிப்புத் திட்டத்தில் பிரதி மாதம் ரூ.25 செலுத்தி 12 மாதங்கள் கழித்து ரூ.330 பெறுங்கள்.
- ★ சேமிப்புக் கணக்கில் உள்ள நிலுவை தொகைக்கு நாள் தோறும் 12% P.A. வட்டி வழங்கப்படும்.
- ★ நகையின் பேரில் ஒரு சவரனுக்கு ரூ.2,500 வரை கடன் வழங்கப்படும்.
- ★ வீட்டின் பேரிலும் கடன் வழங்கப்படும்.
- ★ பங்குதாரர்களுக்கு மட்டும் ★ ரூ.1 செலுத்தி ஒரு பங்கு பெற்றுக் கொள்ளுங்கள்.
- ★ இது சீட்டு நிறுவனம் அல்ல

Ideal/93

வேலை நேரம் :
தலைமை அலுவலகம் : காலை 9 முதல் 5 வரை. ஞாயிறுகளில் 9 முதல் 12.30 வரை. செவ்வாய் விடுமுறை.
பாரீஸ் கிளை : காலை 10 முதல் 5 வரை. ஞாயிறு விடுமுறை.

✣ பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள் ✣

3

# உச்சிதனை முகர்ந்தால்

வெள்ளை நிற பைஜாமா, வெள்ளை மல்லில் தொள தொளவென்று ஜிப்பா. சில்வர் ஃப்ரேமிட்ட மூக்குக் கண்ணாடி. தோளில் ஜோல்னாப் பை. கால்களில் ஹவாய் செருப்புக்கள், கண்களில் பளிச்சிடும் குறும்பு, வருடத்திற்கொருமுறைதான் சவரக் கடைக்குப் போகும் தலைமுடி - இதுதான் வாஞ்சி.

வாஞ்சிக்கு பெரிய உத்யோகம். தலைசிறந்த ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில் முழு நேர ரிப்போர்ட்டராயிருந்தான். நிறைய பெரிய மனித சகவாசம். இருப்பினும் அலட்டிக் கொள்ளாத சுபாவம். ஆங்கிலப் பத்திரிகையில் ரிப்போர்ட்டராயிருந்தாலும் அவன் விழுந்து விழுந்து படிப்பது தமிழ் இலக்கியங்களைத்தான். அகத்தியர் காலத்து இலக்கியத்திலிருந்து இன்றைய பாலகுமாரன் வரைக்கும் அலசி விமரிசனத்தை பிட்டு பிட்டு வைக்கச் சொல்லுங்கள். சோறு தண்ணி கூட வேண்டாம். இதோ உட்கார்ந்தேன் என்று கூறும் இலக்கியப் பித்து. பார்ப்பவரிடம் எல்லாம் நீங்க 'மோக முள்' படிச்சிருக்கீங்களா? இல்லையா? அட்லீஸ்ட் புக்காவது பார்த்திருக்கீங்களா அதுவுமில்லையா? என்ன அந்தக் காலத்து கதையா? சரி, 'இரும்பு குதிரைகள்' படிச்சிருக்கீங்களா? அதுவுமில்லையா? அடடா வாழ்க்கையையே வேஸ்ட் பண்ணிட்டீங்களே என்று உருகுவான்.

இலக்கியம் தவிர விரும்பி ரசிப்பது இயற்கையை. அத்துவானக்காட்டில் எங்காவது சலசலவென்று நதி ஓடுகிறது என்றால் சொல்லாமல் கொள்ளாமல் கிளம்பிப் போய் உட்கார்ந்து அத்தனை அழகையும் கண்வழியாய் நெஞ்சில் பூட்டிக் கொள்ளும் ஜென்மம். புரிந்து கொள்ள முடியாத மனிதன்.

அன்று காலை எழுந்ததிலிருந்தே மனசு ஒரு நிலையில் இல்லை வாஞ்சிக்கு.

அம்மாவுக்குக் கஞ்சி வைத்துக் கொடுத்து விட்டு காலையிலேயே கிளம்பி விட்டான். வாஞ்சிக்கு அம்மா மட்டும் தான். அவனுக்கு இரண்டு வயதிருக்கும் போது அவன் அப்பா வெள்ளையனே வெளியேறு என்று கோஷம் போட்டு குண்டடி பட்டு செத்தாராம். அவர் நினைவுக்கும் அவரது தியாகத்துக்கும் பரிசாகக் கிடைத்த தாமிரப் பட்டயத்தை பூஜை அலமாரியில் ஒரு ஷோகேசில் வைத்து தினம் ஒரு ரோஜாப் பூ வைக்கிறான். சமீபகாலமாக அம்மாவுக்கு சுத்தமாக கண்பார்வை குறைந்து விட்டது. பெரிய கோளாறில்லை. ஒரு ஆபரேஷன் பண்ணினால் சரியாகி விடும் என்கிறார்கள் டாக்டர்கள். அம்மா பயத்தைக் கட்டிக் கொண்டு ஆபரேஷனுக்கு மறுக்கிறாள். எனவே இப்போதெல்லாம் வாஞ்சிதான் சமைக்கிறான். வேலைக்காரியோ-ஃ.ர்ரையோ வைத்துக் கொள்ள அவன் விரும்பவில்லை. எடுபிடி வேலைக்கும், அம்மாவுக்குத் துணைக்காகவும் மட்டும் ஒரு பெண்ணை வைத்துக் கொண்டிருந்தான்.

— வித்யா சுப்ரமணியம்

முதல் நாள்தான் வாஞ்சிக்குக் காற்றுவாக்கில் ஒரு விஷயம் காதில் பட்டது. மிஸஸ் மாத்யூஸ் என்ற மிகப் பெரிய மனுஷி சமூகத்தில் மிகப் பெரிய அந்தஸ்தில் இருப்பவள் தனது கணவரை விவாகரத்து செய்து விட்டவள், தற்சமயம் வேறொருவருக்கு வாழ்க்கைப்பட்டிருக்கிறாளாம். அவன் அதைப் பற்றி பெரிசாய் கவலைப் படாமலிருந்தாலும் மேலிடத்தில்



இருந்து அவனை நோக்கி மிக வேகமாக உத்திரவு ஒன்று எறியப்பட்டது.

அந்த மாத்யூசிடமிருந்து ஒரு பேட்டி வாங்கி விட வேண்டுமாம் அவன். மாத்யூஸ் அரசியல் செல்வாக்குள்ளவள். அவளைச் சாதாரணமாய் சந்தித்து பேட்டி வாங்குவதே பெரிய விஷயம். அப்படி இருக்க திருமணம் என்பது முழுக்க முழுக்க அவள் சொந்த விஷயம் என்ற நிலையில் அதுபற்றி பேட்டி கண்டால் கெட் அவுட் என்ற பதில்தான் கிடைக்கும் என்பது அவனுக்கு நன்றாகவே தெரிந்தது. ஆனால் உன் திறமைக்கே இது ஒரு சவால் என்று அவன் தன்மானத்தையல்லவா உசுப்புகிறார் அவனது பாஸ்!



இரவு முழுக்க இதைப் பற்றியே யோசித்துத் தூக்கத்தை தொலைத்தான். ஒரு பக்கம் தன் பத்திரிகை ஆசிரியர் மீதே எரிச்சல் வந்தது. ஒரு பெண்ணின் அந்தரங்கத்தை அம்பலப்படுத்தி காசு சம்பாதிக்கும் அவரது வழியை நினைத்து வேதனைப் பட்டான். என்ன செய்ய ஒன்றல்ல இரண்டல்ல ஆயிரக்கணக்கில் பச்சை நோட்டுக்களை அபிஷேகம் செய்கிறார். அவற்றை அவன் வெறுத்தால் பிளாட்பாரத்தில் கஞ்சி தான் குடிக்க வேண்டும்.

சொந்த ஃப்ளாட், வாசலில் நிற்கும் மாருதி மற்றும் ஏராளமாய் வசதி இதற்கெல்லாம் காரணம் அவன் திறமைக்கு ஊதியமாய் அவர் கொடுத்தவை. அவருக்கு விசுவாசமாய் இருக்க வேண்டியது அவன் கடமை. அவர் அவனிடம் வந்து ப்ரைம் மினிஸ்டர் வீட்டு நாயை பேட்டி எடுத்து வா என்றாலும் ஓடத்தான் வேண்டும்.




புதிதாக உள்ள இருநூறு கிராம் காராட்டைக் கழுவி மெல்லிய வட்டமாக அரிந்து கொள்ளவும். இரண்டு தேக்கரண்டி உப்புப் பொடி போட்டுப் பிசிறி வைக்கவும். அரை மணி நேரத்திற்குப் பிறகு அடுப்பில் வாணலியை வைத்து ஆழாக்கு எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் காரட் கிழங்கைக் கைப்பிடி அளவு அள்ளிப் போட்டு வறுத்தெடுக்கவும். பிறகு சீரகம் அரைத் தேக்கரண்டி, மிளகு கால் தேக்கரண்டி, மூன்று ஆர்க்கு கறிவேப்பிலை இந்த மூன்றையும் வாணலியில் வறுத்துப் பொடி செய்து வதக்கி வைத்திருக்கும் காரட் கிழங்கில் போட்டுப் பிசிறி வைக்கவும். இந்தக் காரட் வறுவல் சாப்பிடுவதற்கு மிகவும் சுவையுடையதாக இருக்கும்.

– ஆர். அஜிதா

நாயின் சிறப்புப் பேட்டி என்று லொள் லொள் பாஷையில் எதையாவது எழுதித் தானாக வேண்டும்.

சில நேரங்களில் அவனுடைய தன்மானத்தை இருக்குமிடம் தெரியாமல் அடித்து விடுகிறார் அவர். அவ்வப்போது மரணமடையும் அந்தத் தன்மானத்தை உயிர்ப்பித்துக் கொள்ளத்தான் அவன் வருடத்திற்கொருமுறை பத்து நாளோ ஒரு மாசமோ கண்காணாத இடத்திற்குப் போய் விடுவான். தனிமையில் இனிமை தேட. கடந்த ஒரு வருடமாய் தாயின் பார்வை குறைந்து போனதால் அதுவும் முடியவில்லை. இப்போது ஏங்கிப் பயனில்லை. மாத்யூஸ் என்னும் மாங்கனிக்கு கல்லெறிந்து பார்க்க வேண்டியதுதான். பழம் விழுந்தால் பிழைத்தான். இல்லையேல் இருக்கவே இருக்கிறது துண்டுக் கடுதாசி! கொடுத்து விட்டு இலக்கியச் சேவைக்குப் போய் விட வேண்டியதுதான். கா.நா.சு. அளவுக்கு அவனுக்கும் அலசி எழுதத் தெரியும் போது பிழைக்கவா வழியில்லை?

தீர்மானம் பண்ணிக் கொண்டதுமே தனது சிகப்பு நிற மாருதியை கிளப்பிக் கொண்டு அவன் மாத்யூஸ் வீட்டை நோக்கிச் சென்றான்.

மாத்யூஸ் வீட்டை நெருங்கும் போது இல்லாத தயக்கமெல்லாம் சேர கொஞ்சம் ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்காக அந்த பங்க் கடைக்கு எதிரில் வண்டியை நிறுத்தி சிகரெட் வாங்குவதற்காக இறங்கினான்.

சிகரெட்டை வாங்கும்போதே ஒரு ஐடியா மனசில் தோன்றியது. அவனுக்கு மாத்யூசிடம் பேட்டி வாங்குவதற்கு முன் அக்கம் பக்கத்தவர் வாயைக் கிண்டிப் பார்த்தால் ஏதாவது துணுக்குகள் கிடைக்காதா என்று நினைத்தான்.

முதலில் பங்க் கடைக்காரனையே கிளற ஆரம்பித்தான்.

''சிகரெட் கொடுப்பா.''

ஆமா எத்தனை நாளா இங்க கடை போட்டிருக்கீங்க?''

''ஏங்க?''

''சும்மாத்தான் தெரிஞ்சுக்கலாமேன்னு.''

''ஏழு வருசமாவுதுங்க.''

''வியாபாரம் எல்லாம் எப்படி?''

''நல்லா நடக்குதுங்க.''

''ஏழு வருஷமா இங்க இருக்கீங்க. அந்த வீட்டு அம்மாவைத் தெரிஞ்சிருக்கணுமே உங்களுக்கு.''

''தெரியுமே கார்ல போகும் போது, வரும் போது பார்த்திருக்கேனே! ஏங்க கேக்கறீங்க?''

''இல்ல... அவங்க திரும்பவும் கல்யாணம் ஏதோ... பண்ணிக்கிட்டதா...''

''அதெல்லாம் பெரிய எடத்து வெவகாரம்! நமக்கு ஏங்க அதெல்லாம்?''

''இல்ல அதைப் பத்தி நீ என்ன நினைக்கறேன்னு சும்மா சொல்லு.''

''நா என்னங்க நினைக்கறது? பணக்காரங்க அவங்க. சட்டைய மாத்தறாப்பல தெனம் ஒரு புருசனை மாத்துவாங்க. அது அவங்க இஷ்டம். அதைப் பத்தி நாம என்ன நெனச்சாத்தான் அவங்களுக்கு என்ன?''

உண்மைதான்! பங்க் கடைக்காரன் சொல்வது போல் மற்றவர்களின் விமரிசனங்களை லட்சியம் செய்யும் பெண்ணல்ல மாத்யூஸ். தனக்கென்று எது தோன்றுகிறதோ அதையே பிடிவாதமாய் செய்பவள். ஏனோ வாஞ்சிக்கு நம்பிக்கை குறைந்தது. இந்தப் பேட்டியை எடுக்க முடியும் என்று அவனுக்குத் தோன்றவில்லை. 'ப்பூ இவ்வளவுதானா நீ' என்று பெரியவர் சிரிப்பார். சிரித்து விட்டுப் போகட்டும்.

சிகரெட்டின் கடைசி இழுப்பையும் இழுத்து முடித்து கீழே போட்டு காலால் தேய்த்து அணைத்தான். பங்க் கடைக்காரனுக்கு ரூபாயை எடுத்து நீட்டினான்.

''சில்லறையை வெச்சுக்கப்பா'' என்று கூறி விட்டு யோசித்துக் கொண்டே காரை நோக்கி நடந்தவனின் பின்னால் ஒரு குரல்,

மூக்கின் மீது ஈ உட்கார்ந்து

தொல்லை தருகிறதா?

ஹிட் கொண்டு தாக்குங்கள்.




திடீரென எங்கு பார்த்தாலும் ஒரே ஈ
தொல்லை. ஆகவே உங்களுக்குத் தேவை ஹிட்.
ஈ, கொசு, குளவி, வண்டு போன்ற
பூச்சிகளுக்கான ஒரு விசேஷ உலகத்
தரம்வாய்ந்த தெளிப்பு. இது மணிக்கணக்கில்
திறம்பட வேலை செய்கிறது.
உங்கள் மனம் விரும்பும் அருமையான மணம்.

**ஹிட் பூச்சிகளை ஒழித்துக்கட்டும் உடனடியாக!**

குட்நைட் வழங்குபவர்களிடமிருந்து

HIT 118 93 TAM

"எக்ஸ்கியூஸ் மீ" திரும்பிப் பார்த்த வாஞ்சி மெலிதாய் ஆச்சரியப்பட்டான்.

"கொஞ்சம் அப்படி வரீங்களா?" வாஞ்சியின் ஆச்சரியம் அதிகரித்தது. அந்த அழைப்புக்கிணங்கி பின் சென்றான்.

"உங்களோட காரா இது?"

"ஏன்? லைசென்ஸ் காட்டணுமா? டிராபிக் போலீஸா நீங்க? மஃப்ட்டில வந்திருக்கீங்களா?"

"பாத்தா படிச்சவர் மாதிரி இருக்கீங்க. கார் வேற வெச்சிருக்கீங்க! நீங்க இப்படி செய்யலாமா?"

"ஏன்... அப்படி என்ன நா செஞ்சுட்டேன்?"

"ஒரு பெண்ணைப் பத்தி ஒரு பங்க் கடைக்காரன்கிட்டே போய் கேக்கறது தப்பில்லையா? இதுல அவன் அபிப் பிராயம் வேற சொல்லணுமா? பொதுவா ஆண்களுக்கு வம்பு கிடையாதுன்னுதான் நெனைச்சேன். ஆனா கார்ல வந்து வம்பு பேசற வித்தியாசமான ஆண் சார் நீங்க. ஏன் சார் பத்திரிகை கித்திரிகை நடத்தறீங்களா? கிசுகிசு எழுதலாம்னு பங்க் கடைக்காரனை தோண்டறீங்களா?"

வாஞ்சி பிரமித்தான்.

"கடைசில சொன்னீங்களே அது கரெக்ட்! ஆனா பத்திரிகை நா நடத்தலை. நா ஜஸ்ட் ரிப்போர்ட்டர்தான். நீங்க நெனைக்கறாப்போல கிசுகிசுக்கு விஷயம் தேடலை. நேரடியாவே பேட்டி எடுக்கணும்னுதான் மேலிடத்து உத்தரவு. பட், வாஞ்சிக்கு அது பிடிக்கலை. சுத்த கன வானித்தனம்னு நெனைக்கறான்."

"யாரது வாஞ்சி?"

"நான்தான்."

"ஓஹோ! பேட்டி எடுக்க பிடிக்க லைன்னா பளிச்சுனு முடியாதுன்னு சொல் லிடணும் சார். மதில் மேல பூனையாட்டம் உங்க கௌரவத்தை அலைய விடக் கூடாது. ரிப்போர்ட்டர் வேலைன்னா சும் மாவா? அவனவன் மூஞ்சிக்கெதிர்க்கயே கதவைச் சாத்திட்டு பேட்டியாவது போய் யான்னுவான். ரோஷம் பார்த்தா முடி யுமா? அதெல்லாம் கழட்டி வெச்சுட்டு தான் உத்தியோகம் பாக்கணும். இல்ல உத்யோகம் வேண்டான்னு ரோஷத்தோட அலையணும். ரெண்டையும் விட்டுட்டு பங்க் கடைக்காரன்கிட்ட தோண்டிப் பாக்க றது சரியா?"

வாஞ்சி அவளையே வெறித்துப் பார்த் தான். பிறகு, "மேடம் எங்க வேலை செய்யறாப்பல?" என்றான்.

"பாங்க்ல."

"ஓகே! மேடம் பாங்ல மானேஜராய்ட் டீங்க. போய் ஊர்ல இருக்கறவங்ககிட்டல் லாம் டெபாஸிட் பிடிக்கண்டு வான்னு மேலிடத்துல துரத்தினா என்ன செய் வீங்க?"

"போவேன்."

"சரி ஏகப்பட்ட டிமாண்ட் உள்ள ஒரு பெரிய ஆளை நீங்க கண்டிப்பா கிளை யண்ட் ஆக்கியே தீரணும்னு உத்தரவு. ஆனா அந்த ஆளைப் பாக்க விடாம சுத்தி யிருக்கறவங்க உங்களைப் பாத்தாலே வள் வள்ளுன்னு விழுந்தா என்ன செய்வீங்க? உத்யோகத்தை விட்டுடுவீங்களா?"

இப்போது சரண்யா அவனை வெறித்துப் பார்த்தாள். மறு நிமிஷம் பக்கென்று சிரித்தாள். "அவங்கவங்க தொழில் அவங்கவங்களுக்கு. ஆல் தி பெஸ்ட்" என்றவள் கண்ணில், கேட்டை திறந்து கொண்டு வரும் பத்மா தென்பட, "ஓகே பை! ஸீ யூ" என்று கூறி விட்டு வண்டியை கிளப்பிக் கொண்டு தாயின் அருகில் சென்றாள்.

இருவரும் போவதையே பார்த்தான் வாஞ்சி. பிறகு தனது மாருதியை கிளப்பிக் கொண்டு மாத்யூஸ் வீட்டினருகில் நிறுத்தி இறங்கி உள்ளே சென்றான்.

"என்னம்மா மாத்யூஸ் எப்படி பேசினார்?"

"எப்பவும் போலத்தான் பேசினார். காலேஜ் ஃபங்ஷன் பத்தி மட்டும் பேசினேன் வந்தேன்."

"வேற ஒண்ணும் சொல்லலையா?"

"ம்ஹூம்."

"ரொம்ப அழுத்தம்! சரி நந்த கோபால்?"

"கண்ல படலை."

அதன்பின் சரண்யா எதுவும் கேட்க வில்லை. கல்லூரி வாசலில் அம்மாவை

தக்காளி சூப் தயாரிக்கும் போது நன்றாக வேக வைத்த பீட்ரூட் துண்டு ஒன்றை சூப்பில் போட்டு விட்டால், சூப் பார்ப்பதற்குக் கவர்ச்சியாக இருக்கும்.

- பொன். ராஜேந்திரன்



இறக்கி விட்டு பாங்க்கை நோக்கி வண்டியை செலுத்தினாள்.

பாங்க்கில் நுழைந்த பத்தாவது நிமிடம் சரண் உனக்கு ஃபோன் என்று ஆபரேட்டர் அழைக்க சரண்யா ஃபோனருகில் சென்றாள்.

''யெஸ்! சரண்யா ஹியர்''

''நா மாத்யூஸ் பேசறேன் சரண்.''

''சொல்லுங்க ஆன்ட்டி.''

''காலைல நீ ஏன் உள்ளே வரலை சரண்?''

''சும்மாதான்! அம்மா காலேஜ் விஷயமா பேசறப்போ நா வேற எதுக்கு நடுவிலேன்னுதான் வெளியிலே நின்னுட்டேன்.''

''நோ! நீ சமாளிக்கிற சரண். உனக்கு என் மேல கோபம். அதான் வரலை.''

''கோவமா? உங்க மேலயா? எதுக்கு கோச்சுக்கணும்? என்ன தப்பு பண்ணிட்டீங்க நீங்கன்னு கோச்சுக்கணும்?''

ஒருகணம் மாத்யூஸே அயர்ந்து போனாள். ''பூசி மெழுகாத சரண்! என் மேரேஜுக்கு உங்களை இன்வைட் பண்ணலன்னு நீ தப்பா நெனைக்கலை?''

''இல்லையே! கல்யாணங்கறது உங்க சொந்த விஷயம். இதுல நா தப்பா நெனைக்க என்ன இருக்கு?''

''ஓகே! இன்னிக்கு ஈவினிங் நீயும் பத்மாவும் எங்களோட டின்னர் சாப்பிட றீங்க! பத்மாக்கு நா ஏற்கெனவே போன் பண்ணி சொல்லிட்டேன்.''

''அம்மா என்ன சொன்னா?''

''கண்டிப்பா வந்துடறேன்னா.''

''அப்போ எனக்கென்ன? நானும் வந்துடறேன்.''

''பெரிய பார்ட்டின்னு நெனைக்கக் காதே. ரொம்ப சிம்ப்பிள்! நீ, பத்மா, நான், நந்தகோபால் நாலே பேர்தான்.''

''சரி வரேன்'' சரண்யா போனை வைத்தவள் உடனேயே பத்மாவுக்கு ஃபோன் போட்டாள்.

''ஏம்மா மாத்யூஸ் வீட்டுக்குப் போகப் போறியா?''

''ஏன் சரண்?''

''அவ பார்ட்டி குடுக்கப் போறது யார் யாருக்குன்னு தெரியுமா?''

''சிம்ப்பிள்! நம்ம ரெண்டே பேர்க்கு தான்.''

''காரணம்?''

''போய்த்தான் பார்ப்போமே சரண்!''

சரண்யா, ''சரி'' என்று போனை வைத்தாள்.

(தொடரும்)

## அதுதாங்க "சூப்பர்டோன்"



கடைக்கு போய் பாருங்க..
எத்தனையோ சொட்டு நீலம் இருக்குதுங்க
பேரும்கூட ஜோரு தாங்க
பாட்டில்கூட அழகா இருக்குதுங்க
உங்களுக்குத் தேவை
உள்ளே இருக்கற பொருள்தாங்க
அதுதாங்க **சூப்பர்டோன்** சொட்டு நீலம்.








## மாற்ற முடியாத நம்பிக்கை



# சூப்பர்டோன்
## சொட்டுநீலம்



தயாரிப்பாளர்கள் :

**ஸ்ரீ சபரி ஏஜென்ஸிஸ்**

139, பெரிய கப்பன்னக்கவுண்டர் தெரு, கே.கே. புதூர், கோவை - 38.

போன் : 40832.

விற்பனையாளர்கள் :

**ஜே. கே. மார்கெட்டிங் அஸோஸியேட்ஸ்** கோவை - 38.

SASI/54/93

# குழந்தைகளுக்கு பாக்கெட் மணி அவசியமா?

இன்று நடுத்தர வயதில் இருக்கும் பெற்றோர்கள் அவர்கள் டீன்ஏஜில் இருந்த போது, 'பாக்கெட் மணி' பற்றித் தெரிந்து வைத்திருந்தார்களா என்பது சந்தேகமே! ஒரு சாதாரண (அல்பமான) பொருளைத் தொலைத்து விட்டாலும் கூட அதுக்கு எப்படி பயந்தார்கள், எப்படி வருந்தினார்கள் என்பது அவர்களுக்கு மட்டும்தான் தெரியும். ஒரு புது டிரஸ் வாங்குவதற்குத் தான் எத்தனை தயக்கம்? தீபாவளி, பொங்கல் - இப்படி பண்டிகையின் போதுதானே அவர்களுக்கு புதுத் துணி கிடைக்கும்? (சில வீடுகளில் ஏதாவது ஒரு பண்டிகைக்குத் தானே கிடைக்கும்!) வசதியுள்ள வீட்டவர்களின் பிள்ளைகளுக்கு மட்டும்தானே பிறந்த நாள் கொண்டாட்டமும் புதுத் துணிகளும்?

ஆனால் இன்று...? வசதி இருக்கிறதோ இல்லையோ பிறந்த நாளுக்குப் புது டிரஸ் மிகவும் அவசியமான ஒன்றாகி விட்டது. அதுவும் ஒரு டிரஸ்ஸுடன் நிற்காமல் குறைந்தது இரண்டு, மூன்று செட்டுகள் வேண்டுமென்கின்றனர் இன்றைய குழந்தைகள். பண்டிகைகளைப் பற்றிக் கேட்க வேண்டாம். 'பாக்கெட் மணி' என்பது இன்றைய குழந்தைகளுக்கு மிகவும் அத்தியாவசியமாகி விட்ட ஒன்று. பொருட்களைத் தொலைத்து விட்டு வருவதென்பது சர்வ சகஜமாகி விட்ட ஒன்று. இதுபற்றிக் கேட்டால், "இதென்னம்மா பிரமாதம்? ஆப்டர் ஆல் நூறு ரூபாய்தானே? இதுக்குப் போய் ஏம்மா திட்டறே?" என்ற தொனியில் எளிதாக பதில் சொல்லும் (டீன் ஏஜ்) குழந்தைகள்தான் அதிகம். இன்றைய இந்த மனப்பான்மைக்கும், நிலைமைக்கும் யார் காரணம் எனக் கேட்ட போது...

**திருமதி. ஆர். விஜயலட்சுமி**
**(அழகுக் கலை நிபுணர்**
**- டீன்ஏஜ் மகளின் தாய்)**

"நாங்க சின்னவங்களாக இருந்தப்போ எதையுமே சட்னு கேட்க மாட்



● லட்சுமி



● தீபா

டோம். அந்த அளவு பயம். எங்கப்பா அந்த நாளிலேயே நல்லா சம்பாதித்தவர்தான் (சிரிப்பு நடிகர் ஏ. கருணாநிதி அவர்கள்தான் என் தந்தை). ஆனால் பணத்தோட அருமை தெரிஞ்சுதான் நாங்க வளர்ந்தோம். 'பாக்கெட் மணியா?' - ம். ஸ்கூல் ஃபீஸ் கேட்கக் கூட எங்களுக்கு ரொம்ப பயம்தான். வெகு நேரம் யோசனை பண்ணி அப்பா கோவமில்லாம நல்ல 'மூட்'லே இருக்கும் போதுதான் ஸ்கூல் பீஸுக்காகக் கொடுத்த சீட்டையே அவர்கிட்டே காண்பிப்போம். இன்னிக்கு அப்படியா? "என்னம்மா ஆப்டர் ஆல் ஃபிஃப்ட்டி ரூபீஸ்தானே கேட்கறேன். என் ஃபிரெண்ட்ஸோட போறப்போ இதுவே போதாது" என முணுமுணுக்கும் குழந்தைகள்தானே அதிகம்!

நான் சின்ன பொண்ணா இருந்தப்போ ஒரு சாதாரண கண்ணாடி பாத்திரத்தை உடைச்சிட்டாக் கூட பயத்திலே உடம்பே

நடுங்கும். 'நான் உடைக்கலேன்னு' சில சமயம் பொய் கூடச் சொல்லத் தோணும். ஆனால் இப்போ கொஞ்ச நாளைக்கு முன்னே என் பொண்ணு ஒரு சின்ன தங்கத் தோட்டைத் தொலைச்சிட்டு வந்துட்டா. அது பத்திக் கேட்டா, ''என்னம்மா ஒரு சின்ன தோடு. அது தொலைஞ்சதுக்கு இப்படித் திட்டறே? வேணும்னா தொலைச்சேன். போகுது விடு''ன்னு சொல்லிட்டு அதோட அந்தப் பேச்சுக்கே முற்றுப் புள்ளி வச்சிட்டா. டிரஸ் பத்தி சொல்லும் போது நகை கூட இன்றைய குழந்தைகளுக்கு இரண்டாம் பட்சம்தான். அந்தக் காலத்திலே ரூ 100/-க்கு டிரஸ் வாங்கினாலே பெரிய விஷயம். இன்னிக்கு டிரஸ்லோட பொட்டு, வளையல், செருப்புன்னு - எல்லாவற்றையும் செட்டோடதானே வாங்கித் தர வேண்டிய நிலை. நல்ல நாகரீகமான கடையில் வாங்கினால்தான் பெருமை என்ற எண்ணம் வேறு இன்றைய குழந்தைகள் மனதில் வேரூன்றி விட்டது.



✱ விஜயலட்சுமி



✱ ஐஸ்வர்யா



✱ வித்யா

இதுக்கு முக்கிய காரணம் நாம்தான். நம் குழந்தைகளுக்கு கஷ்ட நஷ்டங்களைத் தெரியப்படுத்தி பொறுப்புகளை அறியச் செய்ய வேண்டும். இன்றைய குழந்தைகள் பொதுவாகவே நல்ல புத்திசாலிகள்தான். அவர்களைப் பொறுப்புணர வைத்தால் நிச்சயம் இந்த நிலை மாறி அவர்களின் எதிர்காலம் நன்கு அமையும். பணம் சம்பாதிக்க வேண்டிய கட்டாயத்திலுள்ள பெற்றோர்கள் குழந்தைகளை சரிவர வளர்க்கத் தவறி விடுவதால்தான் இந்த நிலை. இதற்கு குழந்தைகளைக் குற்றம் சொல்லாமல் அதற்கு நாம்தான் பொறுப் பேற்க வேண்டும்.''

## ஜி. வித்யா

**( 10-ம் வகுப்பு மாணவி)**

''**பா**க்கெட் மணி' என்பது மிகவும் தேவையான ஒன்றுதான். நான் எனக்குக் கிடைக்கும் 'பாக்கெட் மணி'யை அனாவசியமாகச் செலவு செய்ய மாட்டேன். என் தோழிகளுக்கு ஏதாவது 'கிப்ட்' வாங்கித் தரவும், எனக்குத் தேவையான 'ஃபேன்ஸி ஐட்டம்ஸ்' வாங்கவும் பயன்படுத்திக் கொள்வேன். சில சமயம் நான் சேர்த்து வைக்கும் பணத்தைக் கொண்டு எனக்கு டிரஸ்கள் கூட வாங்கிக் கொள்வேன். என் அஜாக்கிரதையினால் நான் சில பொருட்களைத் தொலைப்பது உண்டு. தொலைந்து போனது சின்ன பொருளானால் போனால் போகிறது என விட்டு விடுவேன். பெரிய பொருளாக இருந்தால் ஓரளவு 'ஃபீல்' பண்ணுவேன். ஓரளவு தேடுவேன் - அப்படியும் கிடைக்கவில்லையென்றால் என்ன செய்வது? மறந்து விட வேண்டியதுதானே?! தீபாவளிக்கும் என் பிறந்த நாளைக்கும் கண்டிப்பாக டிரஸ்கள் வாங்கிக் கொள்வேன். மிகவும் விலை உயர்ந்ததாக இருந்தால் ஒரே டிரஸ்ஸுடன் நிறுத்திக் கொள்வேன். சுமாரான விலையென்றால் 2 செட் டிரஸ்கள் வாங்கி விடுவேன். வித்தியாசமான நல்ல உடைகளை சேர்த்து வைப்பதுடன், போட்டுக் கொள்ளவும் பிடிக்கும். நல்ல பெயர் பெற்ற கடையில் உடைகள் வாங்க வேண்டுமென்பதில் எனக்கு உறுதி உண்டு.''

## தீபா சேதுராமன்

**(பி.காம். இரண்டாம் ஆண்டு)**

''**வீ**ட்டின் வருமானம், செலவுகள் இதற்கு ஏற்பத்தான் பாக்கெட் மணி கேட்கலாம். ஆனால் என்னைப் போல அதிகம் செலவு செய்பவர்களுக்கு மாதம் இவ்வளவுதான் பாக்கெட் மணி தர முடியும் என்றால் ஓரளவு செலவு குறையும். என்னைப் பொறுத்தவரை நான் 'பாக்கெட் மணி' என எதுவும் தனியாக வாங்கிக்

கொள்வதில்லை. தேவைப்படும் போது என் செலவுகளுக்கு அம்மாகிட்டே அப்பப்போ வாங்கிக் கொள்வேன். டிரஸ் வாங்கும் போது குறிப்பாக கடைகள் எதையும் நான் தேடுவது கிடையாது. எனக்குப் பிடித்த உடைகளை விரும்பித் தேடி வாங்கிக் கொள்வேன். மிகவும் விலையுயர்ந்த உடைகளை நான் அதிகம் விரும்புவதில்லை. சாதாரண விலையில் விதவிதமான உடைகள் அதிகமாக வாங்குவேன். டிரஸ்ஸைப் பொறுத்தவரை கணக்கே கிடையாது. சில சமயம் சில உடைகள் பிடிக்காமல் போய் விடும். அவைகளை உடுத்தவே மாட்டேன். அம்மாவிடம் சாக்கு போக்கு சொல்லி அவைகளை ஒதுக்கி வைத்து விடுவேன். பொருட்களை நான் தொலைப்பது எப்போதாவதுதான். நான் தொலைத்து ரொம்பவும் வருந்தியது போன வருடம்தான். என் புத்தகப் பை காணாமல் போய் விட்டது. ரொம்பவும் தேடினேன். முதல்லே இதை வீட்டிலே சொல்லக் கூட நான் ரொம்ப பயந்தேன். மறுநாளே என் புத்தகங்கள் கிடைத்து விட்டன. ஆனால் என்னோட பை, கால்குலேட்டர் ஓரளவு பணம் எல்லாமே போய் விட்டது. தேடிப் பார்த்த பின்பும் கிடைக்காத ஒரு பொருளைப் பற்றி நினைத்து வருந்திக் கொண்டிருப்பதில் என்ன பயன்?''

**ஐஸ்வர்யா ஸ்ரீராம்**
**(10ம் வகுப்பு மாணவி)**

**''தோ**ழிகளின் பிறந்த நாட்களின் போது 'கிப்ட்' தர, பரிசு வாங்கும் சக மாணவிக்கு 'பார்ட்டி' நடத்த இதுபோன்ற சந்தர்ப்பங்களுக்கு செலவழிக்க 'பாக்கெட் மணி' நிச்சயம் வேண்டும். நான் அதிகம் பணம் கையில் வைத்துக் கொள்ளாமல் உண்டியில் போட்டு சேமிப்பேன்.

பொருட்கள் எங்கள் கவனக்குறைவினால் தொலைந்து போகும் நேரம் வருந்தத்தான் செய்கிறோம். தேடியும் பார்க்கிறோம். எங்களைத் திருத்திக் கொள்ளவும் முயல்கிறோம். அதே நேரம் எங்களையும் மீறி மற்றவர்கள் திருடி விடும் போது என்ன செய்வது? நாங்களே மனம் நொந்து வரும் போது பெற்றோர்கள் திட்டினால் மனம் வெறுப்படையத்தானே செய்யும்? நாங்கள் பொருட்களைத் தொலைக்கும்





போது இப்படித் திட்டும் பெற்றோர்களை அவர்களே சில பொருட்களைத் தொலைத்து விட்டு வரும் போது யார் திட்டுவது? உடைகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அவர்கள் எங்களுக்குத் தர வேண்டும். லேட்டஸ்டு பேஷன் டிரஸ்கள் விதவிதமாக வாங்கிச் சேர்க்கப் பிடிக்கும். பெரிய கடை என நான் தேடிப் போவ தில்லை. போட்டுக் கொள்வதை விட வித விதமான உடைகளைச் சேர்த்து வைப்பது தான் அதிகம் பிடிக்கும்.''

### திருமதி லட்சுமி சேஷாத்ரி
**(டீன் ஏஜில் பேத்தி உடையவர்)**

''இப்படி ஒரு நிலைமைக்கு யார் காரணம்? நிச்சயமா குழந்தைகள் இல்லை. இன்றைய நிலைமையிலே கணவன், மனைவி ரெண்டு பேருமே சம்பாதிக்கி றார்கள். பணம் தாராளமாகப் புழங்குவ தால் 'பாக்கெட் மணி' என தாராளமாக கொடுத்துப் பழக்கப்படுத்துவது யார்? அப்போ நாங்க குழந்தைகளை வளர்த்த காலத்திலே குழந்தைகளுக்கு என்ன வேணுமோ எல்லாத்தையுமே நாங்களே (பிஸ்கெட், சாக்லேட் முதல் பேனா, பென்சில் வரை) வாங்கிக் கொடுத்து விடு வோம். குழந்தைகள் கையிலே பைசா என்பதையே கொடுக்க மாட்டோம். எந்தவித கெட்ட பழக்கமும் இல்லாம குழந்தைகள் கஷ்டங்கள் உணர்ந்து பொறுப்பு தெரிந்து வளர்ந்தனர். ஆனால் இன்று...? ஏதோ தாங்கள் குழந்தைகளாக இருந்த போது எதையுமே அனுபவிக்காத மாதிரி 'நாங்க அனுபவிக்காதவைகளை குழந்தைகளாவது அனுபவிக்கட்டுமே' என்று எண்ணிக் கொண்டு, அவர்கள் கேட் பதையெல்லாம் கொடுத்து விடுகிறார்கள். பெற்றோர்களின் அருமையோ, அவர்கள் பணம் சம்பாதிக்கப் படும் கஷ்டங் களையோ, பணத்தின் மதிப்பையோ தங்கள் குழந்தைகளுக்கு உணர்த்த வேண்டி யது இன்றைய நடுத்தர வயதுப் பெற் றோர்களின் கடமைதானே? அதை அவர் கள் என்றுமே நினைவில் கொள்ள வேண் டும்.''

**- வைதேகி தேசிகன்**

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் விவேகானந்தா கல்வி நிலையத்தில் தபால் மூலம் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்.
இப்பயிற்சிக்கான கட்டணம் மற்றும் இதர விவரங்களையும் முன்பக்கத்தில் உள்ள என் முகவரிக்கு அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன்.
இப்படிக்கு

पोस्ट कार्ड POST CARD

नशे का
अंजाम
मौत का पैगाम




விவேகானந்தா கல்வி நிலையம்
9. நடேசன் தெரு,
தியாகராய நகர்,
சென்னை -17.
| 6 | 0 | 0 | 0 | 1 | 7 |
|---|---|---|---|---|---|

पिन PIN

Thooriga 389/F30

**ஒரு போஸ்ட் கார்டு இரண்டு இலட்சத்திற்கும் மேற்பட்டவர்களின் வாழ்க்கையில் முன்னேற்றத்தை ஏற்படுத்தியுள்ளது! வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அதுதான்.**

வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பமுடையவரா நீங்கள்?

ஆங்கில மொழியில் போதிய புலமையின்மை உங்களது முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்து வருகிறதா?

கவலையை விடுங்கள்.

விவேகானந்தா கல்வி நிலையம் அளித்து வரும் ஓர் எளிய பயிற்சியினை நீங்கள் மேற்கொண்டால் போதும்

தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் இப்பயிற்சியின் மூலம் நிச்சயம் நிறைவேறும்!

• வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் பயிற்சியினை நீங்கள் மேற்கொள்ளலாம்.

இப்பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்!

மேலும் விபரமறிய ஒரு போஸ்ட் கார்டில் "நான் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்" என்று குறிப்பிட்டு, உங்களது முகவரியை தெளிவாக எழுதி, கீழ்க்காணும் கூப்பனை ஒட்டி இன்றே அனுப்புங்கள்.

பயிற்சிக்கான கட்டணம் மற்றும் இதர விபரங்களை உடனே அனுப்பி வைக்கிறோம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

என்ன? எங்கே கிளம்பி விட்டீர்கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே? உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கி விட்டது!




**விவேகானந்தா கல்வி நிலையம்**

முகவரி கூப்பன்

விவேகானந்தா கல்வி நிலையம்
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை - 600 017.

M.M.

# என்ன ஆச்சு தெரியுமா?

## குஜ்லித் தெருவில் ஒரு மண்டபம்!

என் கணவரின் மாமா பிள்ளையின் திருமணத்திற்காக நாங்கள் குழந்தைகளுடன் திருச்சிக்கு சென்று கொண்டிருந்தோம். குழந்தைகளுக்கு ஸ்கூல் விடுமுறை இல்லாத காரணத்தால் எந்த விசேஷத்திற்கும் அவர்களை அழைத்துக் கொண்டு போனதில்லை. ஆனால் இம்முறை லீவாக இருந்ததால் அவர்களும் மிகவும் குதூகலத்துடன் இந்தக் கல்யாணத்தை நன்றாக என்ஜாய் பண்ண வேண்டுமென்று ஆவலுடன் இருந்தனர்.

பஸ் புறப்பட்டு ஒரு மணி நேரம் கழிந்து என் கணவர், ''கல்யாண பத்திரிகையை எடு. எந்த இடத்தில் 'கல்யாண மண்டபம் இருக்கிறது?' என்று பார்க்கலாம்'' என்று கூற, 'எனக்கோ தூக்கி வாரிப் போட்டது. நான் கிளம்பும் அவசரத்தில் பத்திரிகையை எடுத்து வைத்துக் கொள்ளவில்லை; எப்பொழுதும் என் கணவரே இவையெல்லாவற்றையும் கவனித்துக் கொள்வதால் நான் பத்திரிக்கை பற்றிய நினைவு கூட இல்லாமல் கிளம்பி விட்டேன்.

அவரும் அவசரமாகக் கிளம்பியதில் நான் எடுத்து வைத்திருப்பேன் என்று நினைத்துக் கொண்டாராம். கல்யாண மண்டபத்தின் பெயரும் ஞாபகம் இல்லை; அந்தத் தெருவின் பெயரும் நினைவிலில்லை; காரணம் பத்திரிக்கை ஒரு மாதத்திற்கு முன்பே வந்து விட்டது.

என் கணவரோ ருத்ர மூர்த்தியாகி விட்டார். 'ஒன்றுமே ஞாபகம் வைத்துக் கொள்ளாமல் எப்படி ஜாலியாகக் கிளம்பினீர்கள்?' என்று டோஸ் வேறு. திருச்சியில் இறங்கி ஒரு ஹோட்டலில் தங்கி விட்டு காலையில் எழுந்து நம் ஊரைப் பார்க்கத் திரும்ப வேண்டியதுதான் என்று சொல்லி விட்டார். என் குழந்தைகள் முகத்தில் கவலையும், ஏமாற்றமும் போட்டி விட்டன. அவர்கள் இருவரும் சுவாமியை வேண்டிக் கொள்ள ஆரம்பித்து விட்டனர்.

இரவு பத்து மணிக்கு மேல் திருச்சியில் உள்ள அத்தனை மண்டபங்களையும் தேடிப் பார்க்க முடியுமா? என்ன செய்வது என்று கலங்கிய நிலையில், எனக்குத் தெருவின் பெயர் வித்தியாசமாக, ஒரு முஸ்லிம் பெயர் மாதிரி படித்த ஞாபகம் வந்தது. பஸ்ஸ்டாண்டில் இறங்கி ஆட்டோ டிரைவர் ஒருவரிடம் எங்கள் நிலையை எடுத்துக் கூறி கல்யாண மண்டபங்கள் நிறைந்திருக்கும் தெருக்களின் பெயர்களைக் கூறுமாறு கேட்டோம். மற்ற டிரைவர்களும் சேர்ந்து ஒவ்வொரு பெயராகச் சொல்லிக் கொண்டு வர, ஒருவர் கூறிய 'நடு குஜ்லித் தெரு' என்ற பெயரைக் கேட்டதும் எனக்கு



* சந்திரா



* வசந்தா

அதுவாகத்தான் இருக்கும் என்று தோன்றியது.

அங்கே போய் பார்த்து விடலாம் என்று ஆட்டோவில் இரண்டு மண்டபங்களுக்குச் சென்று அங்கு எங்களுக்குத் தெரிந்த முகங்கள் காணப்படாததால், கடைசி முயற்சியாக, 'கஸ்தூரி பாய்' கல்யாண மண்டபத்துக்குச் சென்று இறங்கும் போதே மாப்பிள்ளையே வந்து ''வாருங்கள், வாருங்கள்'' என்று வரவேற்றபோது நாங்கள் அடைந்த நிம்மதிக்கும், சந்தோஷத்திற்கும் அளவேயில்லை. அந்த அனுபவத்திலிருந்து கல்யாணம் என்றவுடனே பத்திரிகையை ஹாண்ட்-பாக்கில் வைத்துக் கொள்ளத் தவறுவதில்லை.

குழந்தைகளும், 'நடு குஜ்லித் தெருவில் பிஜ்லி வெடி' வெடிக்கலாமா என்று புதுக் கவிதை பாடி என் கணவரின் கோபத்தைக் கேலி செய்வது வழக்கமாகி விட்டது.

- சந்திரா





## கங்கா ஸ்னானம் செய்த பிறகு!

**1952** - ஆம் வருடம் நானும் என் கணவரும் குடும்ப சகிதமாக காசிக்குச் சென்றிருந்தோம். என் தங்கையின் திருமணம் அங்கு நடைபெற்றது. மைசூர் சத்திரத்தின் எதிரில் ஒரு மடத்தில் தங்கினோம். கோவில்கள், ஸ்னான கட்டங்கள், கடைவீதி என்று சுற்றிப் பார்த்தோம். ஒரு நாள் பகல் தெருவில் வரும் ஒரு புடைவைக்காரனிடம் ஒரு வாயில் புடைவை விலை விசாரித்தேன். (அப்போதே நான் சென்னையில் பிரவேசிகா படித்தவள்) புடைவை அழகாக பச்சையில் சின்னச் சின்ன பூக்கள் போட்டிருந்தது. எனக்கு அந்த ஜூன் மாத வெயிலுக்கு மிகவும் பிடித்திருந்தது.

கூசாமல் பத்து ரூபாய்க்குக் கேட்டு விட்டேன். அவனும் சற்று பேரம் செய்து பத்து ரூபாய்க்கே புடைவையைக் கொடுத்து விட்டான். என் உறவினர்கள் என் வியாபாரத் திறமையை மெச்சிக் கொண்டார்கள். என் கணவரும் சென்னையிலுள்ள உறவினர்களுக்கு அதுபோல புடைவைகள் வாங்க ஐம்பது ரூபாய் கொடுத்து விட்டார்.

நான் புடைவையை அன்றே உடுத்துக் கொண்டு ஊர்வலம் வந்தேன். மறுநாள் புடைவை கசங்கி விட்டதால் நனைத்து விடலாம் என்று கங்கையில் குளிக்கப் போனேன். குளிக்கும் போதே எனக்குப் புடைவையில் கிழிசல் இருப்பது போலத் தோன்றியது. எங்கும் மாட்டவில்லை, எப்படி? என்று யோசித்தேன். என் உறவினர்கள் கரை ஏறி வீட்டுக்குப் போய்



விட்டார்கள். என்னால் கரை ஏறவே முடியவில்லை. ஏனென்றால் புடைவை பூராவும் கந்தல்தான். வெகு நேரமாகியும் நான் வரவில்லையே என்று என் கணவர் என்னைத் தேடி வந்தார். நான் விஷயத்தைச் சொல்லி வேறு புடைவை வீட்டிலிருந்து எடுத்து வந்து கொடுக்கச் சொன்னேன். கந்தலை கங்கையிலேயே விட்டு விட்டு மாற்றுப் புடைவையை உடுத்திக் கொண்டு கரை ஏறினேன். இன்று வரை நான் வாசலில் துணி வாங்குவதில்லை.

- லலிதா நாராயணன்.

## நண்பரின் குழந்தை!

அன்று ஞாயிற்றுக் கிழமை. மாலை ஆறு மணி. அதிசயமாக தொலைக்காட்சி அன்று ஒளிபரப்பிய ஒரு நல்ல திரைப் படத்தில் ஆழ்ந்து, ரசித்துக் கொண்டிருந்த எங்களை, என் கணவரின் அலுவலக நண்பர் குடும்பத்தின் வருகை சற்று எரிச்சல் படுத்தினாலும், புன்சிரிப்போடு வரவேற்றோம். சாதாரணமாகப் பலர் ஞாயிற்றுக் கிழமை மாலை நேரங்களில்தான் நண்பர்களின் வீடுகளுக்குச் செல்லும் வழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள்.

அன்றும் நாங்கள் திரைப்படத்தில் ஒரு கண்ணும், நண்பரின் பேச்சில் ஒரு காதுமாக இருந்தோம். அவருடைய ஆறு வயதுக் குழந்தை ரொம்ப விஷமம் போலும். அந்தக் குழந்தை மெதுவாக என் மகனின் படிக்கும் அறைக்குள் செல்ல அதன் கண்களில் பட்டது அவனது ரிகார்ட் நோட்டும், ஸ்கெட்ச் பேனாவும்! ரொம்ப குஷியாக, ''ஐ! நான் படம் வரையப் போகிறேனே?'' என்றபடி வெளியில் வந்த குழந்தையின் கைகளில் தன் நோட்டையும், ஸ்கெட்ச் பேனாவையும் பார்த்த என் II - ம் வகுப்பு படிக்கும் மகனின் முகத்தில் வந்ததே கோபம். அதனைக் கவனித்த நான் சட்டென்று நோட்டை வாங்கி விட்டேன். ஸ்கெட்ச் பேனாவை கொடுக்க மறுத்து விட்டது. அவரோ, ''அண்ணாவிடம் பேப்பர் வாங்கி படம் வரை!'' என்கிறார். சாதாரணமாக என் மகன் வீட்டிற்குள்ளேயே தன் பொருட்களை யாரும் தொட விட மாட்டான். அவன் கண்ணில் கண்ணீரே வந்து விட்டது. என் கணவர் வேறு நேரம் தெரியாமல், 'இந்தா பேப்பர்; எங்கே படம் போடு பார்க்கலாம்' என்று சொல்ல, அந்தக் குழந்தை ஒவ்வொரு பேனாவாக எடுத்து, தன் பலம் முழுக்க வைத்து அழுத்தி எழுத, பேப்பர் கிழிந்து தரையெல்லாம் கலர்க் கோடு!



என் மகனோ பின்னால் நின்றவாறு, 'அந்தப் பேனாவை நீ வாங்கித் தருகிறாயா? நான் போய்ப் பிடுங்கட்டுமா?' என்று என்னை பிளாக் மெயில் செய்ய, நான் மெதுவாக, 'இங்க பார், அண்ணாவுக்கு டிராயிங் போடணுமாம். கொடுப்பா' என்று கேட்க, என்னை ஒரு விரோதப் பார்வை பார்த்துக் கொண்டே பேனாவைக் கொடுத்தது!

அடுத்து சுற்றிலும் நோட்டம் விட்ட குழந்தையின் கண்களில் பட்டது ஷோ கேஸ்! ஒரு ஸ்டூலில் ஏறி, ஒவ்வொரு பொம்மையாகக் கீழே எடுத்து அடுக்க ஆரம்பித்து விட்டது. நண்பரோ, 'அதெல்லாம் தொடாதே' என்று சொல்லாமல், 'உடைக்காமல் விளையாடு' என்கிறார். எங்கள் வீட்டு ஷோகேஸில் பாதி பொம்மைகள் என் குழந்தைகள் தம் கையாலேயே செய்த பேப்பர், அட்டை பொம்மைகள். என்

பெண்ணிற்கு அதற்கு மேல் பொறுக்க வில்லை. எல்லாவற்றையும் கிடுகிடு வென்று எடுத்துத் திரும்ப ஷோகேஸில் வைத்து விட்டு கதவை மூடியவள் திரும்பு முன், அந்தக் குழந்தை அவளுடைய டிரெஸ் ஸிங் டேபிள் முன்! தானாகவே கண்ணாடி முன் நின்று பவுடர், லிப்ஸ்டிக் எல்லா வற்றையும் ஒரு கை பார்த்து விட்டு, என் பெண்ணின் பெருமுயற்சியால் வெளியில் வந்தது!

வீட்டைச் சுற்றிப் பார்த்தவர்களோடு, கூட தோட்டத்திற்கு வந்த குழந்தை, அங்கு புதியதாக நட்டிருந்த செடிகளை எல்லாம் பிய்த்துப் போட, என் மகன் 'உர்'ரென்ற முகத்துடன் பின்னால் எல்லாவற்றையும் நட்டுக் கொண்டே வந்தான்!

நண்பரும் அவர் மனைவியும் ரொம்ப பெருமையாக, அவன் ரொம்ப விஷமம். வீட்டில் ஒரு நிமிடம் சும்மா இருக்க மாட் டான். சமாளிக்கவே முடியாது' (பின்னா லிருந்து என் பிள்ளையின் கமெண்ட்: 'இவர் களால் சமாளிக்க முடியாமல், நாமும் கொஞ்சம் கஷ்டப்பட இங்கு அழைத்து வந்து விட்டார்கள் போலிருக்கு!') ஒரு வழி யாக இரண்டு மணி நேரம் எங்கள் எல்லார் கவனத்தையும் தன்மேல் திருப்பிக் கொண்ட அந்த வி.ஐ.பி. ஜெம்பினார்! எங்க ளுக்கு அப்பாடா என்று இருந்தது!

குழந்தைகள் கட்டியாகவும், துறுதுறுப் பாகவும், ஆக்டிவ்வாகவும் இருக்க வேண்டி யதுதான். அடுத்தவர் வீடுகளுக்கு அழைத் துச் செல்லும்போது அந்தக் குழந்தை விஷமம் செய்யாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது பெற்றோர் கடமையன்றோ? பெற்றோர்கள் தம் குழந்தைகளை நண்பர், உறவினர் வீடுகளுக்கு அழைத்துச் செல்லும் போதே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் சொல்லிக் கொடுத்து அழைத்து வர வேண்டும். அது செய்யும் விஷமத்தில் மகிழ்ந்து, எங்கள் குழந்தை அப்படித்தான்' என்று பெருமையாக அந்தக் குழந்தைகள் எதிரிலேயே கூறுவது, அந்தக் குழந்தைகளின் விஷமத்திற்கு 'லைசென்ஸ்' கொடுத்தது போலல்லவா ஆகிறது? இக் காலக் குழந்தைகள் புத்திசாலிகள். நாம் சொன்னால் கண்டிப்பாக புரிந்து கொள் வார்கள். இத்தனை விஷமம் செய்த அந்தக் குழந்தை கடைசிவரை தன் பெயர், வகுப்பு, பள்ளி பெயர் எதுவும் சொல்ல மறுத்து விட்டது!

- ராதாபாலு.

இரண்டு வருடங்களுக்கு முன் என் பேத்தி கல்யாணத்தன்று. இரவு டின்னருக்கு இலைக்குப் போட மைசூர் பாகு செய்தார் சமையல்காரர். ஞாயிற்றுக்கிழமை யாத லால், விருந்தினர்கள் எல்லோரும் காலை முகூர்த்தத்துக்கே வந்துவிட்டுப் போய் விட்டதால், இரவு சாப்பாட்டுக்கு எதிர் பார்த்த அளவு ஜனங்கள் வரவில்லை. ஏகப் பட்ட மைசூர் பாகு, (சரியாகக் கிளறு படாமல், மெத்து மெத்தென்று) மிச்சம். ஒரு பெரிய அலுமினிய டப்பா நிறைய, நல்ல நெய் சொட்டச் சொட்ட மொத்தையாய் வைத்துவிட்டுப் போய்விட்டார். வீட்டுக்கு வந்து சாமான்களுடன் வந்த டப்பாவைத் திறந்து பார்க்க திக்கென்று இருந்தது. இதை என்ன செய்வது எப்படிச் செலவழிப்பது? உடம்பிலோ ஒரே அசதி. பேசாமல் மூடி வைத்து விட்டு, மற்ற வேலைகளை கவனிக் கலானோம். அதைத் தூர எறியவும் (5, 6 நாட்கள் கழித்துத் திறந்து பார்த்தால், நன் றாக இருந்தது) மனமில்லை. கெட்டுப் போகவில்லை. ஏன் போகும்? அளவுக்கு மீறி யல்லவா நெய்யும் சர்க்கரையும் சேர்க்கப் பட்டிருக்கிறது!

ஒரு கிலோ பொட்டுக்கடலையை மிக்ஸியில் அரைத்து மாவாக்கி, கூட ஏலப் பொடி, ஜாதிக்காய் தூள், வறுத்த முந்திரி திராக்ஷை எல்லாம் அதில் போட்டுக் கலந்து உருண்டைகளாகப் பிடித்தேன். கிட்டத் தட்ட 120, 140 லட்டுக்கள் வந்தன. வெகு ருசி. நல்ல மணம் (நல்ல நெய்யாயிற்றே) இது ஏதோ புது மாதிரியான லட்டு என்று எல்லோரும் விரும்பிச் சாப்பிட்டார்கள். கல்யாணம் நடந்த வீடானதால், பார்க்க வருபவர்களுக்கு இனிப்பாகக் கொடுக் கவும் சௌகர்யமாக இருந்தது.

- லலிதா வைத்யநாதன்.

நாம் காய்கறிகளை சமைத்து உண வாகக் கொள்கிறோம். ஆனால் பழங் களை அப்படியே சாப்பிடுகிறோம். ஆகவே அவற்றை நன்றாகக் கழுவி பிறகு சாப்பிடுதல் வேண்டும். அவை களில் கிருமிகள் இருக்கும் என்பது மட்டும் காரணமல்ல, அவற்றின் மீது பூச்சிகள் பரவாமல் இருக்க மருந்துகள் தெளிக்கப்பட்டிருக்கலாம். அவைகள் நமக்கு மிகவும் தீமையை உண்டு பண் ணவும் கூடும்.

- ஆர். அஜிதா.



"அழகான கூந்தல் எனக்கு
ரொம்ப ஈஸியா கெடச்சுடல.

அப்புறமாதான் தெரிஞ்சது...



## ....அதுக்கு எந்த ஷாம்ப்பூவும் தரமுடியாத ஸ்பெஷல் பராமரிப்பு கொடுக்கணும்னு."

## "அதனாலதான் ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மென்ட்டோட புதிய இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனரை தேர்ந்தெடுத்தேன்"

"அதுக்கு முன்னால் எங்கூந்தலும் ஒரே குழறுபடியாத்தான் இருந்தது. சிக்கலா, சொரசொரன்னு... ப்யா நெனச்சு பாக்கவே முடியல. என்னென்னமோ போட்டு பாத்தேன் ஒண்ணும் சரி வரல.

அப்புறமாதான் கண்டு பிடிச்சேன் எங்கூந்தலுக்கு வேற எந்த ஷாம்ப்பூவும் தரமுடியாத ஸ்பெஷல் கவனிப்பு கொடுக்கணும்னு. அதுக்காக நான் செஞ்சது ப்யூட்டி பார்லர்ல என்ன செய்வாங்களோ அது. ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மென்ட் இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனர். இதில் பேந்தனால்ங்கற ஒரு சாதனைக் கண்டுபிடிப்பு இருக்கு. இது கூந்தலுக்குள்ளே ஒவ்வொரு இழையிலேயும் ஊடுருவி உள்ளேயே வேலை செய்யும். அதன் பலன் வெளியில தெரியும். அழகான பளபளப்பான கூந்தல்ல. நிஜமாவே ஸலோன் அழகு.

நான் இந்த இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனரை வாரம் ஒரு தடவையாவது பயன்படுத்தறேன். நீங்களும் போட்டுப்பாருங்க. அப்புறமா உங்களுக்கும் அழகான கூந்தல் கெடச்சப்புறம் என்ன மறுபடியும் நெனச்சு பாருங்க. என்ன சரியா?"

**ப்யூட்டி பார்லர் பலன் பெற நிபுணர்கள் பயன்படுத்துவது போல் இந்த கண்டிஷனரைப் பயன்படுத்துங்கள்**

1. முதலில் ஷாம்ப்பூ போட்டு தலையைக் கழுவவும்.
2. உள்ளங்கையில் கண்டிஷனரை எடுக்கவும். தண்ணீர் சேர்க்கக்கூடாது.
3. கண்டிஷனரை கொண்டு கூந்தலில் இதமாய்த் தேய்க்கவும். நுனிகளில் அதிகமாக.
4. பேந்தனால், கண்டிஷனர் சேர்ந்து வேலை செய்ய இரண்டு நிமிடம் கூந்தலை அப்படியே விடவும் பேந்தனாலின் டிப் ஆக்ஷன் கூந்தலினுள் ஊடுருவி உள்ளே ஊட்டமளிக்கும்.
5. பிறகு வெதுவெதுப்பான நீரில் அலசி, தலை ஈரமாக இருக்கும்போதே சீவவும்.





6. பிறகு பாருங்கள். உங்கள் கூந்தல் சேதத்திலிருந்து பாதுகாப்பு பெற்றிருக்கும். வேண்டிய ஊட்டம் பெற்று பளபளக்கும்.

**உங்கள் கூந்தலை ஒரு நிபுணரைப்போல் பராமரியுங்கள்**

| ஷாம்ப்பூ வகை | கூந்தல் வகை | தரும் பலன்கள் |
|---|---|---|
| பீச் ஸன்ஸில்க். புரோட்டீன், பேந்தனால் உள்ளது | பிளவுபட்ட நுனிகள் சேதமான கூந்தல் | பிளவுபட்ட நுனிகளை சரிசெய்கிறது |
| பச்சை ஸன்ஸில்க். விட்டமின் ஈ, பேந்தனால் உள்ளது | உறுதியற்ற சாதாரண கூந்தல் | கூந்தலுக்கு உறுதி தருகிறது |
| இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனர். பேந்தனால் உள்ளது | உலர்ந்த சொரசொரப்பான சிக்கலான கூந்தல் | சேதத்திலிருந்து காத்து கூந்தலை பாதுகாக்கிறது |

Neelam

# ஸன்ஸில்க்
ஸலோன்
ட்ரீட்மென்ட்

அழகான கூந்தலுக்கு நிபுணர் பராமரிப்பு.

HTA 1622

தேர்ந்தெடுத்த நகரங்களில் கிடைக்கிறது

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

ஒரு கத்தரிக்காயின் விலை 72 ரூபாயன்னு சொன்னா நம்புவீங்களா?

நம்ப மாட்டீங்க.

எனக்குத் தெரியும் நிச்சயமா, ''எந்த ஊர்ல இந்த விலை?''ன்னு அடுத்த கேள்வி கேட்பீங்க.

அண்டார்டிகாவிலோ அமெரிக்காவிலோ அல்ல இந்த விலை. நம்ம ஊர்ல... அதான் நம்ப மெட்ராஸ்லே.... வேளச்சேரிக்குப் பக்கத்திலே மேடவாக்கம்னு ஒரு இடம் இருக்கே... அங்கதாங்க இந்த விலை....

அக்கிரமமா இல்லை....?

அக்கிரமந்தாங்க?

என்ன செய்யறது?




கத்தரிக்காயின் மேலே எனக்கு ஆசையில்லை... என் பெண்டாட்டிக்குக் கொள்ளை ஆசை.

கத்தரிக்காய்ன்னதும் கல்கியோட நினைவு வர்றதுங்க. கத்தரிக்காய் தனக்குப் பிடிக்கும்னு ஏதோ ஒரு கட்டுரையிலே அவரு எழுதிட்டாராம்... அதைப் படித்த ஒரு வாசகி ஒருவர் அதை ஆயுட் காலம் வரை நினைவு வைத்திருந்து ஏதோ ஒரு சந்தர்ப்பத்திலே அந்த வாசகியின் வீட்டிலே ஒன்றிரண்டு நாட்கள் தங்க நேர்ந்த போது கத்தரிக்காயையே விதம் விதமாக சமையல் செய்து வேளா வேளைக்கு இலையில் பரிமாறி தங்கியிருந்த நாட்கள் முழுவதும் வேறு காய்கறி எதையுமே கண்ணிலே காண்பிக்கவில்லையாம்.

கல்கி அந்த அனுபவத்தை கதறிக்கதறி வேறொரு சந்தர்ப்பத்தில் எழுதி இருந்தார்.

அப்படிப்பட்ட கல்கி மகத்துவம் அடைந்த அந்தக் கத்தரிக்காயின் மேல் என் பெண்டாட்டிக்குக் கொள்ளை ஆசை. நானும் அவ்வப்போது ஆபீஸ்லேர்ந்து வரும் போதெல்லாம் அவளுக்கு மல்லிகைப் பூ வாங்கிக்கிட்டு வர்றதில்லை.

அரை கிலோ கால்கிலோன்னு கத்தரிக்காய்தான் வாங்கிட்டு வருவேன்.

அதைக் கண்டதும் பட்டுப் புடைவை வாங்கி கொடுத்தாற் போல அவளுக்கு சந்தோஷம் ஏற்படும்ங்க.

நமக்கு என்ன போச்சு - இரண்டு ரூபாயோ மூணு ரூபாயோ தானே செலுவுன்னு நானும் அடிக்கடி கத்தரிக்காய் வாங்கிக்கிட்டு வருவேன்.

அதோட அவ ஆசை நின்று இருக்கக் கூடாதோ?

திடீர்னு நம்ம 'தோட்டத்திலேயே கத்தரிக்காய் செடி வைச்சா ஃப்ரஷ்ஷா அப்பப்ப வேணும்கிற போது பறிக்க சமையல் செய்யலாமே'ன்னு சொன்னா.

''ப்ரஷ்ஷா இருக்கறதுக்குத்தான் கடன் வாங்கி ஃப்ரிஜ் வாங்கி வைச்சிருக்கோமே... அதிலே வைச்சிருந்து வேணுங்கிற போது எடுத்து சமையல் செய்யக் கூடாதா?'' என்றதுக்கு அவள், ''நம்ம தோட்டத்திலே காய்க்க அதைப் பறிக்க

சமையல் பண்றது மாதிரி வருமான்னு'' என்னை மடக்க நானும் கத்தரிக்காய் பயிர்ச் செலவு செய்ய தீர்மானித்தேன்.

'பயிர்ச் செலவு'ன்னு சொல்றதுக்கு அர்த்தம் எனக்கு அப்பத்தாங்க புரிய ஆரம் பித்தது. பயிர் செய்தால் செலவு ஆகும்னு.

நம்ம 'தோட்டம், தோட்டம்'ன்னதும் ஏதோ எட்டு ஏக்கரா பத்து ஏக்கரா பூமின்னு எதுவும் தப்பா நினைச்சிடாதீங்க....

இந்த மேடவாக்கத்திலே எழுபதாம் வருஷத்திலே அரைகிரவுண்டு பத்தா யிரம்னு ஒரு அரைகிரவுண்டு வாங்கிப்

# ஒரு கத்திரிக்காயின் விலை ரூ.72

போட்டிருந்தேனுங்க. அதிலேதான் தொண் ணூத்திரண்டாம் வருஷத்திலே எங்கெல் லாம் கடன் வாங்க முடியுமோ அங்கெல் லாம் கடன் வாங்கி ஒரு எழுநூறு சதுர அடி யில் ஒரு சிறிய வீடு கட்டினேனுங்க. அதிலே அவளுக்கு ரொம்பப் பெரு மைங்க... பெரிய பெரிய பணக்காரங்க ளெல்லாம் ஃப்ளாட்டுகள்தான் வாங்க றாங்க.... நாம்ம 'வீடு' கட்டி கத்தி 'நிறைய'(?) இடம் இருக்குன்னு ரொம்ப ரொம்ப பெருமைங்க...

அதுதாங்க... அந்தக் கோவணம் அளவு சுத்தி இருக்கிற இடத்தை - ப்ளானில் காட்டி யபடி இருக்க வேண்டிய இடத்தை கொஞ்சம் 'இஸ்கி' கார்பரேஷன்காரன் வந்து அதைக்கண்டு பிடித்த போது அவரைக் கொஞ்சம் கெஞ்சி கொஞ்சி 'கவனித்து' அனுப்பிய - அந்த இடத்தைத் தாங்க என் பெண்டாட்டி பெருமையா தோட்டம்னு சொல்றது.

'பெண்டாட்டி சொன்னா கேட்டுக் கணும்னு' படம் வேற எடுத்திட்டாங் களா.... அப்புறம் அவ பேச்சைக் கேட்காம இருந்தால் சரியா இருக்குமா.... அதனால வீட்டு தோட்டத்திலே கத்தரிச் செடி வைக் கிறதுன்னு தலையாட்டிட்டேனுங்க.

உஸ்மான் ரோட்டிலே தங்க மாளி கைக்கு எதிர்த்தாப்பலே இருக்கிற பட்டாணி கடைக்குப் பக்கத்திலே ஒரு கடையிலே விதைகள் எல்லாம் விக்கறது நினைவுக்கு வந்ததுங்க.

மேடவாக்கத்திலே இருந்து ஸ்கூட் டரை எடுத்துகிட்டுப் போய் விதையை வாங்கி வந்தேனுங்க.

விதையை வாங்கி வந்தபோது அது முளைக்குமா, முளைக்குமான்னு ஒரு ஆயிரம் தடவை கேட்டப் பிறகுதாங்க அந்த கடைக்காரர் கிட்டே இரண்டு ரூபாய் கொடுத்து விதை வாங்கினேனுங்க.

''நிச்சயமா முளைக்கும்னு'' சத்தியம் செஞ்சாருங்க அந்த கடைக்காரர். விதை வாங்கியாச்சு.... இனி விதைக்க வேண் டியது தானேங்க...

'சைட் செலக்ஷன்' செய்ய வேண் டாமா?''

இருந்த 'தம்மாத்தூண்டு' இடத்திலே ரெண்டு தென்னங்கன்னு வைச்சிருக் கேனுங்க வீட்டோட ஒரு பக்கத்து சைடுலே...

இன்னொரு சைடிலே கொஞ்சம் நந்தி யாவட்டை, வாடாமல்லி பூக்குதுங்க...

வீட்டுக்கு முன்னாடி தாங்க ஒரு மூணடிக்கு மூணடி இடம் சும்மா இருந்த துங்க.

அதிலே விதையைப் போடலாம்னு மண்வெட்டியை எடுத்துத் தோண்டி னேனுங்க.

கமலநாதன்





21 புள்ளி 11 – ல் முடிய இடைப்புள்ளி

– ஜானகி

தோண்டத் தோண்ட 'டங்....டங்'ன்னு சப்தம் வந்ததுங்க....

ஏதாவது புதையல் இருக்கான்னு சந்தேகம் வந்ததுங்க.

இருந்தாலும் அப்படி எல்லாம் அதிர்ஷ்டம் எனக்கு வராதுன்னு எனக்குத் தெரியுமுங்க...

அதனால இன்னும் கொஞ்சம் ஆழமாத் தோண்டினேனுங்க...

வீடு கட்டின போது வீட்டின் முன்பு கொட்டி இருந்த கருங்கல் ஜல்லிகள், செங்கல் ஜல்லிகள்தாங்க அந்த சப்தத்தை உண்டாக்கியது.

கஷ்டப்பட்டு முடிஞ்ச வரை அதை எல்லாம் எடுத்தேனுங்க.

மண்ணை கையால் சமமாக்கி கத்தரிக்காய் விதைகளைத்தூவி தண்ணீர் தெளித்தேனுங்க.

எனக்கு அந்தக் காரியத்தை செய்த போது என் மனசிலே நான் ஒரு பெரிய 'வி.ஐ.பி'ன்னு தோணிச்சுங்க. ஏன்னா நான் அடிக்கடி டிவியிலே ஏதோ ஒரு 'வி.ஐ.பி' ஒரு செடி நட்டு பூவாளியிலே தண்ணீர் விடறதைப் பார்த்து இருக்கேனுங்க. எங்க வீட்டிலே பூவாளி இல்லைங்க..... அதனாலே நான் என்ன செய்தேன் தெரியுமா?... என் பெண்டாட்டி புளிகரைச்சு வடிகட்டுவாளே 'அலுமினியத் தட்டு' அந்த ஓட்டை ஓட்டையாக இருக்கிற தட்டு வழியாத் தண்ணீர் ஊத்தினேனுங்க.

என் பெண்டாட்டி என்னைப் பார்த்து சிரிச்சா... அது ஏளனப் புன்னகை இல்லை... ஆசைப் புன்னகை... அடடா! நமக்காக நம்ம வீட்டுக்காரர் எவ்வளவு கஷ்டப்படுறார்னு ஏற்பட்ட சந்தோஷத்தினாலே ஏற்பட்ட அன்புப் புன்னகை... எனக்கு உற்சாகம் தரும்புன்னகை.

இன்னொரு முறை புளி வடிகட்டியின் மேலாக தண்ணீர் ஊற்றிவிட்டு அதை அவளிடம் கொடுத்தேன்.

மறுநாளே செடி வந்திருக்குமான்னு காலையிலேயே எழுந்திரிச்சு விழுந்தடிச்சுக் கிட்டு போய்ப் பார்த்தேனுங்க.

செடி வந்திரிக்கவில்லை. நான் விதைப் போட்ட இடத்தைச் சுத்தி எறும்புக் கூட்டங்கள்தாங்க இருந்ததுங்க.

மண்ணைத் தோண்டினேனா எங்கேயோ இருந்த எறும்புப் புற்று உடைந்த 'பை பாஸ்லேன்' ஏற்பட்டு நான் போட்ட விதையைச் சுற்றி ஒரே எறும்புக் கூட்டங்கள்.

ஆபிசில் நான் இருந்த நிலைமையைப் பார்த்து விட்டு என் நண்பன் சந்திரன் விஷயம் என்னவென்று கேட்க நான் என்னோட 'எறும்புப் பிரச்னை'யைச் சொல்ல அவன் ''இதென்ன பெரிய பிரச்னை? எறும்பு மருந்து வாங்கிப் போடுன்னான்.''

இரண்டு ரூபாய் கொடுத்து எறும்பு மருந்து வாங்கிக் கொண்டு போனேன். ஏதோ ஒரு இடத்தில் தூவ இன்னொரு இடத் தில் எறும்பு வந்துக் கொண்டே இருந்த துங்க.

கொஞ்ச நேரத்தில் எல்லாம் காலி...

எறும்பு இல்லைங்க... எறும்பு மருந்து தானுங்க...

இரண்டு ரூபாய்க்கு வாங்கிய எறும்பு மருந்து போதாதுன்னு தோணுதுங்க..

தினமும் காலையிலும் மாலையிலும் பக்தி சிரத்தையோடு தண்ணீர் ஊத்தினேனுங்க.

திடீர்னு ஒரு நாள் -

ஒரு சிறிய செடி பூமியிலேர்ந்து 'பிரசவமானது' தெரிஞ்சதுங்க.

எனக்கும் என் பெண்டாட்டிக்கும் ரொம்ப சந்தோஷமுங்க.

இரண்டு அங்குலம், நாலு அங்குலம், இரண்டு இலை, மூணு இலை, நாலு இலைன்னு அதோட வளர்ச்சியை தினம் தினம் பார்த்து பூரிக்க இருந்தோமுங்க...

அத்தனை விதை போட்டேன்... ஒரு ஒரு செடிதானுங்க வந்தது.

ஆபிஸ்லே சந்திரன் கிட்டே அதுக்குக் காரணம் கேட்டேன்... மொசைக் போட்ட போது அதை 'கிரைண்ட்' செய்து அந்த வேஸ்ட்டை எல்லாம் வீட்டுக்கு முன்னாடி கொட்டி இருப்பானுங்க... அந்த இடத்திலே செடிபோட்டா எதுவும் வராதுன்னு சொன்னான். இந்த ஒரு செடி மாத்திரம் எப்படி வந்தது? எங்களுக்குப் பெரிய ஆச்சரியம்ங்க.

செடி ஒரு அடி வளர்ந்து இருக்கும். செடியின் இலையில் ஓட்டை ஓட்டையா இருந்ததுங்க.

யாரு இலையிலே ஓட்டைப் போட்டதுன்னு, என்னோட பையனைத் திட்டினேனுங்க. அவன் 'நான் இல்லை'ன்னான்.

மறுபடியும் சந்திரன் தான் அட்வைஸர்.. அது ஒரு புழு செய்யற காரியமாம். அது போகணும்னா பூச்சி மருந்து தெளிக்கணும்னான்... தெளிக்கறதுன்னா கையிலே எடுத்து தெளிக்கக் கூடாதாம். அது விஷமாம்.... அதனால அதை ஒரு 'ஸ்ப்ரேயர்' - சலூனில் முடிவெட்டும் போது உபயோகிப்பார்களே அது மாதிரி - ஒன்று வாங்கி பூச்சி மருந்தை ஒரு லிட்டர் தண்ணீரில் இரண்டு மில்லி சேர்த்து கலக்கி வாரம் ஒரு முறை மாலையிலோ அல்லது காலை நேரத்திலோ ஸ்ப்ரே செய்ய வேண்டும் என்றான்.

பூச்சி மருந்து முப்பது ரூபாய்ங்க. அந்த ஸ்ப்ரேயர் இருபத்தெட்டு ரூபாய்ங்க. ஆக ஐம்பது ரூபாய்ங்க. கவலைப்படலே... வாங்கிட்டேன்ங்க.... கத்தரிக்கா காய்க்க வேண்டாமா? ஏதோ முகமூடிக் கொள்ளைக்காரன் மாதிரி மூக்கை ஒரு துணியால் மூடிக் கொண்டு கையில் ஒரு 'க்ளவுஸ்' போட்டுக் கொண்டு - பூச்சிக் கொல்லும் மருந்து விஷமுங்க... பயங்கர வாடை அடிக்கும் - மருந்தை எடுத்துத் தண்ணீரில் கலக்கி செடியின் மேல் 'ஸ்ப்ரே' செய்தேன்.

கம்மாச் சொல்லப்படாதுங்க.

அந்த பூச்சி மருந்து செடிக்கு டானிக் மாதிரி.... அந்த இலை வாடி விழுந்து புதிய இலை வந்ததுங்க....

பூவும் வந்ததுங்க... கத்தரிப் பூவை நான் முதன் முதலா நேரில் பார்த்தேனுங்க.

இனி என் பெண்டாட்டி கத்தரிப் பூ கலர்லே புடைவை வாங்கிட்டு வரச் சொன்னா கரெக்டா அதே கலர்ல வாங்கிட்டு வருவேனுங்க.

செடியிலே பூத்த பூவெல்லாம் வாடி வாடி விழுந்ததுங்க...

மறுபடியும் சந்திரன் தாங்க அடைக்கலாம்.

செடிக்கு உரம் போடணும்னான். ஏதோ... ஃபாக்ட் கம்பெனி தயாரிக்கிற 'வெஜிடபின் மிக்ஸர்' வாங்கிப் போடச் சொன்னான்.

எனக்கு இதுவரை தெரிந்தது நம்ப ஊரு காரா பூந்தி மிக்ஸர்தாங்க. அவன் சொன்னானேன்னு அதையும் வாங்கி போட்டேனுங்க விலை பத்து ரூபாய்ங்க....

ஒரு பூவிலேர்ந்து ஒரு காய் வரத் தொடங்கியதுங்க....

அதோட வளர்ச்சியை மில்லி மீட்டர் மில்லி மீட்டரா தினமும் பார்த்து சந்தோஷப் பட்டோமுங்க.

காய் நல்ல வயலெட் கலர்ல தகதகன்னு ஜொலிச்சதுங்க.. காய் இரண்டு அங்குலம் ஆனதும் முத்திப் போயிடுமோன்னு சந்தேகம் வந்ததுங்க... அதனால காலையிலே குளிச்சு முழுகிட்டு சுத்த பத்தமா பறிச்சு பிள்ளையாருகிட்டே கொஞ்ச நேரம் நைவேத்தியமா வச்சிட்டு சாம்பார்லே போட்டு சாப்பிட்டோமுங்க... ரொம்ப ஜோருங்க...



பாலில் தேன் சேர்த்து வளரும் குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தால் அவர்களுடைய உடல் வளர்ச்சி சீராகவும் சரியாகவும் அமையும்.

- ஆர். அஜிதா

பிள்ளையாருக்கு கத்திரிக்காயை வைத்து யாராவது நைவேத்தியம் செய்வார்களோ? எங்களுக்குத் தெரியாது. நாங்க செய் தோமுங்க... அந்த சாம்பார் படா டாப் டக்கர்.. பிஸ்தா... இன்னும் என்னமோங்க.... என் பெண்டாட்டியின் ஆசையை நிறை வேத்திட்டேங்க....

அதுக்கு அப்புறம் அந்தச் செடி காய்க்கலிங்க... பட்டுப் போச்சுங்க... சந்திரனைக் கேட்கணும் என்ன காரணம்னு....

விதை இரண்டு ரூபாய்ங்க... எறும்பு மருந்து ரெண்டு ரூபாய்ங்க.... பூச்சி மருந்து முப்பது ரூபாய்ங்க... ஸ்ப்ரேயர் 28 ரூபாய்ங்க... வெஜிடபின் மிக்ஸர் பத்து ரூபாய்ங்க.... ஆக ஒரு கத்தரிக்காயின் விலை 72 ரூபாய்ங்க... கணக்கு சரிதானேங்க....?

# துன்பத்தைத்

'ப்ரெயின் டியூமர்' எனப்படும் மூளைக்கட்டி வந்து ஆபரேஷன், அபிநாப்பிற்கு வந்தது போன்ற (மிக அரிதாகவே வரும் இந்த நோய்) நரம்புத் தளர்ச்சி நோய் வந்து ஆபரேஷன் என இரண்டு பெரிய கண்டங்கள் வந்தும் சிரித்த முகம் மாறாமல் வளைய வருகிறார் ஒரு பெண்மணி. வெறுமனே வளைய வரவில்லை, பல நடன நிகழ்ச்சிகளையும் தருகிறார்.

மனவலிமைக்கு ஒரு உதாரணமாகத் திகழும் இந்தப் பெண்மணி ஸ்ரீகலா - பிரபல கிரிக்கெட் வீரர் ஸ்ரீகாந்தின் சகோதரியும் கூட!

“இடுக்கண் வருங்கால் நகுக” என்று வள்ளுவரின் வாக்கினைக் கடைப்பிடித்தவர் ஸ்ரீகலா. தலைவலி வந்தவுடனே தலைகுப்புறப்படுத்து விடும் பலர் மத்தியில் இரு பெரும் ஆபரேஷன்கள் நடந்தும், அலட்டிக் கொள்ளாமல் வளைய வந்து கொண்டிருக்கும் திருமதி ஸ்ரீகலா பரத்குமாருக்கு எப்படி இந்தச் சோதனைகள் வந்தன?



“புகழ்பெற்ற இந்திய கிரிக்கெட் வீரர் திரு. ஸ்ரீகாந்த் அவர்களின் தங்கை நான். வித்யா மந்திர், வித்யோதயா பள்ளிகளில் படிப்பை முடித்து, எத்திராஜ் கல்லூரியில் பி. ஏ. பொருளாதாரம் சேர்ந்தேன். முதல் வருடப் படிப்பின் போது அண்ணன் ஸ்ரீகாந்த் அவர்களுடன் கிரிக்கெட் ஆடும் நண்பர் திரு பரத்குமார் அடிக்கடி வீட்டிற்கு வர எங்களது சந்திப்பும், நட்பும் காதலாக மலர முதல் வருடப் படிப்பு முடிந்ததுமே 1979-ல் திருமணம் நடந்தது. திரு. பரத்குமார் தமிழ்நாடு கிரிக்கெட் அணியின் முன்னாள் கேப்டன். இவரது தாயார் திருமதி ஜெயா கிருஷ்ணன் சிறந்த கர்நாடக இசைக் கலைஞர். 81-ல் என் ஒரே செல்ல மகன் அபிஷேக்கைப் பெற்றெடுத்தேன்.

கல்லூரி நாட்டியப் போட்டிகளில் பல பரிசுகள் பெற்றேன். தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றத்தினர் திறமையான கலைஞர்களை தேர்ந்தெடுத்து நான்கு ஊர்களில் நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யும் திட்டத்தின் கீழ் நானும் தேர்ந்தெடுக்கப்பட்டேன். நடன நிகழ்ச்சிகள் நடத்தினேன். பம்பாய் ஷண்முகானந்தா வெள்ளி விழாவில் என் நடன நிகழ்ச்சி நடைபெற்றது.

1984-ம் ஆண்டு அமைதியான என் வாழ்வில் புயல் போல ஒரு சோதனை. சாதாரணமாக எனக்கு அடிக்கடி ஒற்றைத் தலைவலி வரும். அந்த வருடம் தலைவலியோடு கூட ஓரிரு நொடிகள் கண்ணை இருட்டிக் கொண்டு வந்து, பின்கழுத்தில் வலியும் ஏற்பட்டது. நரம்பியல் மருத்துவர் திரு. பிஸ்வகுமார் அவர்களிடம் காண்பித்தேன். பல சோதனைகள் செய்து,

ஸ்கேன் எடுத்துப் பார்த்ததில் மூளையில் கட்டி (Brain Tumour) என்றார். நம்பவே முடியவில்லை. குடும்பம் முழுதும் அதிர்ச்சியில் உறைந்து போயிற்று. எப்படி வந்தது இந்தப் பெண்ணுக்கு, இவ்வளவு பெரிய வியாதி என்று துவண்டு போனார்கள்.



நான் மட்டும் கலங்கவில்லை. ஏன்? அது என் உடன் பிறந்த குணம். என் தாய் வருத்தத்துடன், கலாவுக்குப் பிறந்த நாள், திருமணம், எந்த நாளும் ரொம்ப 'கிராண்ட்'டாக நடக்கும். அவளுக்கு வியாதியும் வரும் போதே கிராண்டாக வந்துள்ளது என்று சொல்வார். நரம்பியல் நிபுணர் திரு. பி. ராமமூர்த்தி அவர்கள் எனக்கு ஆபரேஷன் செய்தார். நான் எப்போதுமே பாஸிட்டிவ் ஆகத்தான் நினைப்பேன். எதிர்மறை எண்ணங்களே வராது. அந்த மனோபலம்தான் என் ஆபரேஷனை வெற்றிகரமாக நடத்த உதவியது. ஆபரேஷன் செய்து கொள்ளப் போகும் முன் என்னைச் சுற்றியிருந்த உறவினர்களுக்கு நான் ஆறுதல் கூறினேன். அவர்களைத் தேற்றினேன்.

என் கணவர் மிக உயர்ந்த மனிதர். என்னை மிகவும் புரிந்து கொண்டவர். நேசிப்பவர். உனக்கு ஒன்றும் ஆகாது. உன் நல்ல எண்ணம் உனக்குத் துணை செய்யும் என்று தைரியமளிப்பார். 1984-ம் வருடம் அக்டோபர் 31-ந் தேதி நடந்தது என் ஆபரேஷன். அதோடு கூட என்னால் மறக்க முடியாதது அன்று தான் பாரதப் பிரதமராக இருந்த இந்திரா காந்தி அவர்கள் மறைந்த நாள். மருத்துவமனைக்குப் பணிக்காக மருத்துவர்கள், நர்சுகள், வேலையாட்கள் அனைவரும் வந்து சேர்ந்த பிறகு என் ஆபரேஷன் நடந்ததால் கெட்டதிலும் ஒரு நல்லது என்பது போலத் தடையின்றி நடந்தது. ஆறு மணி நேரம் நடந்த ஆபரேஷனுக்குப் பிறகு கண் விழித்த நான் டாக்டரிடம் கேட்ட முதல் கேள்வி, ''டாக்டர், என்னால் டான்ஸ் ஆட முடியுமா?'' என்பதுதான். நிச்சயம் முடியும் என்றார் டாக்டர் திரு. பி. ராமமூர்த்தி. அவரும் டாக்டர் பிஸ்வகுமார் அவர்களும் என்னைத் தங்கள் சொந்த மகளைப் போல நடத்தியதும் வாழ்வில் நான் மறக்க முடியாத ஒன்று. என் கணவர் தூண் போல இருந்து துன்பத்தைப் போக்கினார்.

''உனக்கு எல்லோரையும் விட மூளை அதிகமாக இருந்தது. அதனால்தான் அதிலிருந்து சிறிது வெட்டி எடுத்து விட்டேன்'' என்று டாக்டர் ராமமூர்த்தி அவர்கள் கிண்டலாகச் சொல்வார்கள்.

'ப்ரெயின் டியூமர் ஆபரேஷன்' நடந்ததே என படுத்த படுக்கையாகக் கிடக்கவில்லை இவர். இந்த ஆபரேஷன் முடிந்து

# துச்சமென மதிப்போம்

ஆறு மாத ஓய்வுக்குப் பிறகு திரும்ப நாட்டியப் பயிற்சிக்குச் சென்று விட்டார். திருமதி சரஸா இவர் உடல்நிலை பற்றியே பேச மாட்டாராம். மிக உற்சாகத்துடன் ஆட வைப்பார். 86-ஆம் ஆண்டு, பாரதீய வித்யா பவனில், கபாலி ஃபைன் ஆர்ட்ஸ் சபாவின் நாட்டிய நிகழ்ச்சியிலுமாக ஆட ஆரம்பித்து விட்டார். ''கலாவிடமிருந்து மனவலிமையையும், சிரித்த முகத்துடன் இருக்கவும் எல்லோ ரும் கற்றுக் கொள்ளுங்கள். சிறந்த மாண விக்கு அவள் ஒரு எடுத்துக்காட்டு'' என்பார் கே. ஜே. சரஸா.

ஏழு வருடங்கள் கடந்தன. இந்த ஏழு வருடத்தில் கிருஷ்ணகான சபா, கலா மந்திர், இயல் இசை நாடக மன்றம், நாரத கான சபா, சங்கராபரணம் டிரஸ்ட், பாரதீய வித்யாபவன் போன்ற பல இடங்களில் நாட்டிய நிகழ்ச்சிகளைக் கொடுத்து விட் டார்.

''ஏழு வருடம் தடங்கலின்றி வாழ்க் கைச் சக்கரம் ஓடிக் கொண்டிருந்தது. ஒரு நாட்டிய நிகழ்ச்சியில் திடீரென்று ஓரிரு நிமிடம் என்னால் அபிநயம் பிடிக்க முடி யாமல் போய்த் திரும்பச் சரியாகி விட்டது. நிகழ்ச்சியும் சிறப்பாக முடிந்து விட்டது. பிறகு டாக்டரிடம் காண்பித்துச் சோதனை செய்ததில் லட்சத்தில் ஒருவருக்கு வரும் Myasthemia Gravis என்ற தசைத் தளர்ச்சி நோய் (நடிகர் அமிதாப்பச்சனுக்கு வந்தது) என்னைத் தாக்கியுள்ளதாக அறிந்தேன். கடின உழைப்பு கூடாது. பூரண ஓய்வு தேவை. திரும்பவும் chest regionல் ஒரு மேஜர் ஆபரேஷன்.''

''நடனம் ஆட முடியாமல் ஓய்வெ டுக்கச் சொல்லி விட்டார்களே என்பதற் காக வருந்தினேன். 92-ம் ஆண்டு மார்ச் மாதம் டாக்டர் ஸ்ரீமதி அவர்கள் இந்த ஆபரேஷனை வெற்றிகரமாக செய்து முடித் தார்கள். ''அக்டோபர் மாதம் விஜயதசமி யன்று நடனப் பள்ளிக்குச் சென்று மீண்டும் நடனம் ஆடியிருக்கிறார் இவர்.

''எனக்கு அதிகம் கோபம் வராது. பிற ருக்கு உதவி செய்வதில் ஆனந்தம். 'ஆறி லிருந்து அறுபது வரை' என்று என்னைக் கிண்டல் செய்வார்கள். ஆமாம் எந்த வய தினருடனும் என்னால் பேசிப் பழக முடியும். எதையும் கலபமாகவும், தமா ஷாகவும் எடுத்துக் கொள்வேன். கெட் டதை மறந்து விடும் குணம் எனக்கு மிக உதவியாக இருக்கிறது'' என்கிறார் கலா.

உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதும் அச்சமில்லை, அச்சமில்லை அச்சமென்பதில்லையே என்ற பாரதியின் கருத்தைச் செயல்படுத்தி தனக்கு ஏற்பட்ட இரு பெரும் சோதனைகளை நல்லதே நடக்கும் என்று நினைத்து வெற்றி பெற்ற ஸ்ரீகலாவை பெண்களுக்கோர் முன்னோடி யாகக் காண்கிறோம்.

''ஸ்ரீகாந்த், ஸ்ரீகலா, ஸ்ரீநாத் என்று மூன்று பெயர்களும் ஸ்ரீயில் தொடங்கும் படி வைத்தனர் என் பெற்றோர். 'ஸ்ரீ' கடவுளாக முன்னின்று எங்களைக் காத்து வருகிறார்'' என்கிறார் கலா.

**- பானுமதி இராமச்சந்திரன்**

ஹோட்டல் ரவா தோசை போல வீட்டிலும் மொறுமொறுவென ரவா தோசை தயாரிக்க வேண்டுமா? ரவையை நன்றாக வறுத்து அரை மணி நேரம் ஊற வைத்து அத்துடன் அதே அளவு மைதா அதே அளவு அரிசி மாவு கலந்து மிளகு சீரகம் உப்பு சேர்த்து தோசைக்கல்லில் விசிறி ஊற்றி முறுகலாக தோசை வார்த்து எடுங்கள். அனைவரும் விரும்பிச் சாப் பிடுவார்கள்.

- கீதா





பழைய சாதத்தில் பக்கோடா தயா ரிக்கலாம். பழைய சாதத்தை உதிரி யாக்கி மைதா, ரவை சேர்த்து வெங் காயம், இஞ்சி, பச்சை மிளகாய், உப்பு, கறிவேப்பிலை நறுக்கிப் போட்டுத் தண்ணீர் சிறிது சேர்த்து எண்ணெயைக் காய வைத்து மாவுக் கலவையைப் போட்டுச் சிவந்ததும் எடுங்கள். மொறு மொறு பக்கோடா ரெடி.

- கீதா

# சமையலறை புறக்கணிக்காதீர்




நகரங்களில் இப்போது 'பால் பூத்கள்' 'தபால் பெட்டிகள்' 'டெலிஃபோன் பூத்கள்' அளவு அதிகம் இயங்கி வருபவை 'Fast Food Restaurants'. ஏகப்பட்ட 'சீக்கிர உணவு மையங்கள்' வெகு வெற்றிகரமாக நடத்தப்பட்டு வருகின்றன.

நாகரிகத்தின் படிகளில் இந்த விரைவு உணவுக் கடைகள் 'நிர்ப்பந்தங்கள் தூண்டிய சௌகரியங்கள்' என்று கொண்டாலும் எல்லா நேரங்களிலும் அங்கு கூடுகிற வெவ்வேறு வயதினரைப் பார்க்கும் போது நம் கலாச்சாரம் சமையலறைகளைப் புறக்கணித்து போக்குவரத்து நிறைந்த நடுவீதிக்கு வயிற்றுப் பசிக்காக வந்து நின்று விட்டதோ என்று நினைக்கத் தூண்டுகிறது.

'மொத்த சமையலை'ப் புறக்கணித்து தனிச் சமையல் (சுயம்பாகம்) செய்து வந்தது நம் பண்டைய ஆச்சாரம். பெரியவர்கள் தன் வீடு தவிர்த்து வேறு இல்லங்களிலோ வெளியிலோ தண்ணீர் கூட அருந்தாமலிருந்தார்கள். இன்னும் சிலர் விடுதிகளிலும் கல்யாண வீடுகளிலும் உணவு கொள்வதைத் தவிர்ப்பார்கள். இளைய தலைமுறைக்கு அதெல்லாம் எள்ளி நகையாடுவதற்குரிய விஷயங்களாகி விட்டன. ஆனால் விசித்திரமான வியாதிகள் கடந்த இருபது வருடங்களில் அதிகரித்து விட்டன என்பது மறுக்க முடியாத உண்மை. டைஃபாயிடு, மலேரியா போல கேன்சரும் 'கிட்னி' பிரச்னைகளும் அலர்ஜிகளும் இருதய நோய்களும் சகஜமாகி விட்டன. யாருக்காவது உப்போ, சர்க்கரையோ இரத்தத்தில் அதிகம் இல்லை என்றால் அவர்கள் இன்னும் பரிசோதனை செய்து கொள்ளவில்லை என்று நினைக்கும் அளவுக்கு வியாதிகள் சாதாரணமாகி விட்டன. ஒருவருடன் ஒருவர் போட்டியிடும் அளவுக்கு வியாதிகளை வைத்துக் கொண்டு 'கண்ட்ரோல்' பண்ணிச் சீராட்டிக் கொண்டு வாழ்கிறோம். காரணங்கள் சுத்தமில்லாத காற்று, சுத்தமில்லாத தண்ணீர், சுத்தமில்லாத உணவு, சுத்தமில்லாத மனசு.

இதில் உணவை மட்டுமாவது நாம் கவனிக்க முடியும் அல்லவா?

இருபத்தோராம் நூற்றாண்டுப் பெண்களுக்கு எது ரொம்ப சிரமமென்று கேட்டால் சமையல்தான். அத்தனை தொழில் முறைக்கும் கரை கண்டு எல்லாக் கல்வி முறையும் கரைத்துக் குடித்து உலகையே ஓரடியாக வைத்துக் கடந்தாயிற்று.

காலையில் நேரத்தோடு ஒரு பானம், கவையாய்ச் சுருக்கமாய் ஒரு சிற்றுண்டி, பகலுக்கு எளிமையாய் ருசியாய் ஒரு சாப்பாடு இரவில் அடக்கமாக அரைவயிற்றுக்கு ஒரு குறைச் சாப்பாடு செய்தால் போதும். 'அன்ன பூர்ணா' வாழும் வீடு. அது மட்டும் 'முடியவே முடியாது' என்ற நிலை.




நமக்குப் பிடித்த நபர்களை எல்லாம் நினைத்துப் பார்க்கும்போது தவிர்க்க முடியாமல் வயிற்றுச் சம்பந்தங்களுடன் நம் பிடித்தங்கள் இணைந்திருப்பது தெரிய வரும். இன்னாருக்குக் கத்திரிக்காய் பிடிக்கும் என்று அவர் தலையைப் பார்த்ததும் கடைத் தெருவுக்கு ஓடும் நபர், 'மிதி பாகல்' தேடி கறி சமைத்த சிநேகிதி, 'அந்தப் பொடி தரவா? இந்த சட்னி செய்யவா?' என்று அண்ணி - இவர்களை எளிதில் மறக்க முடியாது. ஆக ஒரு நபரைச் சுற்றியுள்ள பந்தங் களுக்குக் காரணமே வயிறு நிறைந்த உணவும்; மனசு நிறைந்த வாழ்த்தும் என்று கூடச் சொல்லலாம்.

சமையலறைப் பிணைப்புகள் தளர்ந்து போனதும் ஒரு காரணம். இளம் பெண்கள் சமைக்க மறுப்பதைப் பார்த்து நடு வயதுப் பெண்களும் 'சமையல் வேலை'யைத் தவிர்த்து வாழக் கூடிய நிலையை ஒரு 'கௌரவம்' அல்லது ரிதியிநிடிரி என்கிற மாதிரி மனப்பூர்வமாக நினைக்கிறார்கள். வய தானவர்களிடம் சில சமயம் இந்த வேலை தள்ளப்படுகிறது. அவர்களும் வெறுப்புடனே செய்கிறார்கள். காரணம் விமரிசனங்கள். ஏன் பாட்டி, இட்லி தோசை தவிர வேறு டிபன் செய்ய வராதா? என்று இளை ஞர்கள் கேட்க முதிய வர்கள் சுருங்கிப் போகிறார்கள்.

மூன்றாவது ரவுண்ட் விமர்சகர்களின் கைத்தட்டலைப் பெற்றுக் கொள்ள வென்று கற்பனையோடு சமையல் செய்ய முதியவர்களுக்கு உடம்பும் மனசும் எப்படி இடம் கொடுக்கும்?

ஆக இந்திய கலாச்சாரத்தில் கூட்டு வாழ்க்கைக்கும் ஒட்டுறவுக்கும் ஆதாரமாக இருந்த சமையலறை இன்று புறக்கணிக்கப்பட்டு வருகிறது.

சமையல் பக்குவத்தில் தான் புருஷனைக் கைக்குள் வைத்துக் கொள்ள முடிந்தது அப்போதைய சராசரிப் பெண்களுக்கு. எத்தனை நேரம்தான் கண்ணே மணியே என்று கொஞ்ச முடியும் புருஷனுக்கு? எவ்வளவு வருஷம்தான் இளமையும் தன்னம் பிக்கையும் ஆளுமை நீட்டும்?

செக்ஸ் அளவே அல்லது அதை விட ஒரு படி மேலே வயிற்றுப் பசியின் மற்றும் ருசியின் தாக்கம் உண்டு அல்லவா?

பெண்களுக்கு மட்டும் பசி, ருசி கிடையாதா? அளவான சூட்டில் கஞ்சியை ஆற்றிப் பக்கத்தில் இருந்து கொடுத்த மாமியாரை எவ்வளவு வருடமானாலும் ஜுரமடிக்கிற நாளில் நினைக்கச் சொல்கிறது அல்லவா?

சீரான சூட்டில் சரியான உப்புப் போட்டுக் கிடைக்கக் கூடிய வெந்நீர் நினைவுக்கு வரவில்லையா? ஹாஸ்டலில் தொண்டைக் கட்டு வந்த நாளில்?

சமையல் ஒரு தினப்படி சவால். இன்று போல நாளை வராது. தினம் ஒரு ருசி. தினம் ஒரு குறை. சமையலைச் செய்வதும் அதற்காகத் திட்டமிடுவதும் தனிச்சுவை. மாற்றி மாற்றி சமையலே செய்து கொண்டு அதைப் பற்றிப் பேசிக் கொண்டு மனசில் அலுப்பு இல்லாமல் பல நூற்றாண்டுகளில் பெண்கள் வாழ்ந்தார்கள். அது 'உயர்த்தி'யில்லை என்பது வேறு விஷயம். அது 'முடிந்தது' 'சாத்தியமாயிற்று'. அடுப்பங்கரையை விட்டு வெளியே வா என்று சொன்னது அடுப்பங்கரையே தேவையில்லை என்பதற்காக அல்ல. வெளியே கூட உலகமுண்டு அதுவும் வேண்டும் என்பதற்காக.

சமைப்பதைத் தவிர வேறெதுவும் செய்யாத முழு இல்லத்தரசி கூட அலுத்த

வாங்கிவிட்டீர்களா?

# மேகலா

ஏப்ரல் - 93 இதழில்...



# இந்துமதி

எழுதிய

# ஒரு பூ உதிரும்

— உள்ளம் சிலிர்க்கும் நாவல்

★ மாதம் ஒரு பத்திரிகையாசிரியர்

இம்மாதம்: 'தராசு' ஷ்யாம்



★ வாசகர்களின் சுவையான படைப்புகள்...

★ வாசகர்கள் பங்கேற்க புதுப்புது பகுதிகள்...!

அத்துடன் மாதா மாதம்

G.R.தங்கமாளிகை

குமரன் சில்க்ஸ்

பட்டர்ஃபிளை®

நிறுவனங்களுடன் மேகலா இணைந்து வழங்கும்

ரூ.12,000/- மதிப்புள்ள பரிசுகள்!

வண்ணமே தான் சமையல் செய்கிறார். வேலைக்குப் போகும் பெண்ணுக்குத்தான் 'நேரக் குறைவு' என்று சாக்கு சொல்பவர்களுக்காக இதைச் சொல்ல வேண்டி வந்தது.

யோசித்துப் பார்க்கையில் 'சமைப்பது' பெண்ணடிமைத்தனத்தின் அடையாளம் என்று பெண்கள் தீர்மானித்திருப்பதாகப் படுகிறது.

குழந்தை வளர்ப்பைப் போலவே சமையலும் ரொம்பவும் பொறுப்பான வேலை என்பதாலும் ஒரே மாதிரி என்பதில்லாத 'varieties' உள்ள உத்யோகம் இது என்பதாலும் சமையலறைச் சாவி பெண்களிடம் கொடுக்கப்பட்டது. அதிலும் பெரும்படி வேலை எல்லாம் ஆண்களிடம் தான் இன்னும் வசம், 'நளபாகம்' 'பீமபாகம்' எல்லாம் ஆணில்லாமல் எங்கே? சமையல் காண்ட்ராக்ட் ஐந்து நட்




சத்திர ஓட்டல் ஏகாதிபத்தியம் எல்லாமே ஆணுலகம் தானே? ஆகவே சமையலை 'பெண் வேலை' என்று ஒதுக்கக் காரணமில்லை.

ஆனால் 'சமைப்பது' இன்று கொடுமை யான விஷயம். சமைப்பதைத் தவிர்க்கவே முடியாத ஒரு ஆச்சார சிலர் குடும்பத்துப் பெண் சொல்கிறார், 'வீட்டில தான்னு இல்ல எங்க போனாலும் நானே சமைச்சாத் தான் மாமியார் சாப்பிடுவார், கணவர் சாப் பிடுவார், பயணத்தில் கூட சமையல் விடாது, தளிகை பண்ணிக் கையில எடுத்துண்டு, போதும் போதும் இந்த ஜன்மா' என்று அலுத்துக் கொள்கிறார்.

சிதம்பரம் 'மூவாயிரம்' பேர் குடும்பத்துப் பெண்களுக்கு கோயில் 'பட்டைச் சோறு' தான் தினப்படி குடும்பச் சமையல். பெண்கள் அடுப்பங்கரைப் பக்கம் போக வேண்டாம்.

மாத்வர் வீட்டில் ஜாலி. ஆண்கள்தான் 'ஒத்தை' வஸ்திரம் அணிந்து சமைக்க வேண்டும். வீட்டில் விசேஷங்களில் பெண்கள் 'மஜா'வாக வெளியே உட்கார்ந்திருப்பார்கள். உள்ளே கல்லூரி புரொபசரும் அவர் தம்பி சார்ட்டர்ட் அக்கவுண்டண்டும் சமையல் செய்வார்கள் தள்ளாத வயது தாயார் மேற்பார்வையில்.

பெண்களுக்கு 'கரண்டி' கைக்குப் பொருந்துவதில்லை. ஆண்களுக்குப் பொறுமை இல்லை. யார் அரைப்பார்கள்? யார் கரைப்பார்கள் என்று அலுத்துக் கொள்ள அலுத்துக் கொள்ள 24 மணி நேர டிஸ்பன்ஸரி எண்ணிக்கை அதிகரிக்கிறது. வாரம் ஒரு முறை 'டிரிப்ஸ்' ஏற்றிக் கொண்டு விட்டுத்தான் நடமாட வேண்டி




யிருக்கிறது. நார்மல் உணவு 'மூன்று இட்லி' 'ரெண்டு தோசை' மூன்று ப்ரெட் ஸ்லைஸ்' என்று சுருங்கி விட்டது. பரிமாறுவது என்ற பத்ததியே மறந்து போய் 'பஃபே' ஸ்டைல் தான் வீட்டிலும். அவ ரவர் கிடைத்ததைப் பொறுக்கிக் கொண்டு தட்டில் வைத்து நின்றபடி தின்னுவது. பூரி யைப் பார்த்தாலே எண்ணைப் பண்டம் என்று வயிறு உப்பிக் கொள்கிறது. பஜ் ஜியை வாயில் போட்டுக் கொண்டால் வாந்தியெடுக்கிறது. பத்திரிகைகளில் சத் துணவு 'ரெஸிப்பி' வருவதில் குறைச்ச லில்லை. பண்ணுவது யார்? என்பதுதான் கேள்வி.

நவீன வேக யுகத்தில் ஒருத்தர் வீட்டுக்கு என்று போக்குவரத்தே குறைவு. தப்பித் தவறிப் போய்ச் சேர்ந்தோமானால் 'சாப் பாடு' என்ற பேச்சே கிடையாது. 'நீங்

கள்ளாம் சாப்பிடுவது கூட உண்டா?' என்று கேட்காத குறை. சாப்பிடுவது சாப்பாடு போடுவது இதெல்லாம் 'மிடில் கிளாஸ்' பழக்கம் என்று சாடாத குறை. ஒவ்வொருத்தர் வீட்டில் சாப்பாடு கிடைக்காது என்று தீர்மானமாக நம்பி முன்னேற்பாட்டுடன் போகலாம். கிளம்பும் போது பழம், தேங்காய், ரவிக்கைத் துணி ஏன் சிலசமயம் 'பவுன்' கூட வைத்துக் கொடுப்பார்கள். ஒரு பிடி சாதம் வேண்டுமா? என்று கேட்டு ஆதரவோடு சரியான சூட்டில் அன்னம் பரிமாறி வகையாக வயிற்றைக் குளிர வைக்க மாட்டார்கள்.

வேண்டுமானால் கவனியுங்கள். இளம் வயதுப் பெண்கள் இருக்கும் வீட்டுக்குப் போங்கள். நீங்கள் வாசல்படி தாண்டும் போதே காப்பி டம்ளர் மூஞ்சி மேல் கவிழ்க்கப்படும். பிறகு 'நீங்கள் எப்ப கிளம்பப் போகிறீர்கள்?' என்ற எதிர்பார்ப்போடு உலகின் அத்தனை விஷயங்களும் பேசப்படும். இன்னும் சில வீடுகளில் பேச்சுக்கும் பஞ்சம். 'ஸாரி', 'நான் வெளியே போகணும்' என்று சொல்லிக் கழுத்தைப் பிடித்துத் தள்ளாவிட்டால் உங்கள் அதிர்ஷ்டம்.

நாற்பது வயதுக்கு மேற்பட்ட பெண்களிருக்கும் வீட்டில் கொஞ்சம் போல வயிற்றின் அருமை தெரியும். மிக்சரோ பிஸ்கட்டோ வரும். 'எப்ப சாப்பிட்டீங்க,' என்ற விசாரிப்பு இருக்கும். 'ஏதாவது பண்ணட்டுமா?' என்ற கேள்வி முதல் தூண்டலிலே வந்து விடும்.

ஐம்பது வயதுக்கு மேற்பட்ட பெண்களிடம் விசாரணைகள் கிடையாது. விதரணையாக நேரத்துக்கேற்ற உணவுப் பண்டம் வெளியே வரும். 'தருவது என் கடமை. சாப்பிட்டால் சாப்பிடு விட்டால் விடு?' என்று இனிக்கப்படும்.

ஏக பிகு செய்து கொண்டாலும் வந்த விருந்துக்குக் குளிர்ந்துதான் போகும்.

சமையலில் ஆரம்பித்துச் சாப்பாடு போடுவதில் முடிந்தது திசை தப்பியதால் இல்லை. சாப்பாடு போடுவதில் ஆர்வம் இருந்தால் தானாகவே சமைக்கிற வேகம் வந்து விடும் என்பதால்.

வயிற்றுக்கு இதமான எளிய, சத்துள்ள உணவுகளைச் சமைத்துச் சாப்பிடவும் பிறர்க்கு வழங்கவும் தெரிந்து கொள்வோம்.

– மாலதி



16 புள்ளி 16 வரிசை நேர்புள்ளி

– ஜானகி



15 புள்ளி 1ல் முடிய இடைப்புள்ளி

பொதுவாக எல்லாக் குழந்தைகளும் வளரும் நிலையில் ஒரு குறிப்பிட்ட கையையே உபயோகிப்பதில் விருப்பம் கொண்டிருக்கின்றனர். சில குழந்தைகள் வலக் கைப் பழக்கமுடையவர்களாகவும், மற்றும் சிலர் இடக் கைப் பழக்கமுடையவர்களாகவும் ஆகின்றனர். இடக் கை பழக்கமுள்ளவர்கள், சாப்பிடுதல், பல் தேய்த்தல், எழுதுதல், விளையாடுதல், வரைதல் போன்றவற்றைச் செய்யும் போது, இடது கையையும், வலக்கைப் பழக்கமுடையோர், இவைகளைச் செய்ய, வலது கையையும் பயன்படுத்துகின்றனர். மற்றொரு கை, வெட்டுதல், துவைத்தல், தைத்தல், டென்னிஸ் விளையாடுதல் போன்று, இரண்டு கைகளும் தேவைப்படுகிற செயல்களில் ஒத்துழைக்கும் கையாக உபயோகப்படுகிறது.

குழந்தை இடது கைப் பழக்கம் கொள்வதோ அல்லது வலக்கைப் பழக்கம் கொள்வதோ, குழந்தைகளின் விருப்பத்தைப் பொறுத்து நடப்பதில்லை. பல குணங்களைப் போல, இது, நரம்புச் சம்பந்தமான, பரம்பரை சம்பந்தமான ஒன்று. மூளையின் இரண்டு பக்கங்களில், ஒரு பக்கம், மற்ற பக்கத்தை விட, அதிக முக்கியத்துவம் பெற்று, ஒரு நபரின் கைப் பழக்கத்தை (அதாவது இடக் கையா (அ) வலக்கையா) நிச்சயிக்கிறது. மூளையின் இந்தப் பக்கங்கள் உடலின் எதிர்ப்பக்கமான பாகங்களைக் கட்டுப்படுத்தும் திறனுடையவை. எனவே, மூளையின் இடது பக்கம் முக்கியத்துவம் பெற்றால், நபர் வலக்கைப் பழக்கமுள்ளவராக ஆகிறார். வலப் பக்கம் முக்கியத்துவம் பெற்றால் இடக் கைப்பழக்கமுள்ளவராக ஆகிறார்.

ஒரு குறிப்பிட்ட கையின் பழக்கம், குழந்தையின் மிகச் சிறிய பருவத்திலேயே வெளிப்பட ஆரம்பிக்கிறது. ஏழு அல்லது எட்டு மாதக் குழந்தைகள், ஒரு கையை விட, மற்றொரு கையை அதிகமாகப் பயன்படுத்தும் பழக்கமுடையதாக இருந்தாலும், இரண்டு கைகளையும் பயன்படுத்துகின்றன. காலக்கிரமத்தில், குழந்தைகள், ஒரு குறிப்பிட்ட கையையே அதிகமாகப் பயன்படுத்தும் நிலைக்கு வருகிறார்கள். ஐந்து அல்லது ஆறு வயதில் இடக்கை பழக்கமுடையவர்களாகவோ (அல்லது) வலக் கைப் பழக்கமுடையவர்களாகவோ ஆகி




விடுகிறார்கள்.

ஜனத் தொகையில் சுமார் 92 சதவீதத்தினர் வலக்கைப் பழக்கமுடையவர்களே. எனவே வலக்கை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. எனவே, பெற்றோர்களும், உபாத்தியாயர்களும் குழந்தையின் இடக்கைப் பழக்கத்தை அசாதாரணமாகக் கருதுகிறார்கள். சரி, இடக்கை பழக்கமுடையவர்கள், வலக்கை பழக்கமுடையவர்களை விட, திறமையில் குறைந்தவர்களா? இடக்கை பழக்கமுடையவர்கள், வலக்கை பழக்கமுடையவர் போன்றே சாதாரணமானவர்களே என்று கண்டறியப்பட்டுள்ளது. இடக்கை பழக்கமுடையவர்கள், தங்களுக்கு விருப்பமான, இடக்கையையே பயன்படுத்த அனுமதிக்

# உங்கள் குழந்தைக்கு இடது கைப் பழக்கமா?




கப்பட்டார்களேயானால், வலக்கைப் பழக்கமுடையவர்களைப் போலவே, எல்லா வேலைகளையும் திறமையாகச் செய்ய முடியும். ஆனால் இடக்கைப் பழக்கமுள்ள குழந்தைகளின் டீச்சர்களும், பெற்றோர்களும், இக் குழந்தைகளை, வலக்கையையே பயன்படுத்த வேண்டும் என்று கட்டாயப்படுத்துகிறார்கள். இது குழந்தைக்கு மிகவும் துக்கத்தை ஏற்படுத்துகிறது. 'இக் கையை உபயோகிக்காதே, இக் கையை மட்டும் உபயோகி' என்று ஒரு போதும் பலவந்தம் செய்யக் கூடாது. ஏனென்றால் குழந்தை, ஒரு குறிப்பிட்ட கையையே அதிகமாகப் பயன்படுத்துவதற்கு நரம்பு சம்பந்தமான அடிப்படை (Neurological Base) இருக்கிறது. மூளையிலுள்ள ஒவ்வொரு பகுதியும் தமக்கு எதிர்ப் பக்கத்திலுள்ள பகுதியின் அசைவுகளைக் கட்டுப்படுத்தும் தன்மையுடையது. ஒவ்வொரு பகுதியும் தங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பணிகளைச் செய்ய வல்லவை.

குழந்தையை, ஒரு குறிப்பிட்ட கைப் பழக்கத்தை பலவந்தமாக மாற்ற முற்படும் போது, அக் கை சம்பந்தமான செயல்கள் மட்டுமல்ல, மூளையின் மற்ற பகுதிகளும் பாதிக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட கையையே உபயோகிக்கும் குழந்தையை, மற்றொரு கையையே பயன்படுத்த வேண்டும் என்று பலவந்தப்படுத்தும் போது, அக் குழந்தைக்கு, பேச்சு, மொழி, பிரச்னைகள், திக்குவாய், நாக்குகுழறல் போன்ற பிரச்னைகள் உச்சரிப்புப் பிரச்னைகள் ஏற்படுகின்றன என்று ஆராய்ச்சிகள் மூலமாக அறியப்பட்டுள்ளது.

எடுத்துக்காட்டாக, குழந்தைகள் வழி காட்டி மையத்திற்கு (child Guidance Centre) அழைத்து வரப்பட்ட ராமு எனும் பத்து வயதுப் பையன் அடிப்படையில் இடக் கைப் பழக்கமுடையவன். ஆனால் அவன் பெற்றோர் அவனை வலக்கையைப் பயன் படுத்துமாறு பலவந்தம் செய்ததால் அவனுக்கு திக்குவாய் வந்து விட்டது.

பலவந்தம் செய்யப்படும் போது, மனோரீதியாகவும் குழந்தை பாதிக்கப் படுகிறது. எடுத்துக்காட்டாக, ஆரம்பத்தி லிருந்து இடக்கைப் பழக்கம் கொண்டிருக் கும் குழந்தையைப் பலவந்தப்படுத்தி, வலது கையை, எழுதுதல், வெட்டுதல் போன்ற செயல்களுக்குப் பயன்படுத்து மாறு செய்யும் போது, இச் செயல்களைச் செய்ய முடியாமல் ஆகி விடுகிறது.

ஏனென்றால் இம்மாதிரியான செயல்களுக்கு, மூளையும் கையும் ஒருங்கிணைய வேண்டியது அவசியம். வேலைகளைச் செய்ய முடியாமல் போகும் போது குழந்தைக்கு ஏமாற்றம் ஏற்பட்டு, அக் குறிப்பிட்ட வேலையைச் செய்ய மறுக்கலாம்.

குழந்தைகள் மையத்திற்கு அழைத்து வரப்பட்ட களில் எனும் எட்டு வயதுப் பையனுக்கு படிப்பு சரியாக வரவில்லை என்றும், எல்லாவற்றிலும் மிகவும் பின் தங்கி இருக்கிறான் என்றும் கூறப்பட்டது. விளையாட, சாப்பிட, மற்றும் அன்றாடம் செய்யும் சில வேலைகள் ஆகியவற்றிற்கு இடது கையைப் பயன்படுத்தினான் என்றும், அவன் எழுதும் போது, வலக்கையைப் பயன்படுத்த வேண்டும் என்று பெற்றோரால் கட்டாயப்படுத்தப்பட்டான் என்றும் அறியப்பட்டது. அவன் கையெழுத்து சரியாகப் புரியவில்லை என்றும், நன்றாகவும் இல்லை என்றும் கூறப்பட்டது. குழந்தைக்கு விருப்பமில்லாத கையால், எழுதுவதற்குக் கட்டாயப்படுத்தப்பட்டதால், அவனால், பள்ளிப் பாடங்களை வேகமாகச் செய்ய முடியவில்லை. மேலும் எழுதும் வேலையைப் புறக்கணித்தான். மையத்தில், அவனுக்கு விருப்பமான இடக் கையால் எழுதப் பணிக்கப்பட்ட போது, அவன் கையெழுத்து மிக அழகாகவும், நன்றாகப் புரியும்படியாகவும் இருந்தது.

அநேகமாக, எல்லோருமே வலக்கைப் பழக்கமுள்ளவர்களாக இருக்கும் இவ்வுலகத்தில் எல்லாமே வலக்கைப் பழக்கமுடையவர்களுக்காக, வடிவமைக்கப்பட்டிருக்கிறபடியால் இடக்கை பழக்கமுடையவர்களுக்கு சில பிரதிகூலங்கள் இருக்கத்தான் செய்யும். ஆனால் கையை மாற்றுவதன் மூலம் பிரச்னைகளுக்குத் தீர்வு காண முடியாது.

ஒரு குறிப்பிட்ட கைக்கான குழந்தையின் விருப்பத்தை மதித்து நடப்பதுதான் புத்திசாலித்தனம்.

ஒரு குறிப்பிட்ட கைக்கான குழந்தையின் விருப்பத்தை எப்படி அறிந்து கொள்ள முடியும்?

கீழ்க்காணும் செயல்களில் குழந்தை ஈடுபடும்போது, தாமாக அச் செயல்களுக்கு, குழந்தை எந்தக் கையைப் பயன்படுத்துகிறது என்பதைக் கவனியுங்கள்.

*1. பாட்டிலின் மூடியைத் திறப்பது, மூடுவது.*




*2. பற்கள் பிரஷ் செய்வது அல்லது விரல்களால் தேய்ப்பது*

*3. ஸ்பூனால் சாப்பிடுவது*

*4. காகிதத்தை வெட்டுவது (எந்தக் கையினால் கத்தரிக்கோலைப் பிடித்துக் கொள்கிறது என்பதைக் கவனிக்கவும்.)*

*5. பந்து வீசுவது*

இச் செயல்களை குழந்தை செய்யும் பல நேரங்களில் அதைக் கவனியுங்கள். பல செயல்களுக்கு வலக் கையையே பயன்படுத்தினால் அக் குழந்தை வலக் கைப் பழக்கமுடையதாகவும், இடக் கையைப் பயன்படுத்தினால் இடக் கைப் பழக்கமுடையதாகவும் வளரும்.

– ராஜி





# Navajeevan Saptagiri Ashram

**2-21A, NAVAJEEVAN COMPLEX**
**P.O. TIRUCHANOOR, TIRUPATI-517503**

திருப்பதி வருகைத் தரும் ஆஸ்திக அன்பர்களுக்கு ஓர் அரிய வாய்ப்பு!
குறைந்த முதலீட்டில் நிரந்தர – நிறைவான இடவசதி!!
நவஜீவனின் டோனர்களுக்கு 70% குடில்கள் ஒதுக்கீடு
நவஜீவன் டோனர் அல்லாத வெளிநாட்டு ஆஸ்திகர்களுக்கு 10%
நவஜீவன் டோனர் அல்லாத உள்நாட்டு அன்பர்களுக்கு 20%
புக்கிங் துவக்கம் – 14.4.93 தமிழ்ப் புத்தாண்டு முதல்.

Phase I திருப்பதியில் "நவஜீவன் சப்தகிரி ஆச்ரமத்"தின் வாயிலாக Spl type cottages and Delux Guest Houses நிர்மாணிக்க ஏற்பாடுகள் துவங்கியுள்ளது.

Phase II இந்திய நாட்டின் ஏழு புண்ணிய நதிக் கரைகளில் ஏழு சப்தநதி ஆச்ரம குடில்கள் ஆஸ்திக அன்பர்களின் வசதிக்கேற்ப அமைக்க உத்தேசிக்கப்பட்டுள்ளது.

ஏழு புண்ணிய நதிகள் :

1. கங்கை நதிக்கரை
2. யமுனை நதிக்கரை
3. கோதாவரி நதிக்கரை
4. சரஸ்வதி நதிக்கரை
5. நர்மதை நதிக்கரை
6. சிந்து நதிக்கரை
7. காவேரி நதிக்கரை

ஏழு புண்ணிய ஸ்தலங்கள் :

1. காசி க்ஷேத்திரம்
2. பிருந்தாவனம்
3. நாசிக் த்ரம்பகேச்வரம் அல்லது பத்ராசலம்
4. பிரயாகை
5. அமரகண்டேச்வரம்
6. லேஹ் –லத்தாக் அல்லது வைஷ்ணவி தேவி
7. ஸ்ரீரங்கம்

முக்கிய குறிப்பு :

நவஜீவனின் நிரந்தர டோனர்கள் மற்றும் இதர ஆஸ்திக அன்பர்களின் நீண்ட கால விருப்பத்தின் முதல் கட்டமாக திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் தெய்வீக ஆச்ரம சூழ்நிலையில் ஒரு சில குடில்கள் நிர்மாணிக்க முயற்சிகளைத் துவக்கியுள்ளோம்.

பிரதி தினமும் கலியுக தெய்வமான ஸ்ரீ ஏழுமலையானை சேவிக்கும் பொருட்டு ஆயிரக் கணக்கான ஆஸ்திக அன்பர்கள் வந்து செல்லும் திருப்பதி புண்ணிய க்ஷேத்திரத்தில் ஆஸ்திகர்களுக்கு ஒரு "குறிப்பிட்ட கால நிரந்தர இடவசதிக்கு" "நவஜீவன் சப்தகிரி ஆச்ரமம்" முயற்சித்து வருகிறது. அடுத்த கட்டமாக பாரதத்தின் ஏழு புனித நதிக்கரையிலும் 100 ஆச்ரம குடில்கள் அமைக்க திட்டமிட்டுள்ளோம்.

மேற்கொண்டு விவரம் அறியும் பொருட்டு நவஜீவனின் நிரந்தர டோனர்கள் (PMS, NADS, VAS.) தங்களது டோனர்கார்டின் நெம்பருடன் விண்ணப்பித்தால் இலவசமாக விவரம் அனுப்பி வைக்கப்படும். நவஜீவன் டோனர் அல்லாத இதர ஆஸ்திக அன்பர்கள் மேற்குறிப்பிட்ட அட்ரஸுக்கு ரூ 20/- (twenty only) MO செய்து Booklet and application form தபாலில் பெறலாம்.

நாராயண சேவையில்
K. S. ஆசார்ய

நவஜீவனுக்கு தொடர்ந்து ஆதரவு அளித்து வரும் கருணை உள்ளம் கொண்ட அன்பர்களுக்கு, பார்வையற்ற குழந்தைகள் மற்றும் ஆதரவற்ற முதியோர்களின் சார்பாக தமிழ் வருஷப் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

"ஓம் நமோ ஸ்ரீ வெங்கடேசாய"

# இதற்கு என்ன செய்ய?

என். சிவகாமி, கும்பகோணம்

எங்களுக்குச் சொந்தமான கடைகள் மூன்று கடைவீதியில் உள்ளன. அதை இப்போது விற்பனை செய்ய உள்ளோம். கடையை வாங்கலாம் என வருபவர்கள் எந்தத் தாங்கவர் எந்தெந்தக் கடைக்கு எனக் கேட்கிறார்கள். 1921-ஆம் ஆண்டும் ஒருவரும், 1940 ஆம் ஆண்டு ஒருவரும், 1980-ஆம் ஆண்டு நாங்களும் கடைகளை வாங்கி உள்ளோம். எல்லா மூல பத்திரங்களிலும் சதுர அடி மட்டும் குறிப்பிட்டு ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கிறது. எந்தெந்தக் கடைக்கு எந்தத் தாங்கவர் (கடையின் அகலம் எதிலிருந்து எதுவரை) என அறிந்து கொள்ள வேண்டும். இதற்கு என்ன செய்வது?

பதில் : உங்கள் கடைகள் சம்பந்தமான பத்திரங்களில் சதுர அடி குறிப்பிட்டுள்ளதாக எழுதியுள்ளீர்கள். ஒரு சர்வேயரையும், ஒரு பொறியியல் நிபுணரையும் வரவழைத்து அவர்களை அளந்து குறிக்கச் சொல்லுங்கள். பத்திரத்தில் குறிப்பிட்டுள்ள சதுர அடி கவர்களையும் சேர்த்து வரும் போது எந்தச் கவ.ர் யாருடையது என்பதைத் தெரிந்து கொண்டு விட முடியும்.



ஜி. சுந்தரம்

நான் ஒரு ரிடையர்டு ராணுவ அதிகாரி. என் மனைவி அந்தக் காலத்தில் ஒன்பதாவது வரை படித்திருக்கிறாள். இப்போது +2 வரை படிக்க விரும்புகிறாள். இதற்கு யாரை அணுக வேண்டும்? பல்கலைக் கழகத்தில் 'டிஸ்டண்ட் எஜுகேஷன்', 'ஃபவுண்டேஷன் கோர்ஸ்' என்றெல்லாம் சொல்கிறார்களே? இதெல்லாம் என் மனைவிக்குச் சரியாகுமா?

பதில் : நீங்கள் பள்ளிக் கல்வி இயக்குநர், கல்லூரி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை - 34 என்ற விலாசத்திற்கு உங்களுடைய தேவையைக் கேட்டு எழுதுங்கள். அவர்கள் +1, +2 எழுதுவதற்கான முறைகள், விண்ணப்ப மனு முதலியவற்றை அனுப்புவார்கள். உங்கள் மனைவி 'பிரைவேட் காண்டிடேட்'டாகவே பரீட்சை எழுதலாம். அல்லது ஏதேனும் டியூட்டோரியல் பள்ளியில் சேர்ந்தால் இந்த விவரங்கள் எல்லாம் எளிதாகப் பெற்றுப் பயனடையலாம். பல்கலைக் கழகத்தில் நேரடியாக விண்ணப்பம் கோருவதை விடப் படிப்படியாக +1, +2 எனச் செல்வதே நல்லதும் கூட.

மாவுக் கோலம் போடுகிறோம் அல்லவா? ஊற வைக்கும் அரிசியோடு 1 ஸ்பூன் ஜவ்வரிசியும் 1 ஸ்பூன், உ. பருப்பு ஆகியவற்றைப் போட்டு அரைக்கவும். கோலம் பளபளவென்று இருப்பதோடு காலில் ஒட்டிக் கொண்டு தொந்தரவு செய்யாது. மேலும் எளிதில் அழியாது.

– கமலா



கலையரசி,
சென்னை.

சில தினங்களுக்கு முன்பு தினசரிகளில் ஒரு செய்தி பார்த்தேன். தரமான தண்ணீரைக் கொடுக்காததால் ஹோட்டல்களின் மேல் நடவடிக்கை எடுத்ததாக. வீடுகளில் வருகின்ற தண்ணீர் கூடப் பல சமயங்களில் மோசமாகத்தான் இருக்கிறது. வழக்கு மன்றம் போகலாமா? இதற்கு என்ன செய்வது?

பதில் : நீங்கள் குடிக்க வைத்துள்ள தண்ணீர் அசுத்தமானது எனத் தெரிந்து கொள்ள, அந்தக் குடிநீரை சிறிது பாட்டிலில் எடுத்து கிண்டி ரயில் நிலையத்திற்கு அருகிலுள்ள கிங் இன்ஸ்டிட்யூட்டை அணுகுங்கள். தண்ணீரின் தரத்தை நிர்ணயிக்க அவர்களிடம் தனி பரிசோதனைச் சாலையுள்ளது. அதில் நீங்கள் தரும் நீரைப் பரிசோதித்துத் தரம் நிர்ணயித்துக் கொடுப்பார்கள். நீங்கள் விலை கொடுத்து வாங்கும் நீராக இருந்து அது தரக்குறைவாக இருக்கும் பட்சத்தில் நுகர்வோர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடரலாம்.

பிரேம் நாராயண், சென்னை.

நான் எழுதத் தொடங்கியுள்ள இந்த நிகழ்ச்சி நான் என் கண்ணால் நேராகப் பார்க்க நேர்ந்தது. பல்லவன் பஸ் இரண்டு ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொள்கிற மாதிரி இணையாக ஓடி நடுவில் வந்த சைக்கிள்காரர் மேல் பின் டயர் ஏறி அடுத்த விநாடி ஒரு பஸ் நிற்காமல் பறந்து விட்டது. 'டமார்' என்ற வெடிச் சத்தம், திரும்பிப் பார்த்தால் சொல்லவே மிகுந்த வேதனையாக உள்ளது. 30 வயது மதிக்கத்தக்க அவன் ஜீவன் துடித்துக் கொண்டேயுள்ளது. கண்ணீருடன்தான் இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். சாகப் போகிற ஜீவனா, இல்லை ஒருவேளை உடனடியாக மருத்துவமனைக்கு அழைத்துப் போனால்

பிழைத்திருப்பாரோ என்றும் புரியவில்லை. தண்ணீர் கொடுக்கலாமென்றாலோ, வேடிக்கை பார்க்கும் ஜனங்களிடமிருந்து மறைக்கப் போர்வையை போர்த்தலாமா, ஆட்டோவைக் கூப்பிடலாமா, என்றும் ஓட வில்லை. உடனடியாகத் தோன்றியது யாரை யும் பாதிக்காதபடி போலீஸுக்கு போன் செய்வது என்றுதான். ஏற்கெனவே 3 பேர் சொல்லி விட்டார்கள். வந்து கொண்டே யிருக்கிறோம் என்றும், நம்முடைய பூர்வாங் கத்தை நிதானமாக விசாரித்துக் கொண்டும் அங்கிருந்து ஒரு பதில். ஏதாவது செய்ய லாம். எல்லோரும் ஒத்துழைப்புத் தாருங்கள் என்றால்,

"என்ன மேடம் போலீஸ் வந்து ஆவன செய்யும். நாம் உதவி செய்யப் போக நம் மையே அவர்கள் ஆயிரம் கேள்விகள் கேட் பார்கள். கோர்ட்டுக்கு வரச் சொல்லு வார்கள்" என்று நழுவி விட்டார்கள். இதற் கிடையில் அரை மணி நேரம் கழித்துப் போலீஸ் வந்து கோணி ஒன்றை போர்த்தி விட்டது. உயிர் இருந்ததா இல்லையா கடவு ளுக்கே வெளிச்சம்.

இப்போது நான் தெரிந்து கொள்ள விரும்புவது இதுதான். இந்த மாதிரி சம்ப வம் நடந்தால் மனிதாபிமான நோக்கோடு பொது மக்கள் இப்படி உதவி செய்தால் ஏதேனும் பிரச்னைகள் வருமா?

பதில் : உங்களுடைய கேள்வி அற்புத மான கேள்வி. மனிதாபிமான அடிப்படை யில் உதவ மன உறுதி வேண்டும். உடனடி யாக நீங்கள் அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றிருக்கலாம். நீங்கள் விபத் தை நேரில் பார்த்து இவர்தான் குற்றவாளி என அறிந்து கொள்ளாத பட்சத்தில், காவல் துறையிடம் உங்களைச் சாட்சியாகப் போட வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளலாம். ஒரு உயிர் துடிக்கிறது என்கிற பட்சத்தில் மற்ற எதையும் நோக்காது உதவுவதுதான் சாலச் சிறந்தது. அவர் அவருடைய குடும் பத்தையே காப்பாற்றும் நிலையிலே இருப் பவராகக் கூட இருக்கலாம். எனவே நமக்கு ஏற்படுகின்ற சிறு சிரமங்களைக் கொஞ்சம் தள்ளி வைப்பது நல்லது. இதனால் பிரச் னைகள் எதுவும் வராது.

(இக் கேள்வி மருத்துவரை, காவல் துறையை, பொது மக்களை நோக்கிக் கேட்கப்பட்ட சிறப்பான கேள்வி. இதைப் பற்றிச் சம்பந்தப்பட்டவர் களை அணுகி விரிவான பேட்டியாக அடுத்த இதழில் பிரசுரிக்கிறோம். - ஆர்.)




# Build Your Fortune

with a member of Rs. 2,600 Crore
RPG Enterprises

## CEAT FINANCIAL SERVICES LTD.

**SURABHI DEPOSIT**
Invest just Rs. 3,000 now
in Surabhi Deposit
and get back
Rs. 1,24,000 plus
in 25 years
at an annual yield
of 162.82%

**SURABHI PLUS DEPOSIT**
Invest just Rs. 6,000 now
in Surabhi Plus Deposit,
get back your Rs. 6,000
after 5 years
and still get Rs. 1,30,990
in total 25 years*
from the date of deposit.



**CEAT**
**FINANCIAL SERVICES LTD.**

**Regd. Off:** Duncan House, 31 Nethaji Subhash Road, Calcutta 700 001, Ph: 206831.
**CORPORATE OFFICE:** 102, Maker Chambers, III, 10th Floor, Nariman Point, Bombay 400 021. Tel: 2851131.
**Madras: 7-L, Century Plaza, 560/561, Mount Road, Madras 600 018. Tel: 457393.**
**Delhi:** Ph: 3316076, **Bangalore:** Ph: 213015, **Hyderabad:** Ph: 237879,
**Bombay:** Ph: 2851349, **Calcutta:** Ph: 402334, **Pune:** Ph: 434592.

* Assumes Renewal every 5 years and present interest rate and cumulating factor. Any changes in interest rate, cumulating factor will affect the maturity amount. Subject to RBI guidelines.

# சொல்ல விரும்புகிறோம்!

# கொள்ளுப் பேரன் புலம்பல்!

★ 'வயதானால் என்ன, வாழ்க்கை வாழ்வதற்கே' கட்டுரை அருமை. 'வயதாகி விட்டதே, கிடையாகி விட்டோமே' என்ற மனச் சோர்வுடன் சோர்ந்து, நொந்து இருக்கும் பல முதியவர்களுக்கு அருமையான ஆலோசனைகள் வழங்குகிறது - பாராட்டுக்கள்.

பாபநாசம், கல்பகம் தம்பு.

★ "வழிவழியாய் வந்த கட்டுப்பாடு" - பானுகுமார் எழுதியுள்ளபடி ஒவ்வொரு சந்ததியினரும் தாமே இளவயதில் கஷ்டப்பட்டவர்களாகவும், தங்கள் வாரிசுகளை கஷ்டமே காட்டாமல் சந்தோஷமாக இருக்க வைக்க பாடுபட்டவர்களாகவும் என்னுமென்ற வழக்கமான புலம்பல்கள் மாறவே மாறாதோ. அவர் மூன்று தலைமுறையினரைப் படம்பிடித்துக் காட்டினார்.

இப்படியே போனால் நம் பேரன், கொள்ளுப் பேரன் காலத்துப் புலம்பல் என்னவாக இருக்கும்...? ஒரு கற்பனை. "அப்பா இங்கு இருக்கின்ற அமெரிக்கா, லண்டன் அழைத்துப் போனதையே பீத்திக் கொள்கிறாரே, என் ஃப்ரெண்ட் வீட்டில் பார். ஸ்பேஸில் வீடு வைத்திருக்கிறான். தன் மினி ராக்கெட்டில் ஏறி சந்திரன், செவ்வாய்னு ஜாலியாக சுத்தி விட்டு வருகிறான். வீட்டிலோ 'ரோபாட்' வைத்துதான் தன் வேலைகளை முடித்துக் கொள்கிறான். என் நிலைமையைப் பார்' என்பதாக இருக்குமோ.

சென்னை - 78, ராதா ஸ்ரீதர்.

★ 'தாய்மை எனப்படுவது' என்ற சிறுகதை படித்தேன். என்னுள் இத்தனை காயமாக கேள்விகளாக, குமுறல்களாக இருந்த அனைத்துக்கும் இந்தச் சிறுகதை மூலம் விடை பெற்றேன். நடைமுறை வாழ்க்கையோடு இழைந்து நடைபோட்ட இந்தச் சிறுகதை என் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்தது. இதைப் படைத்த வி. ராஜாராம் அவர்களுக்கு எனது மனமார்ந்த பாராட்டுக்கள்.

ஜயங்கொண்டபுரம்,

டி. கே. பத்மாவதி செல்வராஜன்.

★ எப்படி தம்மை மற்றவர்கள் உள்ளத்தில் நிலைநிறுத்திக் கொள்வது அல்லது பிறரால் எப்படி தமது உள்ளத்தை வெளி உலகிற்கு அறிமுகப்படுத்திக் கொள்வது போன்றவைகளை மிக அருமையாக கே. என். ராமச்சந்திரன் தனது "புதியவர்களாம் தன்மை" மற்றும், "மற்றவர்களை மயக்குவது எப்படி?" போன்ற கட்டுரைகளில் விளக்கியுள்ளார்.

மனதில் மறைந்துள்ள தெளிவுகளை வெளிக்கொணர இவரது படைப்பு ஏனையவர்களுக்கு உபயோகமாகவிருக்கும் என்பதில் ஐயமில்லை. இருபது வருடமாக சேல்ஸ் லைனிலிருக்கும் என்னைப் போன்றவர்களுக்கு அவர் குறிப்பிட்டிருக்கும் விஷயங்கள் 100% வெற்றியைத் தந்துள்ளது.

போத்தனூர், ஸ்ரீமதிநாதன்.

★ "பட்டான போட்டி"யில் கலந்து கொண்ட மங்கையர் மலர் வாசகி சொல்ல விழைகிறேன். போட்டியில் முதல் பரிசிற்கு மும்மணிகளாக நீங்கள் தேர்ந்தெடுத்த கட்டுரை படிக்கப் படிக்க என்னைப் பரவசத்தில் ஆழ்த்தியது நிஜம். (பல தடவை படித்தேன்) யதார்த்தத்தில் தெளிவான நடையில் விஷயங்களை அணுகி அந்த முதலாவது வைரம் பதித்தது போன்ற புடவையை, கொடுத்து சிநேகிதியை வாழ வைத்த அருமை ஆஹா! என்று சொல்லி வாழ்த்துகிறேன்.

சென்னை - 39,

திருமதி. லலிதாம்பாள்.

★ எழுபது வயதிலும் சுறுசுறுப்பாக இருக்கலாம் என்ற கட்டுரையைப் படிக்கும்போதே இனிமையாக இருந்தது. பாதுகாத்து விட்டேன்.

நெல்லிக்குப்பம், தமிழ்ப்பரிதி.

★ கேபிள் டிவியால் பத்து சதம் நன்மை என்றால் தொண்ணூறு சதம் தீமைதான். எந்த வேலைகளின் மீதும் கவனம் செலுத்த முடியாமல் சினிமா பார்ப்பதில்தான் மனம் லயிக்கும். இதனால் குடும்பத்தில் பல தொல்லைகள் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைப் பலர் மறைந்து விடுகின்றனர். கேபிள் டி.வி. பார்ப்பதைப் பெருமையாக கருதிக் கொண்டு இடையூறுகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

கூச்சம் ஒரு தடையாக இருந்தால் நம் முன்னேற்றம் தடைபட்டு நமது எதிர்காலம் பாதிக்கப்படும். கூச்சத்தை அகற்றி தேவையான இடத்தில் அவசியமான மனோதிடமான வார்த்தைகள் சரளமாக வேண்டும்.

மேட்டுப்பாளையம், பி. ஏ. வஹாப்.

★ மார்ச் மாத மங்கையர் மலரில் இடம் பெற்றிருந்த 'பெண்கள் ஏன் வேதம் ஓதக் கூடாது' என்ற கட்டுரை சம உரிமைக்காக போராடி வரும் பெண்ணினத்தின் கோரிக்கையில் இருக்கும் நியாயத்தினை ஆதரித்திருந்த நல்லதொரு கட்டுரை.

மாதாஜியின் ஆன்மீகம் + சமூக சேவை பெண்ணினத்திற்கே பெருமை சேர்த்து வரும் போற்றத்தக்க பணியாகும்.

கோவை - 12, கலைச்செல்வி.

அட்டை வண்ணப்படம் : டி. சி. நாகேஷ்

✱ கிரிஜா





✱ ஹேமலதா



✱ உஷா

# பொருள் : சரிவிகித உணவு

## முதல் பரிசு ரூ. 300/-
## பலசத்துப் பகோடா

**தேவையான பொருட்கள் :**

துவரம் பருப்பு - 1 கப்
கடலை பருப்பு - 1 கப்
உளுத்தம்பருப்பு - 1/4 கப்
புழுங்கல் அரிசி - 1/4 கப்
பச்சை மிளகாய் - 10
தேங்காய்க் கீத்து - 2
எண்ணெய் - 1/2 லிட்டர்
தயிர் - 1/2 லிட்டர்
கொத்தமல்லி தழை - 1 கட்டு

வெள்ளரி, காரட், வெங்காயம், தக்காளி, கோஸ் போன்ற பச்சைக் கறிகாய்த் (ஏதேனும் ஒன்று) துண்டங்கள் - 1 கப்

அல்லது

உருளை, பீன்ஸ், பட்டாணி, காரட், பூசணி, பரங்கி, சீமைக் கத்திரிக்காய்ப் போன்றவற்றில் ஏதேனும் ஒரு காயின் வெந்த துண்டங்கள் - 1 கப்

**செய்முறை :**

பருப்பு, அரிசி வகையறாக்களைக் கழுவிச் சுத்தம் செய்து நீரில் 1 மணி நேரம் ஊறவைத்து பச்சை மிளகாய் உப்புச் சேர்த்துக் கர கரப்பாக அரைத்துக் கொள்ளவும். இத்துடன் தேங் காய்ப் பத்தையை பல்லு பல்லாகக் கீறிக் கலக்கவும்.

வாணலியில் எண்ணெய் வைத்துக் காய விட்டு அதில் பருப்புக் கலவையை பகோடா போல் உருட்டிப் போட்டுப் பொரித்து வைத்துக் கொள்ளவும்.

இப்போது ஒரு தட்டில் தயிர் ஊற்றி உப்புச் சேர்த்து கொத்த மல்லித் தழை அரிந்து போட்டு துருவிய பச்சைக் காய்கறி 1 கப் அல்லது உப்புச் சேர்த்து வெந்த காய்த் துண்டங்கள் 1 கப் சேர்த் துக் கலக்கவும். அதன் மத்தியில் பக்கோடாக்களைப் போட்டு ஊறவிடவும். அரைமணி ஊறிய பின் எடுத்துச் சாப்பிடவும்.

இதுவே எல்லாவிதச் சத்துக்களும் சேர்ந்த 'பலசத்துப் பகோடா' என்ற சரிவிகித உணவு.

- கிரிஜா, பெங்களூர் - 2.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-
## பருப்புக் கீரை ஆம்லெட்

சரிவிகித உணவு : மாவுச்சத்து, புரதச்சத்து, கொழுப்புச் சத்து, உயிர்ச்சத்து, தாதுச்சத்து ஆகிய சத்துக்கள் ஒருங்கிணைந்த

# இம்மாத இல்லத்தரசி

## சிறந்தவைகளையே நாடும் நீங்கள்
## போலிகளை கண்டு ஏமாறாதீர்கள்




# மான் மார்க்
# அப்பளம்

### மற்றும் சிப்ஸ்

தயாரிப்பு துறையில் புதிய முறைகளை புகுத்தி வாடிக்கையாளர்களின் தேர்வில் முதன்மையான அப்பளம், மேலே நாடுகளில் பெருகி வரும் தேவை இதற்கு சான்று.

எங்களின் பலரக தயாரிப்புகளை கண்டு பிடிப்பது எளிது. ஆங்கிலத்தில் **STAG BRAND APPALAM** தமிழில் **மான் மார்க் அப்பளம்** என்றும் இருப்பதை பார்க்கலாம். மேலும் விலாசத்தை பார்க்கலாம்.

## E.K. BALAKRISHNAN ENTERPRISES

NO.526, JAYARAM NAGAR, AYAPAKKAM,
AMBATTUR-MADRAS 600 077. PHONE : 656243

– AARJEE

---

## காஸ் ஸ்டவ் பயன்படுத்துவோர் கவனத்திற்கு!



உங்கள் வீட்டு காஸ் ஸ்டவ் தொல்லைகள் தருகிறதா? ரிப்பேர் ஆகிவிட்டதா? கவலை வேண்டாம்!

எங்களை அழைக்கவும்.

**Ph: 4830966**

எல்லா வகையான காஸ் அடுப்புகளும், வெளிநாட்டு ஸ்டவ்கள் உட்பட ரிப்பேர் செய்யவும், பழுதடைந்த பாகங்களை புதிதாக மாற்றவும், பிசுக்கு நீக்கி சுத்தம் செய்யவும், புதிதாக ஸ்ப்ரே பெயின்டிங் (நீங்கள் விரும்பிய வண்ணங்களில்) செய்யவும், குரோமியம் பிளேட்டிங் செய்யவும், ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஸ்டவ் பாலிஸ், பெட்ரோல் ஓவர் ஆயிலிங் செய்யவும், திருமணம் மற்றும் விசேஷ வைபவங்களுக்கு பெரிய காஸ் ஸ்டவ் வாடகைக்குப் பெறவும்.

# கவனம் தேவை

காஸ் ஸ்டவ் மெக்கானிக் & சர்வீஸ் ஷாப்
**140, ரங்கராஜபுரம் மெயின் ரோடு, கோடம்பாக்கம், சென்னை–24.**

ரிப்பேர் செய்ய தங்கள் ஸ்டவ்வை எடுக்கும்போது உடனடி உபயோகத்திற்கு மாற்று காஸ் ஸ்டவும் தருகிறோம்.

உணவை நாம் சரிவிகித உணவு என்கி றோம். இவை அனைத்தும் கீழ்கண்ட உண வில் இருக்கிறது.

**தேவையான பொருட்கள் :**

அரிசி - 2 கப்
உளுந்தம் பருப்பு - 1/2 கப்
கடலைப்பருப்பு - சிறிது
மிளகாய் வற்றல் - 10 - 15
தேங்காய் - 1/2 மூடி
உப்பு - தேவையான அளவு
பருப்புக்கீரை, முருங்கைக்கீரை சிறிதளவு
எண்ணெய் - 100 கிராம்
வெங்காயம் - 2
கருவேப்பிலை - கொஞ்சம்
கொத்தமல்லி தழை - கொஞ்சம்

**செய்முறை :**

முதலில் அரிசி பருப்புகளை 1/2 மணி நேரம் ஊற வைக்கவும். பிறகு அவற்றைக் களைந்து கல் நீக்கி தேங்காய்த் துருவல், பெருங்காயம், உப்பு, மிளகாய் வற்றல் சேர்த்து வடை மாவு பக்குவத்திற்கு அரைக் கவும். (சற்று கொர கொர வென்று) அவற் றில் சிறிதளவு நீரைக் கலந்து (தோசை செய் வதுபோல்) கலக்கிய பின் அதில் பருப்புக் கீரை, முருங்கைக்கீரை, கருவேப்பிலை, அரிந்த வெங்காயத் துண்டுகள் சேர்த்து நன் றாகக் கலக்கவும்.

பின் தோசைக் கல்லில் எண்ணெயை ஊற்றி தோசை வார்ப்பது போல் ஊத்தி எடுக்கவும்.

- அ. ஹேமலதா, முண்டியம்பாக்கம்.

## மூன்றாம் பரிசு ரூ. 100/-
## மிக்ஸட் டால் வெஜ் கபாப்

இந்தச் சிற்றுண்டி செய்வதற்கு ஆகக் கூடிய நேரம் - ஒரு மணி நேரம்.

* புவனேஸ்வரி





* சைலஜா

சிற்றுண்டியின் அளவு - சுமார் 4 நபர் களுக்கு

**தேவையான பொருட்கள் :**

கபாப் செய்வதற்கு :
பச்சரிசி - 1/4 கப்
புழுங்கலரிசி - 1/4 கப்
துவரம் பருப்பு - 1/4 கப்
பாசிப் பருப்பு - 1/4 கப்
கடலைப் பருப்பு - 1/4 கப்
வெள்ளை உளுத்தம் பருப்பு - 1/4 கப்
மிளகாய் வற்றல் - 5
உப்பு - தேவையான அளவு
சீரகம் - 1/4 டேபிள் ஸ்பூன்
மிளகு - 1/4 டேபிள் ஸ்பூன்
பெருங்காயம் - சிறிதளவு
தேங்காய்த் துருவல் - 1/2 கப்
கொத்துமல்லி தழை - 1 கட்டு
மஞ்சள் பொடி - 1 சிட்டிகை
கபாப் குச்சிகள் - 12

முளை கட்டுவதற்கு :
பாசிப்பயறு - 50 கிராம்
கொத்துக் கடலை - 25 கிராம்

சாலட் செய்வதற்கு :
பச்சை தக்காளி - 1/4 கிலோ
சிவப்புத் தக்காளி - 1/4 கிலோ
பெரிய வெங்காயம் - 1/4 கிலோ

**செய்முறை :**

முளைகட்டுதல் : பாசிப்பயிறு, கொத் துக் கடலையை சுத்தம் செய்து 1 நாள் முழுவதும் நீரில் ஊறவைக்கவும். பிறகு நீரை நன்கு வடித்தபின் ஒரு லேசான துணி யில் முடிந்து ஒரு பாத்திரத்தில் மூடிவைக் கவும். மறுநாள் பார்த்தால் பயறுகளில் சிறு முளைகள் விட்டு சத்துணவாக மாறி நமக்கு நன்கு பயன்படும்.

கபாப் செய்தல் : ஊறவைத்த அரிசி, பருப்புகளை கல் நீக்கி களையவும். பிறகு வற்றல், சீரகம், மிளகு, பெருங்காயம், உப்பு, மஞ்சள் பொடி எல்லாவற்றையும் சேர்த்து கல்லுரலில் கரகரப்பாக அரைக்கவும்.

அரைத்த விழுதில் தேங்காய்த் துருவல், பயறு சன்னமாக நறுக்கிய கொத்தமல்லி தழை கலந்து விடவும். எண்ணை தடவிய தட்டில் மாவைக் கொட்டி சமமாகப் பரப்பி ஆவியில் 10 அல்லது 15 நிமிடங்கள் வேக வைக்கவும்.

பிறகு எலுமிச்சம்பழ அளவு சுற்றளவுள்ள ஒரு டப்பாவின் மூடியை வேக வைத்த கலவையில் அழுத்தி வட்டவடிவ வில்லைகள் செய்து தனியாக ஒரு தட்டில் வைக்கவும்.

சாலட் செய்தல் : பச்சைத் தக்காளியை வட்டவடிவ வில்லைகளாக அழகாக நறுக்கவும். சிவப்புத் தக்காளி, மற்றும் பெரிய வெங்காயத்தையும் அதே போல் வில்லைகளாக நறுக்கவும், பிறகு எல்லாவற்றிலும் உப்பு மிளகுத்தூள் தூவி வைக்கவும்.

கபாப் குச்சிகளில் அமைத்தல் :

கபாப் குச்சிகள் அல்லது சுண்டு விரல் அளவு பருமனுடைய 1/2 அடி நீளமான குச்சிகளை சுத்தம் செய்யவும். வேகவைத்த கபாப் வில்லைகளில் ஒன்றை எடுத்து குச்சியில் சொருகி இடதுபுறம் தள்ளவும். பிறகு சிவப்புத் தக்காளி வில்லையைச் சொருகவும். பின் வெங்காய வில்லை, பச்சை தக்காளி வில்லையைச் சொருகவும். இதே வரிசையில் மறுபடி மற்றொரு செட் வைத்து தட்டில் வைக்கவும். இதைப் போல பல குச்சிகளில் கபாப் அமைத்து இரு நுனிகளையும் கையில் பிடித்துக் கொண்டு கபாப் உண்ணவும்.

ஸ்டார்ச், புரோட்டீன், பலவித உயிர்ச் சத்துக்கள், பி-காம்ப்ளெக்ஸ் நிறைந்த இந்தச் சிற்றுண்டி சிறந்த சரிவிகித உணவாகும்.

- பி. உஷா, பொள்ளாச்சி.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-
## கீரை - சோயா கட்லட்

**தேவையான பொருட்கள் :**

சோயா பீன்ஸ் - 250 கிராம்
உருளைக்கிழங்கு - 3 (பெரியது)
பச்சைப் பட்டாணி - 2 கைப்பிடி அளவு
வெங்காயம் - 2 (பெரியது)
மிளகாய்ப் பொடி - 2 டீஸ்பூன்
தனியாப் பொடி - 1 டீஸ்பூன்



சமீபத்தில் சென்னை, பாண்டி பஜாரில் அமைந்த ஸ்ரீ பகவான் தங்க மாளிகை தனது முதலாமாண்டு விழாவைக் கொண்டாடியது. தரமும், நியாயமான விலையும் இருப்பதால் வரும் வாடிக்கையாளர்கள் தங்களது நண்பர்களையும் அழைத்து வருகிறார்கள் என்கிறார் இதன் உரிமையாளர் மதன்லால் ஜெயின்.

ஏதாவது ஒரு கீரை வகை - 2 கைப்பிடி அளவு
சோம்பு, பட்டை, லவங்கம் - 1/2 ஸ்பூன் பொடி செய்தது
உப்பு - தேவையான அளவு
ரொட்டித் தூள் - தேவையான அளவு
பொரிக்க டால்டா - தேவையான அளவு
வறுத்த வேர்க்கடலைப் பொடி - 4 டீஸ்பூன் (ரவையாக)
இஞ்சி, பூண்டு - அரைத்தது 1/2 ஸ்பூன்

**செய்முறை :**

சோயா பீன்ஸை முதல் நாள் இரவு ஊற வைத்து மறுநாள் வேகவைத்து மசித்துக் கொள்ளவும். உருளைக் கிழங்கு, பட்டாணியையும் தனித்தனியாக வேக வைத்துக் கொள்ளவும். சோயா மாவுடன் உருளைக் கிழங்கையும் மசித்துக் கொள்ளவும். வெங்காயம், கீரை - பொடியாக நறுக்கிக் கொள்ளவும். அடுப்பில் வாணலியை வைத்து 2 ஸ்பூன் டால்டா விட்டு வெங்காயத்தையும் பட்டை, லவங்கப் பொடியையும் சேர்த்து வதக்கவும். அத்துடன் அரிந்து வைத்த கீரை, மிளகாய், தனியாப் பொடியைச் சேர்த்து நன்றாக வதக்கி சிறிது உப்பு போட்டு மூடி வைக்கவும். சோயா - உருளைக் கிழங்கு கலவையையும் சேர்த்து அளவாக உப்பு போட்டு மிதமான அனலில் 5 நிமிடம் வைக்கவும். பிறகு இறக்கி ஆற வைத்து, வேர்க்கடலைப் பொடியை கலந்து முக்

# இது ஓர் சமையல் எண்ணெயின் விளம்பரம்





இந்தப் படத்தில் நீங்கள் பார்ப்பது ஓர் நேர்த்தியான தோற்றம் அல்லவா? ஆனால் இந்த வடிவம் பெறுவது அவ்வளவு சுலபமல்ல. நீங்கள் நினைத்தவுடன் இந்த 'சிக்'கென்ற உடலமைப்பு கிடைத்து விடாது.

இந்தப் பதுமை போன்ற வடிவம் பெற, சில தியாகங்கள் நீங்கள் செய்தாக வேண்டும். சாக்லெட்டுகள், ஐஸ்கிரீம், கொழுப்புச் சத்து மிக்க உணவு வகைகள்... இன்னும் உங்களுக்குப் பிடித்த ருசியான பலவற்றை நீங்கள் தவிர்த்தாக வேண்டும். இனி நாம் நேரடியாக இதைப் பார்ப்போமேயானால்...

உணவுக் கட்டுப்பாடு என்பது கடினமான விஷயம். சாப்பிடுவது அப்படியல்ல. நீங்கள் எது வேண்டுமானாலும் சாப்பிட்டு இந்த "சிக்"கென்ற உடலமைப்புடன் விளங்கலாம். (அத்துடன் நீங்கள் சிறு சிறு உடற்பயிற்சிகளான, அலுவலகத்திற்கு சைக்கிளில் செல்லுதல், அலுவலகத்திற்கு செல்லாதவராயிருப்பின் நடைபயிற்சி செய்தல்... போன்றவற்றை கடைபிடித்தாக வேண்டும்). நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள் என்பது சாதாரண விஷயம். மேலும் நீங்கள் சாப்பிடும் உணவில் உண்மை என்ன? உங்கள் உணவு எதனால் செய்யப்பட்டுள்ளது என்ன பார்க்கப்பட வேண்டும்.



உதாரணமாக சொல்லப் போனால் என்ன சமையல் எண்ணெய் நீங்கள் உபயோகிக்கிறீர்கள் என கேட்கலாம். எண்ணெய் என்று சொன்னோம் அல்லவா? நல்லது. அதற்கு ஒன்றும் சிரமமாக தேர்வு செய்ய அவசியமில்லை. கொழுப்புச்சத்து மிக்க எண்ணெய் உபயோகப்படுத்துவதைத் தவிர்த்தல் உகந்ததுமானது. இப்படி எல்லாவற்றையும் பார்க்கையில் உடலுக்குப் பாதுகாப்பான ஓர் எண்ணெய் என நாம் நம்பக்கூடியது சூர்யகாந்தி எண்ணெய் ஒன்றுதான்.

'அனுராக்' ஓர் அன்பளிப்பு

'அனுராக்' எங்கள் புதிய படைப்பான சூர்யகாந்தி எண்ணெய். கொலஸ்ட்ரால் (CHOLESTROL)-ஐ எதிர்க்கும் தன்மை கொண்டது. எனவே உங்கள் இருதயத்திற்கு இது மிகவும் நல்லது. மேலும் இதில் கொழுப்பின் சேர்க்கை மிகவும் குறைவு. எனவே இது உடலுக்கு மிகவும் பாதுகாப்பானதாகும். அதி நவீன முறையில் சுத்திகரிக்கப்படுவதால், 'அனுராக்' மிகவும் தூய்மையாக விளங்குகிறது. மேலும் உங்கள் உடல்நலம் பேணுவதோடு உங்கள் உணவினையும் ருசிகரப்படுத்துகிறது. மேலும், 'அனுராக்' வைட்டமின் 'E' நிறைந்தது. உங்கள் வாங்கும் சக்திக்கு உட்பட்டு இருக்கும். இப்பொழுது உங்களுக்குத் தெரியும் இது ஓர் சமையல் எண்ணெயின் விளம்பரம் என்று. எனவே, என்ன செய்வதாக உத்தேசம்? உங்களுக்கு அருகாமையில் உள்ள மளிகைக் கடையிலேயே எங்கள் எண்ணெய் கிடைக்கும்.






சூர்யகாந்தி எண்ணெய்

(வைட்டமின் E அடங்கியது)

**ஊட்டச்சத்து மிக்க உணவே நல்ல உடல்நலத்தின் ஆதாரம்**

எஸ் & எஸ் இண்டஸ்ட்ரீஸ் & எண்டர்பிரைசஸ் லிட்-ன் தரமான தயாரிப்பு. 189, அண்ணா சாலை, சென்னை-600 006





Imageads/TAM

கோண வடிவிலோ, வட்டவடிவிலோ கட்லட்டுகளாக தட்டி ரொட்டித் தூளில் புரட்டி எடுத்து வைக்கவும்.

அடுப்பில் தோசைக்கல் வைத்துக் காய்ந்ததும் சிறிது டால்டா விட்டு கட்லட்டுகளை போட்டு சுற்றிலும் டால்டாவை ஊற்றி இருபுறமும் நன்றாக சிவக்க வறுத்து எடுத்து விடவும்.

தேங்காய் சட்னியுடனோ, தக்காளி சாஸ்-உடனோ சேர்த்துப் பரிமாறலாம். சத்துள்ள சுவையான புரத உணவாகும்.

- பி. புவனேஸ்வரி, சென்னை - 21.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-
## ஈஸ்ட்மென் கலர் இடியாப்பம்

தேவையான பொருட்கள் :

முளை விட்ட பாசிப் பயறு - 1/4 கப்

காரட் துருவியது - 1/4 கப்

தேங்காய் துருவல் - 1/4 கப்

வெங்காயம் பொடியாக நறுக்கியது - 1/4 கப்

எலுமிச்சை பழம் - 1/2 மூடி

கேழ்வரகு மாவு - 2 கப்

மிளகுத் தூள் - 1/2 ஸ்பூன்

கொத்தமல்லி கீரை - சிறிதளவு

உப்பு - தேவையான அளவு

செய்முறை :

கேழ்வரகு மாவை சிறிது உப்பு நீர் கலந்து கட்டியாக பூரி மாவு போன்று பிசைந்து கொள்ளவும். இந்த மாவில் பாதியை எடுத்து இடியாப்பமாக குக்கர் தட்டில் பிழிந்து கொள்ளவும். பின்னர் மற்ற எல்லா பொருட்களையும் கலந்து அதில் எலுமிச்சை பழத்தைப் பிழிந்து பூரணம் தயாரித்துக் கொள்ளவும். இந்த பூரணத்தை பிழிந்த இடியாப்பத்தின் மேல் ஒரே சீராக பரப்பவும். அதன் மேல் மற்ற பாதி மாவை இடியாப்பமாக பிழிந்து இந்தக் கலவையை மூடவும். குக்கரில் வெயிட் போடாமல் 15 நிமிடம் ஆவியில் வேக வைக்கவும். இதில் புரதச்சத்து, விட்டமின் மற்றும் இரும்புச் சத்தும் உண்டு. ஆவியில் வேகவைப்பதால் சத்தும் குறையாது. எண்ணெயும் கிடையாது. எனவே வயதானவர்க்கும் ஏற்ற சரிவிகித உணவு.

- எஸ். ஷைலா, ராஜபாளையம்.

# புதியவை அறிமுகம்

கூடலூரைச் சேர்ந்த மதுரி இண்டர்நேஷனல் ப்ராடக்ட்ஸ் 'குஷ்பூ ஷாம்பூ'வை புதிதாக அறிமுகப் படுத்தியுள்ளது. ஏழு வித நறுமணங் களில் தயாரிக்கப்படுகிறதாம். இவற்றுள் 'கூல் அண்ட் கொலோன்' மற்றும் 'ப்யூட்டி ப்ளஸ்' எனும் இரண்டு நறுமணங்கள் புதுமையானவை என்கிறார்கள் இவர்கள்.







ரீகல் சொட்டு நீலம் தயாரிப் பாளர்கள் இப்போது மங்களம் பூசு மஞ்சள் தூள் என்ற புதிய பொருளை அறிமுகப்படுத்தி இருக் கிறார்கள். மஞ்சள் பூசிக் குளிக்கும் பெண்களுக்காகவே தரமான முறையில் தயாரிக்கப்பட்டது என் கிறார்கள் இதன் தயாரிப்பாளர்கள்.



# ப ட் டா ன

## இரண்டாம் பரிசுக் கட்டுரை

**(ரூ. 3000/- மதிப்புள்ள பட்டுப் புடைவை)**

## சாகும்வரை அதே புடவைதான்!

இந்தப் பட்டுப் புடைவையின் பின்னணி சற்று வருத்தமானது. என் தோழியின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சியினை தந்துள்ளேன்.

என் தோழி மிக வசதியான வீட்டுப் பெண். ஆனால் அந்த 'பந்தா' துளியும் இல்லாதவள். இவள் பார்த்த வாழ்க்கைத் துணைவனோ - இவர்களின் வீட்டு வசதிக்கு கால்தூசு பெறாதவன். அன்பை மட்டுமே கண்ட இவர் களது காதல் வழக்கம் போல் மிகக் கடுமையான எதிர்ப் பைக் கண்டது. எத்தனையோ எடுத்துச் சொல்லியும், வேறு வழி இல்லாது, கட்டின புடைவையுடன் பொட்டுத் தங்கம் கூட எடுத்துச் செல்லாது தன் துணைவனுடன் நடந்தாள். இவர்களது பதிவுத் திருமணம் எண்ணி நாலே பேருடன் நடந்தது. அதன் பின் பஞ்சாப் யுனிவர்சிட்டியில் இவளது

கணவனுக்கு வேலை கிடைக்க அங்கு போய் விட்டதாகக் கடிதம் போட்டிருந்தாள். நானும் வெளிநாடு செல்ல நேர்ந்ததால் பல வருடங்கள் பார்க்க முடியாமல் போனது. பின் ஒருமுறை என் அண்ணனுடன் பஞ்சாப் செல் லும் வாய்ப்புக் கிடைக்கவே நழுவ விடாமல் அவளைச் சந்திக்கச் சென்றேன். வீட்டைக் கண்டுபிடித்து படபடப் புடன் நான் காத்திருக்க, கதவைத் திறந்த என் தோழி என்னைக் கண்டு சந்தோஷத்துடன் ஆரத் தழுவிக் கொண் டாள். நான், பிரமை பிடித்தாற்போல் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவள் விதவைக் கோலத்தில் இருந் தாள். என் உணர்ச்சியைப் புரிந்த அவள் ஆறுதலுடன் உள்ளே அழைத்துச் சென்று விவரங்கள் கூறினாள். பின் என்னைக் கட்டாயப்படுத்தி அவளுடன் ஒரு வாரம் இருக்கச் செய்தாள். வீட்டிற்கு அன்றுதான் வெள்ளை அடித்திருந் தனர் போலும். அவளது பெண் அனு துறுதுறு என வேலை செய்து கொண்டிருந்தாள்.

அடுத்த நாள் அனு பீரோவிலிருந்த புடவைகளை



யெல்லாம் ஒழுங்காக அடுக்கிக் கொண்டிருந்தாள். அதே ரூமில்தான் நானும் எனது தோழியும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அடுக்கிக் கொண்டிருந்த அனு ''மம்மி இந்த பட்டுப் புடைவை ரொம்பப் பழசாயிடுச்சு. சாயாக்கு (வேலைக்காரப் பெண்) கொடுத்துரலாம்'' என்றபடி சாதாரணமாகத்தான் புடைவையைத் தூக்கி கட்டிலின் மேல் எறிந்தாள். அடுத்த வினாடி பாய்ந்து சென்று புடைவையைக் கீழே விடாமல் பிடித்தவள், பளீரென மகளின் கன்னத்தில் அறை விட்டாள். இருவரும் திகைத்துப் பார்க்க, என் தோழியோ எதையும் கண்டு கொள்ளாது அந்தப் பழைய மட்டமான புடைவையை கண்ணில் நீர் வழிய, நடுங்கும் விரல்களால் எடுத்து ஒரு பூவைப் போல நீவி ஒழுங்காக மடித்தாள். அவள் ஒரு வழியாக தன்னைச் சமாளித்துக் கொண்டு பிறகு காரணத்தைச் சொன்னாள் -

அவள் கணவன் மிகக் கஷ்டப்பட்டு இந்தப் புடைவையை பதிவுத் திருமணத்திற்கு முன்பே வாங்கிக் கொண்டு வந்து தந்தானாம். தரும் போது, ''மது இந்தப் புடைவை உன் வீட்டு வேலைக்காரி கூட கட்ட மாட்டா. ஆனா நீ கட்டுவேன்னு எனக்குத் தெரியும்மா''ன்னு கொடுத்திருக்கிறான். திருமணத்தன்று நான் அன்பளிப்பாகக் கொடுத்த விலை உயர்ந்த பட்டைக் கட்டாததன் மர்மம் எனக்குப் புரிந்தது. அவள் அதைக் கட்டியது அவள் கணவனுக்குச் சொல்ல முடியாத சந்தோஷம். ''மது பிடிச்சிருக்காடா''ன்னு ஆயிரத்தெட்டுத் தடவை கேட்டிருப்பானாம். அதற்குப் பின்னர் எத்தனையோ வசதிகள் வந்தாலும் ஒவ்வொரு திருமண நாளன்றும் மது இதைத்தான் கட்டுவது வழக்கமாம். இவளைக் கைப்பிடித்த போது பார்த்த அதே புடைவையில்தான் இவளைக் கைவிட்டுப் போகும் போதும் பார்த்துக் கொண்டு போயிருக்கிறான். ஏழு வருடங்கள் கழித்து திருமண நாளன்று இவள் வழக்கம் போல் காலையில் இந்தப் புடைவையை எடுத்து அயர்ன் போடும் போது அவன் ''என்ன மது வழக்கம் போல இதே புடைவைதானா''ன்னு கேட்டிருக்கிறான். அதற்கு இவள், ''இதென்ன கேள்வி? நான் சாகிற வரைக்கும் இதேதான். நீங்க அதுக்குப் பின்னால வேற எத்தனையோ காஸ்ட்லி புடைவை எடுத்துக் கொடுத்திருந்தாலும் இது மாதிரி அதெல்லாம் வராதுங்க'' என்றிருக்கிறாள். அவன் நெகிழ்ந்து போய், ''மது நீ எந்த அளவுக்கு என்னை உயிரா நேசிக்கிறேன்னு இதிலேயிருந்தே எனக்குத் தெரியும். நாம ஏழேழு ஜென்மத்துக்கும் இதே மாதிரி இருந்தா போதும்டா'' என்று சொல்லி விட்டு தான் மாலையில் வருவதாகவும் தயாராக இருக்கும்படியும் கூறி விட்டுச் சென்றான். இவளும் மகளுடன் அதே புடைவையில் அவனுக்காகக் காத்திருக்க, வந்த செய்தியோ அவன் பஞ்சாப் கலவரத்தில் நடந்த நிகழ்ச்சியில் மிதிபட்டு ஆபத்தான நிலையில் ஆஸ்பிடலில் கிடப்பதாக. அலறியடித்துக் கொண்டு ஓடினாள். அரை மணி நேரம் கழித்து அவனுக்குச் சுய நினைவு திரும்பி உள்ளதாகவும், போய்ப் பார்க்கலாம் என்றும் நர்ஸ் அனுமதிக்க உள்ளே ஓடினாள்.

இவளைக் கண்ட அவன் கண்ணில் கோடி மின்னல். அவன் கையைப் பிடித்துக் கதறியவளின் கையை வருடியவன் ஒன்றும் பேச இயலாத நிலையில் மீண்டும் நினைவிழந்தான். அதன் பின் மூன்று நாட்கள் கோமாவிலேயே கிடந்து உலகை விட்டுப் போனான்.

அதன்பின் நான் இரு வருடங்கள் மீண்டும் வெளிநாடு செல்ல வேண்டி வரவே போய் விட்டுத் திரும்பியவுடன் மீண்டும் எனது அண்ணனை நச்சரித்தேன் பஞ்சாபுக்குக் கூட்டிக் கொண்டு போகும்படி. அண்ணன் கூறிய பதில் இடியிறங்கியதைப் போல் இருந்தது. மது இறந்து விட்டாளாம். எனக்குத் தெரிவிக்காமல் அண்ணன் போய் பார்த்து விட்டு வந்தானாம். அவள் மகள் திருமணம் முடிந்த ஐந்தாவது மாதம் இவள் இறந்திருக்கிறாள். உடனே சென்றேன் அண்ணனுடன். என்னைக் கண்ட அனு கதறியபடி ஓடி வந்து கட்டிக் கொண்டாள். இவளுக்குத் திருமணம் செய்யும் வரை பொறுத்திருந்தவள் கடமை முடிந்ததும், கணவனுடன் போய்ச் சேர்ந்து கொண்டாள். இப்போது மகள் அந்தப் புடைவையை பொக்கிஷமாக வைத்துப் பூஜை பண்ணுகிறாள். அதைப் பார்க்கும் போது தன் தாயை - தந்தையை ஒருசேர பார்ப்பது போல் உள்ளதாக தொண்டையடைக்கக் கூறினாள். எனக்கும் அந்தப் புடவையைப் பார்த்ததும், புல்லரித்தது.

- உ. ராஜேஸ்வரி, தருமபுரி.

இக்கட்டுரையில் இடம்பெறும் வண்ண டிசைன்களை வரைந்து ஆறுதல் பரிசு பெறுபவர் :
ஆர். ராதா, பம்பாய் - 1.

## மூன்றாம் பரிசுக் கட்டுரை

**(ரூ. 2000/- பெறுமானமுள்ள பட்டுப் புடைவை**

பட்டுப் புடவைகள் நீண்ட நாட்கள் அதன் தரம், வண்ணம், மெருகுடன் நீடித்து உழைக்கக் கையாள வேண்டிய வழிகள் :

முதலாவதாகப் பட்டுப் புடைவை களைத் தேர்ந்தெடுத்து வாங்கும் பொழுது சில அம்சங்களை மனதில் கொண்டு வாங் கினால்தான் நன்றாகக் காப்பாற்ற முடியும்.

பட்டுப் புடைவைகளுக்கு எடை அவ சியமானது. எடையில் மிகக் குறைவான புடைவைகளை வாங்குவதில் பய னில்லை. எடையில் குறைவான புடைவை களை ஒரு முறை அணிந்தால் அவை கசங்கி விடும். அடிக்கடி இஸ்திரி செய்ய வேண் டிய நிலை ஏற்படும். அதனால் புடை வையின் பொலிவு குன்றி, மெருகும் விரை வில் போய், அழகும் குறைந்து விடும், நீடித்தும் உழைக்காது.

பச்சை, நீலம், அரக்கு, கறுப்பு போன்ற ஆழ்ந்த வண்ணம் கொண்ட புடவைகள் நீடித்து நன்றாக இருக்கும். வெளிறிய (லைட் கலர்) நிறமுடைய புடவைகள் விரைவிலேயே பொலிவு இழந்து பழைய புடைவையைப் போல் காணப்படும். எனவே எடையும் வண்ணமும் முக்கிய மாகக் கவனிக்கப்பட வேண்டும்.

மேல்வாரியாக நெய்யப்பட்ட சரிகைப் புடைவையைக் காட்டிலும் 'கோர்த்து வாங்கிய சரிகைப் புடவைகள் நீடித்து உழைக்கும். மேல்வாரியாகப் போட்ட சரிகை அடிக்கடி அறுந்து விடும். சில இடங்களில் மேலே தூக்கியும் இருக்கும்.

புடைவைகள் தயாரிக்குங்கால் போடப்படும் ஆசிட் புடவையை விரை வில் கெடுத்து விடுமாதலால் அவற்றை ஓரிருமுறை அணிந்த பின்னர் (புதியதாகத் தோன்றினாலும்) நல்ல சுத்தமான குளிர்ந்த நீரில் நன்றாக அலசி, பிழியாமல் உலர்த்த வேண்டும். பிறகு அவற்றை 'பாலீஷ் அயர்ன்' செய்து வைத்தால் புடவைகள் புதி யது போலவே எவ்வளவு வருஷங்களா னாலும் இருக்கும்.

உலர்த்தும் போதும் சில விதிகளைப் பின்பற்ற வேண்டும் -

1. கம்பியில் கொடிகட்டி உலர்த்தக் கூடாது. ஏனெனில் கம்பியில் துரு இருக்க வாய்ப்புள்ளது.

2. நைலான் கயிறு கட்டி உலர்த்துவது நன்று.

3. மரத்தால் செய்யப்பட்ட 'கிளிப்' களை உபயோகிக்காமல் பிளாஸ்டிக் 'கிளிப்'களை உபயோகிக்க வேண்டும். ஏனெனில் மரத்தால் செய்யப்பட்ட 'கிளிப்' கள் சில நேரங்களில் ஒரு மஞ்சள் நிறத்தைத் துணிகளில் ஏற்படுத்தும்.

4. வெய்யிலில் உலர்த்தக் கூடாது.

பட்டுப் புடைவைகளைத் துவைக்க சோப்பைத் தவிர்ப்பது நல்லது. வீட்டிலேயே தயாரிக்கப்பட்ட 2 ஸ்பூன் கடலை மாவை தண்ணீரில் கரைத்து அதில் புடைவைகளை 20 நிமிடங்கள் ஊறவைத்துப் பின் நன்றாகக் கசக்கி வேறு நிறைய சுத்த மான தண்ணீரில் அலசி பிழியாமல் நிழலில் உலர்த்த வேண்டும்.

பூலாங்கொட்டையை வாங்கி அதனைத் தட்டி தண்ணீரில் கரைத்தால் நுரை யாகி விடும். அந்தத் தண்ணீரில் புடைவையை சிறிது நேரம் ஊறவைத்துப் பிழிந்து எடுக்கலாம். இதனால் புடைவையின் பளபளப்பு குன்றாமல் இருக்கும்.

பட்டுப் புடவைகளை அதிகமாக இஸ் திரி செய்யாமல் இருப்பது நல்லது. ஓரிரு முறை அணிந்து கசங்கி இருந்தால் அதன் பின்னர் புடவையை நன்றாகத் தேய்த்து அழகாக மடித்து ஒரு பளுவான தலை யணையின் கீழ் வைத்திருந்தால் நன்றாக இஸ்திரி போட்டது போல் இருக்கும். தோய்த்துக் காய்ந்ததும் புடைவையை பின்

### ஆறுதல் பரிசு : (ரூ. 500/- பெறுமானமுள்ள புடைவைகள்) பெறுபவர்கள் :

1. ஆர் ராதா, பம்பாய் - 421 201
2. சரஸ்வதி கோபால கிருஷ்ணன், சென்னை - 78
3. பாமா நரசிம்மன், சென்னை - 74
4. வி. எஸ். ஆர். பார்வதி ராம ஸ்வாமி, திருநெல்வேலி - 7
5. விஜயா செல்வராஜ், வெள்ளகோவில்
6. எஸ். சுகந்திமாலா, துறையூர்
7. ஜெயந்தி நாகராஜன், விழுப்புரம்
8. பத்ருதீன் சர்தார், ஸ்ரீரங்கம்
9. கே. வனஜாஸினி, சென்னை - 4
10. திருமதி கோபாலன், சேலம் - 7
11. ஏ. திவ்யா, பம்பாய் - 89
12. என். மீரா, திருச்சி - 1
13. உமா மோகன், பாண்டி - 1
14. சாந்தா சேதுராமன், புதுதில்லி - 19
15. எஸ். ஹரிந்துமதி, சென்னை - 106

புறமாக மடித்து இஸ்திரி செய்வது நல்லது. ஜரிகையின் மேல் தூய்மையான துணியைப் போட்டு அதன் மேல் இஸ்திரி செய்ய வேண்டும். மாதமொரு முறையேனும் புடைவைகளை எடுத்து காற்றோட்டமாக சில மணி நேரங்கள் வைத்திருந்து பின் வேறு பக்கமாக மடித்து வைத்தல் நல்லது. பூச்சி உருண்டைகளோ அல்லது ஃப்ளவர் டஸ்ட்களோ வைப்பதானால் புடைவையின் மேல் படாதவாறு அலமாரியின் ஓரத்தில் வைப்பது நல்லது. வீட்டிற்கு உபயோகிக்கும் ஊதுவத்திப் பாக்கெட்டுகளை வாங்கி அலமாரியின் ஓரத்தில் வைத்தால் புடை-





வைகள் வாசனையாக இருக்கும். பின்னர் வீட்டு உபயோகத்திற்கும் எடுத்துக் கொள்ளலாம்.

வசம்பைத் தட்டி சுத்தமான துணியில் கட்டி அலமாரியில் போட்டு வைத்தால் எந்த வகை பூச்சியும் அண்டாது.

*புடவைகளில் ஏற்படும் கறைகளை நீக்கும் முறைகள்*

1. பட்டுப் புடவையில் எண்ணெய்க் கறை ஏற்பட்டால் மண்ணெண்ணெயில் கறைபட்ட இடத்தை நனைத்து அரைமணி நேரம் ஊறிய பின்னர் சோப்புப் போட்டு அலசி உலர்த்தலாம். கறை நீங்கி விடும்.



அல்லது கறைபட்ட இடத்தில் முகப் பவுடரை நன்றாகத் தேய்த்துப் பின்னர் அதன் மீது ஒரு ப்ளாட்டிங் பேப்பரை வைத்து இஸ்திரி செய்தால் கறை நீங்கி 'பளிச்'சென்றாகிவிடும்.

2. இரத்தக் கறை ஏற்பட்டால் எலுமிச்சம் பழச்சாற்றில் உப்பைக் கலந்து வெது வெதுப்பான நீரில் கலந்து புடவையில் கறைப்படிந்த பாகத்தைச் சிறிது நேரம் ஊற வைத்துக் கசக்கிப் பிழிந்தால் கறை நீங்கி விடும்.

3. 'இங்க்' கறை பட்டால் குளிர்ந்த பாலில் சிறிது நீர் ஊற்றி அதில் கறைபட்ட பாகத்தை மட்டுமே நனைத்து சுமார் 20 நிமிடங்கள் ஊறவைத்தால் புடவையில் பட்ட மை பாலில் இறங்கி பால் நீல நிறமாக மாறி விடும். பின்னர் புடவையைச் சோப்புப் போட்டு நன்றாக அலசி எடுத்தால் கறை நீங்கி விடும்.

4. சந்தனம் - குளிர்பானம் முதலியவற்றால் ஏற்பட்ட கறைகள் கூட மண்ணெண்ணெயில் ஊறவைத்து எடுத்துப் பின்னர் சோப்புப் போட்டுக் கசக்கினால் புடவைகள் கறை நீங்கி பளிச்சென்றாகி விடும்.

- ஸ்ரீமதி. லக்ஷ்மி நரஸிம்மன்,
சென்னை - 28.





# காற்றிலேறி விண்ணையு

விமானப்படையில் பெண்களையும் சேர்த்துக் கொள்ளலாம் - என்று கடந்த ஆண்டுதான் அரசு முடிவு செய்தது. இதுவரை ராணுவத்தில் மருந்துவத்துறையில் மட்டும் பெண்கள் சேவை செய்ய அனுமதிக்கப்பட்டார்கள். இப்போது, விமானப்படையில் வரவு-செலவு கணக்குப் பார்த்தல், நிலயியல் நிர்வாகம், கல்வி என்று பலதுறைகளிலும் அவர்கள் பயிற்சி தரப்படுகிறார்கள்.

வாரணாசி, டேராடூன், மைசூர் ஆகிய மூன்று ஊர்களில் விமானப்படையில் சேரப் பெண்கள் தேர்வு செய்யப்படுகின்றனர். இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இந்தத் தேர்வு நடக்கும். ஏறக்குறைய 24,000 பெண்கள் விண்ணப்பித்திருந்தனர். அவர்களில் 3000 பேர், நேர்முகத் தேர்வுக்கு வரச் சொல்லி ஆணையிடப்பட்டனர். அவர்களில் 275 பேர் தேர்ந்து எடுக்கப்பட்டனர்.

ஆண்களுக்கு இருப்பன போன்றே பெண்களுக்கும் சட்ட திட்டங்கள் உள்ளன. பட்டதாரிகளாக இருந்தால் முதல் வகுப்பில் முதுகலைப்படித்தவர்களெனில் இரண்டாம் வகுப்பில் தேர்ச்சி பெற்று இருக்க வேண்டும். 23 முதல் 25 வயது இருக்க வேண்டும். உயர் கல்வி பெற்றவர்களுக்கு வயது வரம்பில் தளர்வு செய்யப்படுகிறது. பெண்கள், திருமணமாகாதவர்களாக இருக்க வேண்டும். கணவனை இழந்த விதவைப் பெண்களை, கணவனைப் பிரிந்த விவாகரத்து புரிந்த பெண்களை விமானப்படையில் சேர்ப்பது இல்லை.

விமானப்படையில் சேர்ந்த பெண்கள் ஓராண்டு குறுகிய காலப்பயிற்சி அளிக்கப்படுகின்றனர்.



பயிற்சி முடிந்ததும் ஐந்து ஆண்டுகள் வரை பணிபுரிய அனுமதிக்கப்படுகின்றனர். சில பெண்கள், சிறப்பான முறையில் நிரந்தரமாகப் பணிபுரிய அனுமதிக்கப்படுவதும் உண்டு!

விமானப்படையில் பயற்சி பெற்ற பெண்களில் சிலர் வானில் பறக்க, போர் விமானங்களை ஓட்டக் கூடப் பயிற்சி தரப்படுகிறார்கள். இஸ்ரேல் நாட்டில் விமானப் படையில் எல்லாத்துறைகளிலும் பெண்கள் பணியாற்றி வருகின்றனர்.

# ாடும் பெண்கள்

இங்கிலாந்திலும், ஃப்ரான்சிலும் சில துறைகளை பெண்கள் 'தொடக்கூடாது' என்று ஒதுக்கி இருக்கிறார்கள்.

வரும் ஜுன் மாதத்தில் முதன் முதலாக பெண்கள் விமானப் படையின் அதிகாரிகளாகப் பொறுப்பு ஏற்க இருக்கிறார்கள்.

''விமானப் படையில் பயிற்சி மேற்கொண்ட போது, எங்களுக்கு அளவற்ற பொறுப்பு உள்ளதாக உணர்ந்தோம். நாங்கள் படையில் சிறப்பாகப் பணிபுரிந்து, விமானப்படைக்குப் பெருமை சேர்க்க வேண்டும். அது மட்டுமல்ல, இனிவர இருக்கும் பெண்களுக்கும் நாங்கள்'உற்சாகம் மிகுந்த எடுத்துக் காட்டுகளாக அமைய வேண்டும்'' என்கிறார் இளம் பெண் ஒருத்தி. சிறப்பாக விமானப்படையில் இவர் பயிற்சி பெற்று வருகிறார்!

- சண்டே மெயிலிலிருந்து

- சேலம் சக்திக்கொடி



## "குக்கருக்கு நன்றி"

தினம் தினம் வியாதிகள் பெருகி வரும் இக்காலத்தில் குழந்தைகள் அதிகம் பாதிக்கப்படுகிறார்கள். என் மகள் 6-வது வகுப்பில் படித்து வருகிறாள். அவளுக்குச் சென்ற வருடம் வரை எந்தப் பிரச்னையுமில்லை. ஆனால் இந்த வருடம் அடிக்கடி ஜலதோஷம், மார்பில் சளிகட்டு, மூக்கடைப்பு என்று இருந்தது. மூக்கடைப்பினால் மிகவும் கஷ்டப்பட்டாள்.

தினமும் இரவில் நான்கு தலையணைகள், மூக்கில் டிராப்ஸ் போடுவது எல்லாம் செய்தும் தூங்க முடியாமல் கஷ்டப்பட்டாள். டாக்டர்களிடம் காட்டினோம். ''டஸ்ட் அலர்ஜி'' என்று மாத்திரைகள் தந்தனர். ஹோமியோபதி, அலோபதி என்று எல்லாம் தந்தோம். மறுபடி மறுபடி இதே தொல்லை.

ஒரு நாள் நான் சமையல் செய்து கொண்டிருந்தேன். குக்கரில் சவுண்டு வரும்போது வெளிப்படும் ஸ்டீம் என் முகத்தில் பட்டது. எனக்கு இதமாக இருந்தது. உடனே என் பெண்ணை அழைத்து ஒவ்வொருமுறை ஸ்டீம் வெளிப்படும் போதும் அருகே நிற்கச் செய்தேன். ஸ்டீம் முகத்தில் பட்டதும் ''ரொம்ப நன்றாக இருக்கும்மா'' - என்றாள். தினமும் 2 வேளையும் ஸ்டீம் வெளிப்படும் போது குக்கர் அருகே நிற்கச் சொன்னேன். தற்போது என் மகளுக்கு ஜலதோஷம்,மூக்கடைப்பு எந்தப் பிரச்னையும் இல்லை. இதே பிரச்சனை வேறு குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் இருக்கலாம். அவர்களும் பயன் அடையப்படும் என்றே இக்கட்டுரையை எழுதி இருக்கிறேன்.

- சுபத்ரா நரசிம்ஹன்.

# வார்த்தைகள் வேண்டாம் வர்ணிக்க... கூந்தலே போதும்



ஒரு பெண்ணின் வாழ்க்கையில் எத்தனை போராட்டங்கள், எத்தனை சாதனைகள். அவை அனைத்தும் தாங்கும் சக்தி அவள் உடலுக்கும் மிக முக்கியமாக அவள் கூந்தலுக்கும் தேவை. ஆகவேதான் மிக உன்னதமான முறையில் பல நூற்றாண்டுகளாக பயன்படுத்தும் மூலிகைகள் மூலம் தயாரிக்கப்பட்ட சிறந்த கூந்தல் தைலம் டாம்ப்கால். ஆலிவ்-தேங்காய் எண்ணெய்களின் கலவையில் மருதோன்றி, மஞ்சட் கரிசாலை, செம்பரத்தை, கீழா நெல்லி, போன்ற சிறந்த மூலிகைகளின் சாறு கேசத்தின் அடி வேர்களுக்கு உறுதியூட்டும் ஊட்டச்சத்து மிகுந்தது. தினந்தோறும் டாம்ப்கால் மூலிகைக் கூந்தல் தைலம் தடவுவது, உங்கள் கேசத்திற்கு நீங்கள் தரும் சிறந்த பாதுகாப்பு.

## டாம்ப்கால்

**மூலிகைக் கூந்தல் தைலம்**



தயாரிப்போர் :
**தமிழ்நாடு மூலிகைப் பண்ணைகள் மற்றும் மூலிகை மருந்துக் கழகம்,**
(தமிழ்நாடு அரசு நிறுவனம்)
அரும்பாக்கம், சென்னை-600106.

DIPR/110/DIS/93/ad*bureau



## க்ரீன் சட்னி

கொத்துமல்லி, புதினாவுடன், வதக்கிய வெங்காயம், பூண்டு, பச்சை மிளகாய், இஞ்சி, வெல்லம், உப்பு ஆகியவற்றைத் தண்ணீர் விடாமல் நைசாக அரைக்கவும். இந்தச் சட்னி சப்பாத்தி, ப்ரெட் சாண்ட்விச், தோசை, தயிர் சாதம் ஆகியவற்றுக்குத் தொட்டுக் கொள்ள மிகவும் ருசியாக இருக்கும். சாதத்தோடு பிசைந்தும் சாப்பிடலாம். ஃப்ரிட்ஜில் வைத்தால் 10 நாட்கள் வரை கெடாமல் இருக்கும்.

- உஷா

...31 - ஆம் பக்கத் தொடர்ச்சி

உனக்காக உதவி பண்றேன். மொதல்ல சாம்பிளுக்கு ஒரு பத்து மீட்டர் துணியிலே பத்திக் போடு. இங்கே வெளியூர்லேர்ந்து துணி வியாபாரிகள் வருவாங்க. காட்டுவோம்.''

அவர் வார்த்தைகள் அவளுக்கு தெம்பைக் கொடுத்தது. தன் சொந்தச் செலவில் பத்து மீட்டர் காடாத் துணி வாங்கி வந்தாள். கஞ்சி மடமடப்புடன் இருந்த துணியை பிளீச்சிங் செய்தாள். ஸ்டார்ச் போன துணி எதற்கும் தயாராய் இளகி நின்றது.

வெள்ளை மெழுகு வாங்கி வந்தாள். பாளம் பாளமாய் இருந்ததை விண்டு வாணலியில் போட்டாள். கீழே ஸ்டவ் எரிய மெழுகு உருகிற்று. பெரிய வெங்காயத்திற்குக் கால் முளைத்தது போல் ஒரு ஒற்றை நீள பிரஷ் இருந்தது. அதை மெழுகில் நனைத்து மேலும் கீழும் இடதும் வலதுமாய் கோடு கிழித்தாள். பூசிய சில வினாடிகளில் மெழுகு வரிக் கோடுகளாய்ப் பிரிந்து நின்றது.

காய்ந்த மெழுகுத் துணியைக் கைகளால் கசக்கினாள். மெழுகு துளித் துளியாய் விண்டு விழுந்தது. அருகே பெரிய வட்டப் பாத்திரத்தில் வர்ணம் கரைத்து வைத்திருந்தாள்.

வர்ணம் கரைப்பதென்பது பத்திக் பிரிண்டிங்கில் முக்கியமான செயல். உபயோகிக்கும் சேர்மப் பொருள்களின் அளவு சரியாக இருக்க வேண்டும். சேர்க்கும் நீரின் அளவும் சரியாக இருக்க வேண்டும். அப்போதுதான் எதிர்பார்க்கும் வர்ணம் அதே நிறத்தோடு துணிகளில் ஏறி நிற்கும். பார்ப்பவர்களைக் கலங்கடிக்க வைக்கும்.

நந்தினி பக்குவமாகக் கரைத்தாள். சந்தேகம் வந்த போது பெரியவரின் உதவியை நாடினாள். மெழுகுத் துணியை வர்ண நீரில் நனைத்து நனைத்து வர்ணம் ஏற்றினாள். ஈரம் வடிய விட்டாள். குறிப்பிட்ட நேரம் கடக்கத் துணியை கடுநீரில் முக்கிப் பிழிந்தாள். கடுநீர் பட மெழுகு விலகியது. மெழுகு விலகின இடம் நிறமில்லாமலும் அதை ஒட்டிய இடங்களில் வர்ணத் தீற்றலும் சேரத் துணி கோட்டுப் பிரிவுகளாய் சிலந்தி வலைப் பின்னல் போல அது ஒருவிதமாய் ரம்மியமாய் இருந்தது.

பத்து மீட்டர் துணியில் நான்கு விதவிதமான வர்ணங்கள் ஏற்றினாள். ஒன்று கசங்கின வடிவத்தில். ஒன்று அச்சுக்கள் ஏறின வடிவத்தில் என நான்கும் நான்கு விதமாய் இருந்தது.

பெரியவரிடம் காட்ட கண்ணாடிக்குள் கண்விரிய அவளையே பெருமை பொங்கப் பார்த்தார். மறுநாள் வெளியூரிலிருந்து வந்திருந்த துணி வியாபாரியிடம் காட்டிய போது ஆச்சர்யப்பட்டார்.

''இத்தனை நாள் இது மாதிரி டிஸைன் காட்டாம எங்க சார் ஒளிச்சு வெச்சிருந்தீங்க?''

''ஒளிச்சு வைக்கலைய்யா. இத்தனை நாளும் நீ சொன்ன டிஸைன் மட்டும் போட்டுக் குடுத்தேன். இப்ப சொந்த ஐடியாவிலே என் டையிங் மாஸ்டர் இது போட்டிருக்கார்.''

''யார் சார் அது. புது ஆளா, கூப்பிடுங்க.''

பெரியவர் அழைக்க நந்தினி வந்தாள். வியாபாரி ஆச்சரியம் பொங்க அவளைப் பார்த்தார்.

''ரொம்பச் சின்ன வயசு... ஆனா ஐடியா சுத்தம். உங்களைப் பார்த்து பெருமைப்படறோம் மேடம். இந்த டிஸைன் எல்லாத் துணியிலேயும் வருமா?''

''வரும். காட்டன், ரேயான், சில்க், காதி... இப்படி எல்லாத் துணியிலேயும் போடலாம்.''

''எனக்கு இந்த ஆர்டர் ரொம்பப் புடிச்சிருக்கு. காட்டன்ல போட்டுருங்க. இந்த ஆர்டர் முழுசும் போட்டுருங்க. மெட்டீரியலுக்கு நான் ஏற்பாடு பண்ணிடறேன்.''

அடுத்த வாரத்தில் கட்டு கட்டாய்த் துணிகள் வந்து இறங்கின. ஸ்டவ் அடுப்பு

போய் பெரிய அடுப்பு வந்தது. ஒரே சமயத்தில் நாலடிக்கு வரைகிற மாதிரி பிரஷ் செய்யப்பட்டது. அதே போல் அத்தனை உபகரணங்களும் மாறின. வேலை உத்தி மாறியது. சொன்ன நேரத்திற்கு முன்பாகவே ஆர்டர்கள் செய்து முடிக்கப் பட்டன. வியாபாரி வந்து மகிழ்ச்சியோடு வாங்கிச் சென்றார்.

பணம் கை மாறியது. பெரியவர் நந்தினிக்குக் கணிசமான ஒரு தொகை தந்தார். நந்தினி பணம் வாங்கினாள். பெரியவரிடம் கொடுத்துக் காலில் விழுந்து வணங்கினாள். அவர் தழுதழுப்புடன் தொட்டுத் தூக்கிய போது கண்ணீர்த் துளி ஒன்று சூடாய் அவள் முதுகில் சொட்டியது.

''அக்கறையிருக்குதும்மா. முன்னேறணும்கிற துடிப்போட இருக்கறே. எத்தனை கஷ்டம் வந்தாலும் முன்னேறிடுவே. இது சத்தியம்.''

சில சத்தியங்கள் வெறும் வார்த்தைப் பிரதிபலிப்புகள். அடுத்தவன் மகிழ வேண்டும் என்பதற்காக சொல்லப்படும் சொற்கள். சில மட்டுமே மன ஆழத்திலிருந்து எழும். வார்த்தையும் கணிப்பும் தவறாது என்பது போல வெளிப்படும்.

பெரியவரின் இந்த வார்த்தையும் அப்படித்தான் வெளிப்பட்டது. ஆர்டர் வாங்கிப் போன மூன்றாவது வாரமே அந்தத் துணியைப் பாராட்டிக் கடிதம் வந்தது வியாபாரியிடமிருந்து. அவர் மூலமாக இன்னும் நிறைய பேர் வந்தார்கள். உடுத்துகிற துணியல்லாது வேறுவிதமாய் இந்த முறையை உபயோகிக்க வேண்டும் என்றார்கள்.

நந்தினி யோசித்தாள்.

## 6

**பு**திதாய் யுக்தி உருவானது.

திரைச் சீலைகள், அழகு மேஜை விரிப்புகள், சுவரில் சட்டம் கட்டித் தொங்கும் பத்திக் ஓவியங்கள் என அவள் யோசனை முன்னேற்றம் கண்டது.

புதிது புதிதாய் அக்கக் கோர்வைகளில் வேறு வேறு வர்ணங்களில் திரைச் சீலைகள் உருவாயின. மேஜை விரிப்புகள் மலர்ந்தன. தன் ஓவியத் திறமையை வைத்துக் கொண்டு நீளத்தாள்களில் கடவுள் படங்கள், மாடர்ன் ஓவியங்கள் வரைந்தாள். அதைத் துணிகளின் மேல் வைத்து கார்பன் தாளால் உருவம் வரைந்து கொண்டாள்.

வரைந்த உருவங்களின் மேல் மெழுகால் கோடுகள் இட்டாள். மீண்டும் பழைய செய்முறைகளில் உருவங்களுக்கு உயிர் கொடுத்தாள்.

பெரிய பெரிய ஓவியங்கள் கடைகளில் விற்பனைக்கு வந்தன. கண்காட்சியில் இடம்பெற்றன.

மனித மனம் மாற்றம் விரும்புவது. எந்த நாட்டு மனிதனென்றாலும் புது யுக்திகளை ரசிக்கிறான். மனசு பிடிக்கவே மாற்றங்களை ஏற்றுக் கொள்கிறான். மாற்றமே வளர்ச்சி. அதுவே வாழ்க்கை.

கண்காட்சி ஓவியங்கள் நல்ல விற்பனைக்குப் போயின. பணம் வந்தது. பாராட்டு குவிந்தது. பேங்கில் அடகு வைத்த தன் நகை திருப்பினாள். வீட்டுக்குச் செலவுக்குப் பணம் கொடுத்தாள். தங்கை திருமணத்தை முன்நின்று விமர்சையாக நடத்தினாள்.

இனி தனியே இயங்க முடியும் என்ற போது பெரியவரின் ஆசியோடு தனி இடம் வாங்கினாள். கூரை இறக்கினாள். ஆட்களை வேலைக்கு அமர்த்தினாள். பத்திரிகைகளுக்கு பத்திக் பிரிண்டிங் பற்றிக் கட்டுரைகள் எழுதினாள். முன்னேற்றம் பற்றி மாதர் சங்கங்களில் பேசினாள். இலவச வகுப்புகள் எடுத்தாள்.

வாழ்க்கை முன்னேறியது. பிரபலமானது.

ஒருநாள் அவளுக்கு அந்த நகரத்தின் அந்த வருடத்தின் சிறந்த பெண்மணி என்கிற பட்டம் கொடுத்து கௌரவிக்கப் போவதாய் அழைப்பு வந்தது அரசாங்கத்திடமிருந்து.

வெயில் காலம் வந்தவுடனேயே வடாம், வற்றல் போட ஆரம்பித்துவிடுவோம். மோர் மிளகாய் வற்றல் போடும் போது சிறிது (ஒரு கைப்பிடி) வெந்தயத்தை நன்கு ஊறவைத்து நன்றாக அரைத்து மோரில் கலக்கி பச்சை மிளகாயை இதில் ஊற வைத்துப் பின் காயப் போட்டால் மிளகாய் பார்ப்பதற்கு வெண்மையாகவும் பொரித்தபின் அதிருசியாகவும் இருக்கக் காண்பீர்கள்.

- லக்ஷ்மி



தர்பூசணிப் பழத்தை ஜூஸ் செய்து அதில் சிறிது எலுமிச்சை ஜூசைக் கலந்து அருந்தினால் மிகவும் ருசியாக இருக்கும்.

- உஷா

நீண்ட மறுப்புக்கிடையில் ஒப்புக் கொண்டாள். ஆயிரம் பேர் கூடி வாழ்த் துரை போல் கைதட்ட பட்டம் பெற்றுக் கொண்டு தன் இருப்பிடம் திரும்பினாள்.

காரில் வீதி திரும்பிய போது வீட்டு முன் ஒரு உருவம் நிற்பது தெரிந்தது. அருகில் செல்ல அந்த உருவத்தின் முகம் தெரிந்தது. கார் விட்டு இறங்கியவளை நோக்கி அது நடந்து வந்தது. அருகில் நின்றது. உள்ளே வரலாமா என்றது.

நந்தினி குழப்பமாய் தேவாவை ஏறிட்டாள்.

## 7

**வா**ழ்க்கை என்பது மாற்றங்களின் கூடு. இன்றைய தீர்ப்பு நாளை மாறுகிறது. மாற்றப்படுகிறது. எத்தனை இறுக்கம் கொண்டாலும் காலம் மனசைத் தளர்த்தி விடுகிறது. பலம் இழக்கச் செய்கிறது. பழையதை அசைபோட வைக்கிறது. புது நியதி பற்றி யோசிக்க வைக்கிறது.

தேவாவும் அப்படியொரு நியதியின் உந்துதலால் வந்தவன் போலத்தான் அவள் முன்பு உட்கார்ந்திருந்தான். மாலை லேசாய் மயங்கியிருந்தது.

அவன் கண்கள் அறைக்குள் சுழன்றன. பத்துக்குப் பத்து ஆபீஸ் அறையையும் அதை ஒட்டிய படுக்கை அறையையும் பார்த்து வந்தன. இடதுபுறம் திரும்பி வேலை இடம்பார்த்தது. நீள மேஜையில் மணல் பரப்பியிருந்தது. கையளவு திமிசுக் கட்டைகளில் கம்பி ஓவியங்கள் 'டை'யாக்க் காட்சியளித்தன. வாளியும், அடுப்பும் அதன் மேலே கம்பிகளில் தொங்கும் பத்திக் செய்த துணிகளும், அறையின் நேர் மேலே அவளுக்கு மட்டுமல்லாது வேலையிடம் முழுவதற்கும் காற்று வருகிற மாதிரி அமைத்திருந்த காற்றாடியும் அவன் பார்வைக்குள் வந்து போயின.

''ரொம்ப மாறிட்டே நந்தினி'' தேவா தலைதாழ்த்திப் பேசினான்.

''அப்படீன்னா...''

''என் நினைவு கொஞ்சங்கூட வருத்தாத அளவுக்கு உன்னையே நீ மாத்திகிட்டே...''

அவள் அவன் முகம் பார்த்தாள். தேவா இன்னும் தலைதாழ்ந்திருந்தான்.

''ஆனா என் நிலைமை அப்படியில்ல நந்தினி. ஏதோவொரு ஆத்திரத்தில் உன்னையை வெளியே துரத்தினதுலேர்ந்து ரொம்பவும் அடிபட்டுட்டேன். நெருங்கின நண்பன்லேர்ந்து முன்பின் பழக்கமில்லாத சொந்தக்காரங்க வரைக்கும் என்னைத் திட்டாத ஆளில்லே. கேவலப்படுத்தாத நேரமில்லே.

அப்பவும் நான் செஞ்சது சரிதான்னு கர்வத்தோடதான் இருந்தேன். உன்னைய நிரந்தரமா வெலக்கிட்டு வேற கல்யாணம் பண்ணிக்கலாம்னு கூடத் தீர்மானிச்சுட்டேன். தூரத்து சொந்தத்துல ஒரு பெண் கூடப் பாத்தேன் நந்தினி.

எல்லாம் அமைஞ்சு வர்ற நேரத்துல இந்த விஷயம் அவங்களுக்குத் தெரிஞ்சிடுச்சு. பொண்ணோட அப்பா கூட சரின்னுட்டார். ஆனா பொண்ணு எங்கிட்ட நேர்ல வந்து, உங்கள நம்பி எப்படிக் கழுத்தை நீட்றது. ஒரு கை லேசா வரலேங்கிறதுக்காகத் தாலி கட்டினவளையே அடிச்சு வெரட்டிட்டீங்களே நாளைக்கு எனக்கு ஏதாவது ஆகி, கையோ, காலோ வௌங்காமப் போனா என்னைக் கொளுத்தவும் தயங்க மாட்டீங்கன்னு எப்படி நம்பறதுன்னா. நான் ஆடிப் போயிட்டேன்.

அன்னைக்கு என்னைப் பத்தி நெறைய யோசிச்சேன் நந்தினி. வாழ்க்கையிலே ஊனம்ங்கறது பெரிய விஷயமில்லே. அதனால எந்தச் செயலும் பாதிக்கப்படப் போறதில்லே. ஒருவேளை உனக்கு நல்லா இருந்து எனக்கு ஒருநாள் கை கால் விளங்காமப் போச்சுன்னா அப்ப நீ என்னை வெறுத்தா நான் என்னாவேன்னு யோசிச்சேன். நான் செஞ்சது எத்தனை பெரிய தப்புன்னு உணர முடிஞ்சுது.

இன்னும் தாமதிக்கிறது நல்லதில்லேன்னு ஓடி வர்றேன் நந்தினி. என்னை மன்னிக்கணும். ஏத்துக்கணும்...''

அவன் நா தழுதழுத்தது. கண்களில் நீர் துளிர்த்து நின்றிருந்தது.

# "தாங்க்யூ காளி, தாங்க்யூ அம்மா!"

# காளி

## காப்பர்-பாட்டம்

### ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சமையல் பாத்திரம்.

- குறைந்த நேரம், எரிபொருள் சிக்கனம். அத்துடன் சுவை நிறைந்த சத்தான உணவு.
- உயர்தர கனமான சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் ஆனது.
- எலெக்ட்ரோ டெபாஸிஷன் முறையை கையாண்டு உலகத்தரம் வாய்ந்த விஞ்ஞான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப்பட்டது.
- சிறந்த தரமான பொருட்களுக்கான இந்திய அரசின் தேசிய விருதினைப் பெற்றது.

• ஸாஸ்பான் • கடாய் • தோசைக்கல் • டோப்ஸ்
• ஸ்கில்லெட்ஸ் • ஸ்டீம் குக்கர் (பேடீட் 200)




ஐ.எஸ்.ஐ. முத்திரையுடன் கூடிய ஒரே பிராண்ட்

**காளி – ஒரிஜினல் காப்பர்-பாட்டம்**







விற்பனை ஏஜெண்ட் : ஸ்ரீவித்யா ஏஜென்ஸிஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.
சில்லறை விற்பனை நிலையம்: ஸ்ரீ எம்.வி.எம். ஸ்டோர்ஸ் (காளி பிராண்ட்), கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.

Imageads

**அனைத்து பிரபல கடைகளிலும் கிடைக்கும்**



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

221, சத்தியமூர்த்தி சாலை, இராம்நகர்,
கோயமுத்தூர் - 641 009. ☎ 37463




50 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் | குறுகிய கால டெபாசிட் | | | பிக்சட் டெபாசிட் திட்டம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| காலம் | 1 நாள் முதல் 3 மாதங்கள் | 3 மாதங்கள் முதல் 6 மாதங்கள் | 6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18.5% | 19% | 19.5% | 20% |
| வாடிக்கையாளர் வசதிக்கேற்ப 1 மாதம், 3 மாதம் மற்றும் 6 மாத கால இடைவெளிகளிலும் வட்டி விகிதம் வழங்கப்படும். | | வழங்கும் வட்டி விகிதங்கள் | ஆண்டுக்கு ஒருமுறை | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | 6 மாதத்திற்கு ஒருமுறை | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | 3 மாதம் அல்லது மாதத்திற்கு ஒருமுறை | 16.5% | 17% | 17.5% | 18% |

### குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

### சுபிட்சம் வைப்புத் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும்போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

**ரூ. 10,000/- = ரூ. 21,000/-** (45 மாதங்களில்)

இத்திட்டத்தில் ரூ.10,000/- செலுத்தி 45 மாதங்களில் ரூ.21,000/- பெறுவீர்!
உங்களுக்கு கிடைப்பதோ இரட்டிப்பு ஆதாயத்துடன் ஓர் ஆயிரம்!
இத்திட்டத்தில் ரூ.10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1320 | 2880 | 4720 | 6480 | 10040 |
| 250 | 3300 | 7200 | 11800 | 16200 | 25100 |
| 500 | 6600 | 14400 | 23600 | 32400 | 50200 |

ரூ.5 செலுத்தி உறுப்பினராகி பயன் பெறுவீர்! செழுமை தரும் சேமிப்புத் திட்டங்கள்!
ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் ஐசிஎஸ்!

''நீங்க மனசு மாறினதுக்காக நான் சந்தோஷப்படறேன். ஆனா என் மனசு இன்னும் மாறலே...''

''நந்தினி...''

''ஆமா. இன்னும் என் பார்வையிலே நீங்க அதே பழைய மனுஷனாத்தான் தெரியறீங்க. முதலிரவுங்கறது ஒரு பெண்ணுக்கு தான் சாகற வரைக்கும் இருக்கப் போற சுகமான நினைவுன்னு கேள்விப்பட்டிருக்கேன். என் வாழ்க்கையிலே அது சந்தோஷமா அமையலே. துக்கத்தோட எல்லையா முடிஞ்சிடுச்சு. நான் செத்தாலும் போகாத நினைவு இது.

இப்ப உங்களைப் பார்த்தாலும் நான் தவிக்கத் தவிக்க கதவு தட்டி கூட்டம் கூட்டின ஆளாத்தான் தோணுது. பெட்டியத் தூக்கிட்டு வெளியே போடீன்னு தொரத்தின கொடூரம்தான் தெரியுது. உங்கள மாதிரி என்னால சட்டுன்னு எல்லாம் மறக்க முடியலே தேவா. போனாப் போகுதுன்னு மன்னிக்க முடியலை தேவா.''

''அப்ப என்னை மன்னிக்கவே மாட்டியா...? ஒன்னா எங்கூட சேரவே மாட்டியா?''

''எதிர்காலம் எப்படீன்னு யார் சொல்ல முடியும். காலம் மாத்தினா நான் மாறலாம். உங்க கூட ஒன்னா சேரலாம். ஆனா அது எப்போன்னு என்னால சொல்ல முடியாது. ஆனா ஒன்னு மட்டும் நிச்சயம். மனசளவுல அன்னைக்கும் இன்னைக்கும் இந்தத் தாலிக்கு நான் மதிப்பு கொடுக்கறேன். அதுக்கு ஒரு நல்ல அர்த்தம் இருக்குதுன்னும் நெனைக்கறேன்.''

அவன் நந்தினியையே வெகுநேரம் அசையாது பார்த்துக் கொண்டிருந்தான். பின் எழுந்து வெளியேறினான். அவனின் தளர்ந்த நடையையே நந்தினி பார்த்தபடி நின்று கொண்டிருந்தாள். ஒரு பெண் தன் மகளை அழைத்து வந்து வாசலில் நின்றது.

''இது என் பொண்ணு நந்தினி. படிப்பு வரலே, வேலைக்காவது போகட்டும்னு கூட்டிட்டு வந்தேன். இங்கே ஒரு வேலை போட்டுத் தரணும்.''

''வேலைக்குப் பஞ்சமில்லே. அக்கறை வேணும். அதென்ன தலையைப் போத்தி நிக்குது துண்டால.''

''அது... ஒரு காது சின்னது. யாராவது பார்த்தா கேலி செய்வாங்களேன்னு தான்...''

பெண் சங்கடமாய் சொல்ல, நந்தினி, 'மொதல்ல துண்டை எடுத்திடு' என்றாள்.

# குழந்தை கடித்தால் விஷமா?

டாக்டர் பி. பி. ராஜன்

**சா**தாரணமாக தாடையில் முன் பற்கள் கொஞ்சம் முன்புறம் தள்ளி அமைந்திருந்தால், குழந்தைகள் கீழே விழும்போதோ அல்லது குழந்தைகளை யாராவது அடிக்கும்போதோ பற்கள் பாதிக்கப்படுகின்றன. பற்களின் முன்பாக உதடுகள் பாதுகாப்பாக அமைந்து இருக்கின்றன. குழந்தைகள் விழும் போது உதட்டில் அடிபட்டால் கொஞ்ச காலத்தில் முன்பிருந்த நிலைக்கு மாறி விடும். உதடு அடிபடாமல் நேராகப் பற்கள் மீது அடிபட்டால், பற்கள் உடைந்து விடுவது மட்டுமல்லாமல், பற்களின் நிறம் மாறி, முகத்தின் அழகையும் கெடுத்து விடும். தவிரவும், முன்பே கூறியது போல், அடிபட்ட பற்களின் வேர்களில், நோய்க் கிருமிகள் உண்டாகி உடல்நலத்தைப் பாதிப்பதால், உடனடி சிகிச்சை தேவைப் படுகிறது.

நாம் அன்றாடம் பார்க்கும் நபர்களில் யாராவது ஒருவருக்கு முன்பக்கத்திலுள்ள ஒன்று அல்லது இரண்டு பற்கள் கருப்பு நிறத்தில் தென்பட்டால், அவர்கள் கண்டிப்பாகச் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும் என்று கூறி விடலாம். பற்களை எடுக்காமலேயே நிறம் மாறிய பற்களுக்குச் சிகிச்சை செய்து கொள்ளலாம். பற்களின் மேல்பாகத்தில் எனாமல் என்ற கடினமான பாகமும் மத்திய பாகத்தில் பற்கூழ் என்ற மிருதுவான பாகமும் இருக்கிறது. இந்த மிருதுவான பாகத்தில் ரத்தம் கட்டியாகி உறைந்துவிடும். ரத்த அணுக்கள் பற்களின் மற்ற பாகத்தின் மூலமாக ஊடுருவி பற்களின்




நிறத்தை மாற்றி விடுகின்றன. உறைந்த ரத்தத்தின் மீது கிருமிகள் வளர ஆரம்பிக்கும். பற்களின் உட்பக்கத்தில் ரத்த ஓட்டம் இல்லாததால், கிருமிகளைக் கொல்லுவதற்கு நாம் எந்த மருந்தை சாப்பிட்டாலும், அம் மருந்துகள் பற்களின் உட்பக்கத்திற்குப் போய்ச் சேர முடியாது.

பற்களின் உள்பக்கமாக வெளியே தெரியாமல் ஒரு துவாரம் போட்டுப் பாழடைந்த பற்கூழை எடுத்து விட்டு அந்தப் பக்கத்தை அடைத்து விடுவார்கள் பல் டாக்டர்கள். இப்படிச் செய்வதால் நிறம் மாறிய பற்கள் நோய்வாய்ப்பட்டுக் கெட்டுப்

போகாமல் மற்ற பற்களைப் போலவே இருக்கும். அருகிலுள்ள மற்ற பற்களை ஒப்பிட்டுப் பார்த்து அதே போன்ற நிறத்தினை நிறம் மாறிய பற்களுக்கும் சரியாகக் கொடுப்பது தேவையாகிறது. இதைச் செய்வது பல் டாக்டர்களின் திறமை யான செயல்முறையில் இருக்கிறது. பற்களின் மேல் பாகத்திலுள்ள எனாமல் என்ற பகுதியைத் தேய்த்து எடுத்து விட்டு, பீங்கான் அல்லது பிளாஸ்டிக் போன்ற பொருளால் ஒரு உறை செய்து அதில் ஒட்டி விடுவார்கள். பிளாஸ்டிக்கினால் செய்யப்படும் உறை சிறிது காலத்திற்குப் பிறகு நிறம் மாறலாம் அல்லது தேய்ந்து விடலாம்; ஆனால் பீங்கான் போன்ற பொருள்களால் செய்யப்படும் உறை நிறம் மாறாதது மட்டுமில்லாமல் பார்ப்பதற்கு மிகவும் நன்றாகவும் இருக்கும். செயற்கைப் பல் என்றோ பல்லின் மேல் பாகத்திலுள்ள உறை என்றோ யாரும் எளிதில் கண்டுகொள்ள இயலாது.

சில சமயங்களில் நாம் சிரிக்கும் போது ஆறு அல்லது எட்டு மேல் தாடைப் பற்களும் அதைப் போன்ற கீழ்த் தாடைப் பற்களும் வெளியே தெரியும். வெளியே தெரியும் எல்லாப் பற்களுக்கும் உறைகள் போட்டு விடலாம். மருந்துகள் சாப்பிடுவதாலோ அல்லது ப்ளோரைட் உப்பு கலந்த நீரை அருந்துவதாலோ எல்லாப் பற்களும் நிறம் மாறியிருந்தால், வெளியில் தெரியும் அத்தனை பற்களுக்கும் உறை போட்டுவிடலாம்.

நிறம் மாறிய பற்களுக்கு மேல் சிறு கட்டி இருந்தாலும் பற்களை எடுக்க வேண்டிய அவசியமில்லை. சிறு ஆப்பரேஷன் மூலமாக பற்களின் வேரில் ஒரு பகுதியையும் அதைச் சுற்றியுள்ள கட்டியையும் அழித்து விடலாம். சுமார் மூன்றில் ஒரு பகுதி வேரை ஆபரேஷன் மூலமாக எடுத்து விட்டால் கூட, அந்தப் பகுதியில் மறுபடியும் எலும்பு வளர்ந்து, அவை சாதாரண பற்கள் போல் ஆகி விடும்.

குழந்தைகள் விளையாடும் போது பற்கள் மேலே தூக்கி இருக்கும் குழந்தைகளால் மற்றக் குழந்தைகளுக்குக் காயம் ஏற்பட்டு விடலாம். பற்கள் பதிந்து காயம் பட்டு விட்டால் அது கொடிய விஷம் என்று சிலர் சொல்லுவார்கள். அதைக் கேட்டு நாம் பயப்பட வேண்டிய அவசியமில்லை. சாதாரணமாகக் காயத்திற்கு என்ன சிகிச்சை செய்கிறோமோ அதே போன்றுதான் இதற்கும் சிகிச்சை செய்ய வேண்டும். இருப்பினும் வாயினுள் நிறையக் கிருமிகள் இருப்பதால், பற்களால் கடிபட்ட பாகத்தில் கிருமிகள் இருந்து அதனால் புண் உண்டாகலாம். அதனால் அந்த இடத்தை நன்றாகச் சுத்தம் செய்து விடுவது நல்லது.




தொகுப்பு : பத்மநாபன்

# இலவசம்!






வாங்கும் ஒவ்வொரு ஸ்ரீபெட் பாட்டிலுடனும் 1 டொமேட்டோ கெட்ச்சப் ஸாசே இலவசம். ஒவ்வொரு ஜாருடனும் 2 டொமேட்டோ கெட்ச்சப் ஸாசே.

**உங்கள் கவனத்திற்கு**

★ உங்கள் ஸ்ரீபெட் பில்களை பத்திரமாக வைத்திருங்கள். ஒரு உன்னதமான வாய்ப்பு காத்திருக்கிறது. விரைவில் மேலும் விவரங்கள்.




## ஸ்ரீபெட்

**ஜார்கள் ◆ பாட்டில்கள்**

உடையாதவை

உணவுத்தரம் காப்பவை ◆ சுகாதாரமானவை

ஸ்ரீராம் நிறுவனத்தின் தரமான தயாரிப்பு!

விநியோகஸ்தர்கள்:

**ஸ்ரீராம் சேல்ஸ் இன்டர்நேஷனல்**

இச்சலுகை 31 ஆகஸ்டு 1993 வரை மட்டுமே.

✱ இந்த வாய்ப்பு சென்னை, வேலூர், திருச்சி, கரூர், தஞ்சை, சேலம், ஈரோடு, கோவை, திருப்பூர், மதுரை, நெல்லை, மயிலாடுதுறை, கடலூர், தூத்துக்குடி, நாகர்கோயில், பாண்டிச்சேரி ஆகிய நகரங்களில் மட்டுமே. இச்சலுகை இல்லாமலும் ஸ்ரீபெட் கிடைக்கும்.

ஏப்ரல் 93

## மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

வீட்டு மனை ஒன்றை வாங்கும் வாய்ப்பு உண்டு. உங்களை பாதித்த விவகாரங்களில் உங்கள் பக்கம் வெற்றி ஏற்படும். அது கோர்ட் சம்பந்த மாகவும் இருக்கலாம். அல்லது அரசுப் பணியில் ஏற்படும் இலாகாப்பூர்வமான நடவடிக்கையாக வும் அமையலாம். கைப்பொருள் இழப்புக்கு வாய்ப்பு உண்டு. சுக்கிரனால் குடும்பத்தில் சுகம் உண்டு. ஆனால் சூரியன் இடமாற்றத்தைக் கொடுத் துச் செல்வாக்கைக் குறைக்கலாம். உடல்நிலை கூட சற்று பாதிக்கப்படலாம். குறிப்பாகப் பாம்புக் கிரகங்கள் அனுகூலமான நிலையில் இல்லை. நடி கர்களுக்கும் படத்துறையினர்க்கும் மாதத்தின் பிற் பகுதியில் புதிய ஒப்பந்தங்கள் ஏற்படலாம். தரகு ஷேர் மார்க்கெட் போன்றவைகளுக்கு மாதத்தின் முதற்பகுதி ஏற்றது. 9, 10, 11 தேதிகள் சுபநிகழ்ச்சி களுக்கு ஏற்றவை அல்ல.

## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

தக்ஷிணாமூர்த்தியைச் சேவியுங்கள். தடங்கல் ஏதுமின்றி எடுத்த காரியம் வெற்றியுடன் முடியும். பொருள் வரவு உண்டு. ஒரு நீண்ட தூரப் பிரயாண மும் ஏற்படலாம். மாதம் முழுவதுமே ஆதவனின் அருளுண்டு. அதனால் தொழிலில் இலாபமும், ஒருசிலருக்கு அவர்கள் அரசுத் துறையினரானாலும் சரி, அல்லது தனியார் துறையானாலும் சரி, நல்ல முறையில் ஸ்தானமாறுதல் ஏற்படும். இருக்கும் வீட்டைக் கூட மாற்ற வேண்டி வரும். ஆனால் அது நன்மையே தரும். இராசிநாதன் வக்ரகதியில் உச்சம் பெறுவதால் எதிர்பார்த்த தனலாபம் உண்டு. நடிக நடிகைகளுக்குப் புகழும் புது ஒப்பந்தமும் ஏற் பட்டு நன்மையில் முடியும். நாக்கையும், வயிற் றையும் பாதிக்கும் நிலை தெரிவதால் மேற்படி இரண்டையும், கட்டுக்குள் வைப்பது நல்லது. வயிறு வைத்தியனிடம் அனுப்பும். 12, 13, 14 தேதி கள் சுபநிகழ்ச்சிகளுக்கும் புது முயற்சிக்கும் ஏற்றவை அல்ல.

## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங்கள், திருவா திரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் சூரியனால் கலைஞர் களுக்குத் தனலாபமும், கீர்த்தியும் கிடைக்கும். இராகுபகவான் வியாதியை நீக்குவதுடன் வில் லங்க விவகாரங்களிலும் வெற்றி ஏற்படுத்துவார். மாதத்தின் பிற்பகுதியில் புதனால் பதவி உயர்வு, தனலாபம் எனப் பல வழிகளில் மனதிற்கு மகிழ்ச்சி

ஏற்பட்டாலும் அஷ்டமத்துச் சனி சற்று உடல்நலத்தைப் பாதிப்பார். ஆயினும் அஷ்டம ஸ்தானத்தைக் குரு பார்ப்பதால் கவலைப்பட வேண்டியதில்லை. கேது வால் மாதா வழி உறவினர்களுக்கு உடல் நலக் குறைவு ஏற்படலாம். அத்துடன் வயிறோ, தோலோ கூட பாதிக்கப்படலாம். அரசியல்வாதிகளானால் தற்காலிகமாகச் சிரமங்கள் ஏற்படலாம். பொருளாதாரத் தில் ஒரே சீரான நிலைமை இருக்கும் எனக் கூற முடியவில்லை. 14, 15, 16 தேதி களில் சுபநிகழ்ச்சிகளை ஒதுக்கவும்.

## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம்; ஆயில்யம்.

ஞானிகளைச் சந்திப்பது, உபதேசம் பெறுவது போன்ற நிகழ்ச்சிகளுக்கு இட முண்டு. சுப நிகழ்ச்சி ஒன்றுக்கு ஏற்பாடா கும். அதற்குரிய முயற்சியில் வெற்றி உண்டு. மற்றபடி சற்று மந்தமான சூழ் நிலைதான் தெரிகிறது. மாதத்தின் பிற்பகுதி யில் புதன் இசைக் கலைஞர்கள், நாடகத் துறையினர், படத்துறையினர், மற்றும் காகிதத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர் களுக்கு நற்பலனைத் தருவார். குடும்பத் தில் தாம்பத்திய உறவு சீராக இருப்பி னும், உடல்நிலையும் மனநிலையும் சற்று பாதிக்குமளவிற்கு சூழ்நிலையை மற்ற கிரகங்கள் ஏற்படுத்தலாம். அலுவலகத்தில் பணிபுரியும் பெண்களானாலும் சரி, அல் லது குடும்ப நிர்வாகத்தில் ஈடுபட்டவர் களானாலும் சரி, சற்றுக் கவனமுடனும், பக்தி சிரத்தையுடனும் கழிக்க வேண்டிய மாதம். 16,17,18 தேதிகளில் புதுமுயற்சி எதுவும் செய்ய வேண்டாம்.

## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

இராசிநாதனாகிய சூரியனின் சஞ்சாரம் மாதம் பூராவும் ஏற்றதாக இல்லை. எனவே எதற்காகவும் அதிகம் அலையாமலிருப்பது நல்லது. கண்களைப் பாதிக்கக்கூடும். மற்ற படி அங்காரகன் சுகத்திற்கும், சுபிட்சத்திற் கும் உதவுவார். கடன் அடைபடக் கூடிய நிலை. குருவும், அஷ்டமத்துச் சுக்கிரனும் குடும்பத்தில் மகிழ்ச்சியானதொரு நிலை யை உருவாக்குவார்கள். உங்கள் குழந் தைகள் கல்வியில் நன்கு கவனம் செலுத்தி வெற்றி வாகை சூடுவார்கள். ஆறாம் இடத் துச் சனியும் உடல் ஆரோக்கியத்தைச் சீராக வைப்பார். அலுவலகத்தில் ஏற்படும் எதிர்ப்புகள், எதிரிகளின் தொல்லைகள் உங்களை ஒன்றும் செய்யாது. உற்ற சமயத் தில் உங்கள் உறவில் ஒருவர் உங்கள் பதவி உயர்வுக்கு உதவுவார். அரசியல்வாதி களுக்கு நல்ல நேரம். 18, 19, 20 சுபகாரி யத்திற்கு ஏற்றவை அல்ல.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

ஏழில் சுக்கிரன் இருந்தாலும், உச்சமாக இருப்பதாலும் குருவின் பார்வையைப் பெறுவதாலும் குடும்பத்தில் சில்லறைச் சச்சரவுகள் குறைந்து அமைதி நிலவும். புத்திரகாரகனாகிய குரு தன் வீட்டையே பார்ப்பதால் குழந்தைகள் நலன், கல்வியில் எடுத்துக் கொள்ளும் முயற்சி, தேர்வுகளில் அவர்களது நிலை இவை அனைத்தும் திருப்தி அளிக்கும் வகையில் அமையும். புதனும் மாதத்தின் முற்பகுதியில் வீட்டில் தானியாதி வகைகள் சேர உதவுவார். இசைக் கலைஞர்களும் சொற்பொழிவாளர் களும் சிறப்பினைப் பெறுவர். ஆயினும் சூரியனால் உடல்நலக் குறைவு ஏற்பட வாய்ப்பு இருப்பினும், உச்ச சுக்கிரனது பார்வை ராசிக்கு இருப்பதால் விபரீதமாக ஒன்றும் ஏற்பட்டு விடாது. வெளிநாட்டுப் பிரயாணம் ஒன்று ஏற்படும். 21, 22, 23 ஆகிய நாட்கள் நன்மையைத் தராது.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் பிற்பகுதியில் புதனால் நன்மை உண்டு. நடைபெற இருந்த சுப

டீத் பிரஷ்ஷை வாரம்
ஒருமுறை வெந்நீரில் ஊறப் போட்டு
வைத்துப் பிறகு அலம்பி உபயோகிக்க
வேண்டும்.
ஆரோக்கியத்திற்கு உகந்தது.
- விஜயகீதா



## "சொட்டு நீலத்துடன்" வழங்கப்படும் இலவசப் பரிசுகள் என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன் தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு "துளிகளே" போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

உபயோகிப்பவர்களுக்கு.

உஜாலாவின் ஒவ்வொரு துளியும் துணிகளில் நிரந்தரமான வெண்மையை உண்டாக்கி மனதில் நிறைந்த திருப்தியை தருகிறது. நீரில் எளிதாக கரைந்து துணிகளின் இழைகளில் உடனடியாக உறிஞ்சப்பட்டு இன்டென்ட் ஆக்ஷன் மூலம் ஒரே சீராக பரவும் தன்மையை உடையது. உடைகளின் அழுக்கை நீக்கி துணிகளுக்கு பளபளப்பான வெண்மையை தருகின்றது. ORAL TOXICITY TEST சோதனை மற்றும் SKIN IRITATION TEST சோதனையில் சருமத்திற்கு எந்த கெடுதலையும் உண்டாக்காது என்று சான்றிதழ் பெற்றது உஜாலா. இது ஜோதி லேபரட்டரியின் ஒரு சிறந்த தயாரிப்பு ஆகும்.






**JYOTHY LABORATORIES**

Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.
Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா

நிகழ்ச்சி தள்ளிப் போட வேண்டி இருக்கும். அது திருமணமாகவும் இருக்கலாம். அல்லது வேறு வகை கலை நிகழ்ச்சியாகவும் அமையலாம். கடிதம் ஒன்று வந்து மனக் குழப்பத்தையோ வருத்தத்தையோ உண்டாக்கலாம். வெளிநாட்டிற்குப் போகும் வாய்ப்பு கிடைக்கலாம். ஆனால் அதனால் எதிர்பார்க்கும் நன்மை கிடைக்குமா என்பது சந்தேகமே? தசாபுக்தி சிறப்பாக உள்ளவர்கள் இதைப் பற்றிய கவலையின்றி போய் வரலாம். தாயின் உடல் நிலை பற்றிய கவலை ஏற்பட வாய்ப்பு உள்ளது. குறிப்பாக 9, 10, 11 தேதிகளில் அந்த நிலை ஏற்படலாம். மற்றபடி குடும்பத்தில் சற்று மன அமைதி குறையவும் ஆரோக்கியம் பாதிக்கப்படவும் வாய்ப்பு உள்ளதால் புற்றுக்குப் பால் வார்ப்பது நல்லது. திருநாகேஸ்வரம் காளஹஸ்தி போன்ற ஸர்ப்ப ஸ்தலங்களில் அர்ச்சனை செய்வதும் நல்லதே. புது முயற்சிக்கு 24, 25, 26 ஆகிய தேதிகள் உகந்தவை அல்ல.

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

விவசாயம், கறுப்பு தானியங்கள், கறுப்புக் கல், இரும்பு ஆகியவை சம்பந்தப்பட்ட தொழிலில் இலாபம் ஏற்படும். அரசுத் துறையிலோ, அல்லது தனியார் நிறுவனங்களிலோ பணிபுரிபவர்களுக்குப் பதவி உயர்வு, அல்லது எதிர்பார்த்த மாற்றம் கிடைக்கும். இதுவரை முயன்றும் பலனளிக்காத அரசுத் துறை உதவி இந்த மாதத்தில் சனி, குரு இவர்களது அருளால் கிடைக்கும் என்பதால் மேற்படி இனத்தவர்கள் இந்த மாதம் மேலும் முயற்சியைத் தொடர்வது நலம் தரும். கடன் சுமை குறையும். இதுவரை நோயினால் அவதிப்பட்டவர்களுக்குச் சற்று குணமாகலாம். மாதத்தின் முற்பகுதியில் புதனால் தன லாபம் உண்டு. ஞானி ஒருவரைச் சந்தித்து ஆசியைப் பெறுவதன் மூலம் மன அமைதியும், மகிழ்ச்சியும் ஏற்படுவதுடன் எதிர்பார்த்த இனங்களில் நன்மையும் ஏற்படும். 26, 27, 28 தேதிகளில் புது முயற்சிகளைத் தவிர்க்கவும்.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

கேது காரியங்கள் தடங்கல் இன்றி நடைபெற உதவுவார். ஆபரணங்கள் வாங்கும் யோகம் உண்டு. அல்லது நகைகளை மீட்பீர்கள். அலுவலகத்தில் தொல்லை கொடுத்து வந்தவர்களிடமிருந்து விடுதலை உண்டு. அது அவர்கள் இடம் மாற்றப்பட்டதாலோ, அல்லது உங்களுக்கு வேறு நல்ல இடத்திற்கு மாறுதல் ஏற்படுவதாலோ ஏற்படுகின்ற நிகழ்ச்சியாகக் கூட அமையும். சுக்கிரனால் செல்வாக்கு உண்டு; சமூக சேவகிகள் பாராட்டப்படுவார்கள். வீட்டிற்கு விருந்தினர் வருவதன் மூலம் மகிழ்ச்சியும் உண்டு. அதனால் செலவும் ஏற்பட்டு, அதை நன்முறையில் சமாளிப்பீர்கள். மாதத்தின் பிற்பகுதியில் படத் துறையினர்க்கும், வியபாரிகளுக்கும் தன லாபம் கூடும். நெருப்பு, ஆயுதம் இவைகளைக் கையாளும் போது சற்று கவனம் தேவை. 1, 2, 29, 30 தேதிகளில் பிரயாணமோ, புதுமுயற்சியோ செய்யாதிருப்பது நல்லது.



எங்கள் வீட்டுக் குழந்தைக்கு (7 மாதம்) தினமும் காய்கறிகளைச் சிறிது எடுத்து வேக வைத்து மசித்து வடிகட்டிய நீரை ஜூஸாகக் கொடுப்பது வழக்கம். அப்படி வடிகட்டிய காய்கறி (சக்கை) களை வெளியே போடாமல் அதில் ஒரு கரண்டி தயிர், பச்சை மிளகாய், உப்பு சேர்த்துப் பச்சடி செய்து சாப்பிட்டுப் பார்த்ததில் பச்சடி படுஜோர். காயும் வீணாகாது.

- ஆர். ஜானகி

உருளைக் கிழங்கு கறி செய்யும் போது காந்திவிடாமல் இருக்க ஒரு சிட்டிகை சர்க்கரையை, பாதி வேக்காட்டில் தூவுங்கள். கறி காந்தாது. கிழங்குகளை சிப்ஸ் செய்யும் போது அவற்றைச் சீவிய உடனே லேசாகச் சர்க்கரையைத் தூவி எண்ணெயில் போட்டுப் பொறித்தால் காந்தாது

- விஜயகீதா



## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

இராகுவால் உங்கள் முயற்சி ஒன்றில் வெற்றி உண்டு. அது பதவி விஷயமாகவும் இருக்கலாம். பண விஷயமாகவும் கூட இருக்கும். புதிய பதவி ஒன்று உங்களை நாடி வரும். பதவி உயர்வின் காரணமாகவோ, அல்லது பழைய பதவியிலிருந்த சிக்கல் காரணமாகவோ அந்தகைய மாறுதல் அமையும். அதனால் மதிப்பும், மரியாதையும் கிடைக்கும். மாதத்தின் முற்பகுதியில் பலவீனமாகச் சஞ்சரிக்கும் புதன் பிற்பகுதியில் சூரியனுடன் பலமாகச் சஞ்சரித்து குடும்ப சுகத்திற்கு உத்திரவாதம் தருகிறார். கேதுவால் உடல்நிலை பாதிக்கப்படலாம். ஆனால் இராசிக்குள்ள குருவின் பார்வை கோடி தோஷத்தைப் போக்கும். இந்த ராசியில் பிறந்துள்ள நடிக நடிகையர் இசைக் கலைஞர்கள் விஞ்ஞானிகள் நல்ல தொரு செல்வாக்கினைப் பெறுவர். 3, 4, 5 தேதிகள் சுபநிகழ்ச்சிகளுக்கு ஏற்றவை அல்ல.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 -ஆம் பாதங்கள்.

ஏழரை சனியால் பாதிப்புக்கு ஆளாகி இருந்தவர்களுக்குக் குருவும் சேர்ந்து சற்று தொல்லைகளைத் தரும் காலகட்டம்தான். எனவே ஆலங்குடி, திருநள்ளாறு, திருக்கடையூர் யாத்திரை போய் வருவது நல்லது. முடியாதவர்கள் அவரவர்கள் உள்ள இடங்களில் இருக்கும் சனியையும் குருவையும், தக்ஷிணாமூர்த்தியையும் வழி படுங்கள். கோளாறு பதிகம் படிப்பதும் நல்லதே. ஒரு குடும்பத்தில் பெற்றோர்களுக்கும், குழந்தைகளுக்கும் சதய நட்சத்திரமே அமைந்திருந்தால் அவர்கள் கண பதி, நவக்கிரக ஹோமம் செய்து, சனீஸ்வரனுக்கு இல தானமும், குருவுக்காக கண்டல் கடலை தானமும் செய்வது நல்லது. மற்றபடி உச்ச சுக்கிரன் உங்கள் குடும்ப சுகத்தில் குறை இல்லாமல் பார்த்துக் கொள்ளுவார். மற்றபடி 5, 6, 7 ஆகிய தேதிகளை சுப காரியங்களுக்குத் தேர்ந்தெடுக்க வேண்டாம்.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

இருக்கணிதப்படி ஏழரை சனி ஆரம்ப கட்டம், குருவின் பார்வை இருப்பதால் கவலை வேண்டாம். உச்ச சுக்கிரன் உகந்தனைத் தர இருக்கிறார். இரும்புத் தொழில் மேன்மை உண்டு. கலைஞர்களுக்கு நல்ல கால கட்டம். படத்துறையினர், கனிமத் துறையினர் மற்றும் விஞ்ஞானிகள் ஆகியோருக்கு முன்னேற்றம் உண்டு. அலுவலகப் பணியாளருக்கானத் தேர்வில் கலந்து கொள்பவர்களுக்கு வெற்றி உண்டு. குறிப்பாக எம்.பி.ஏ., சி.ஏ., போன்ற கடினமானத் தேர்வுகளில் வெற்றி கிடைக்கும். புத்திரர்களால் மனமகிழ்ச்சி ஏற்படும். பொருளாதாரத்தில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கும் என்றாலும் அது பெரிதாக பாதிக்காது. 7, 8, 9 தேதிகளில் புது முயற்சி வேண்டாம்.

- ஜெயலட்சுமி கிருஷ்ணன்



✱ போஸ்டர் போட்டி நடுவர்கள்...

(.....16 ஆம் பக்கத் தொடர்ச்சி)

ப்ரெஸிடென்ஸி பள்ளியைச் சார்ந்த குழந்தைகளின் வண்ணமயமான நடனம் அனைவரையும் மகிழ்வித்தது. அடுத்ததாக வெல்டர் கந்தராம்பாள் பேசினார். இவரை 'வெல்டன் கந்தராம்பாள்!' என்று பாராட்டலாம். ஏனெனில் கடினமான வெல்டிங் தொழிலில் ஈடுபட்டு வெற்றிகரமாக ஒரு தொழில் பட்டறையையே வைத்து பெரம்பூர் தொழிற்சாலைகளுக்கு எல்லாம் சப்ளை செய்யும் பெண்மணி இவர். இப்போது இவருடைய பெண்களும் இத் தொழிலில் உள்ளனர். இந்தியாவிலேயே வெல்டராக உள்ள ஒரே பெண்மணி (இப்போது இவருடைய மகள்கள்) என்று சொல்லலாம். தன்னுடைய வெற்றிகரமான தொழிலுக்குப் பின்னே எத்தனை போராட்டங்கள் இருந்தன என அழகாகப் பேசினார் அவர்.



பிறகு இந்து சீனியர் ஹையர் செகண்டரி பள்ளியைச் சேர்ந்த குழந்தைகள் சாரணியர் இயக்கம் எத்தனை சிறந்த இயக்கம், பெண்களால் சாதிக்க முடியாதது இல்லை என நிரூபிக்கும் வகையில் நாடகமொன்றை நடித்துக் காட்டினர். இவர்கள் நடித்துக் காட்டியது மட்டுமல்ல அன்று முழுக்க 'வாலண்டியர்களாக' இருந்து சேவை செய்தார்கள். அதே போல 'கூடாரங்களை' எப்படி அமைப்பது என ஐந்து நிமிடத்தில் போட்டுக் காண்பித்தார்கள். சிட்டுக் குருவிகளைப் போலப் பறந்தோடி சேவைகளைச் செய்த இந்தக் குழந்தைகளைப் பார்த்த போது 'பெண் குழந்தைகள் நாட்டின் கண்கள்' எனச் சொல்ல வேண்டும் போல இருந்தது.

பிறகு 'இந்திய சிறுதொழில் வளர்ச்சி வங்கி' அதிகாரி வி.எஸ். மங்களா பெண்கள் சிறுதொழில்களைச் செய்ய வங்கிகள்



✱ கரகாட்டம்



என்னென்ன உதவி புரிகின்றன என விளக்கினார். அடுத்தது இன்றைக்கு உலகையே ஆட்டிப் படைக்கும் எய்ட்ஸைப் பற்றி விளக்கிக் கூறினார் டாக்டர் உமா. அவர் அரங்கத்திலேயே வெண்திரை அமைத்து 'ஸ்லைடுகளை'ப் போட்டுக் காண்பித்த போது பார்ப்பவர்கள் எளிதாகப் புரிந்து கொண்டு உணரும் வகையில் இருந்தது.

பிறகு எரிபொருள் சிக்கனம் பற்றிக் கனிரெனச் சொன்னவர் ஏ. சேகர். இந்தியன் வங்கியிலிருந்து வந்த உமாவும் பெண்களுக்குத் தொழில் பற்றிய ஆலோசனைகளை வழங்கினார். அடுத்து சைதாப்பேட்டை மாதர் சங்கப் பெண்கள் குழுவாகப் பாடல்களைப் பாடினார்கள்.

அடுத்ததாக தமிழ்நாட்டிலேயே முதலாக அமைக்கப்பட்ட பெண்கள் காவல் நிலையத்தைச் சார்ந்தவர்கள் இன்ஸ்பெக்டர் சிசிலியின் தலைமையில் வில்லுப் பாட்டு பாடினார்கள். லத்தி எடுத்துச் சுழற்றும் பெண்கள் வில்லு வைத்து அடித்தது பார்க்கச் சுவையாக இருந்தது. காவல் துறையில் பெண்கள் பணியாற்றுவதன் சிறப்பம்சங்களை அழகாகக் கூறினார்கள். ஏனோதானோவென்று இல்லாமல் இதற்காகவே திரு. சுப்பு ஆறுமுகம் அவர்களிடம் சென்று பயிற்சி செய்து கொண்டு வந்து ஜமாய்த்தார்கள். அவரும் வந்து அமர்ந்து தன் மாணவிகள் நன்றாகப் பாடுவதைப் பார்த்து ரசித்தார்.

அடுத்து வந்ததுதான் விழாவில் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த பெண்கள் சங்கங்களுக்கு இடையேயான நாடகப் போட்டி. பதினாறு பெண்கள் சங்கங்கள் இதில் கலந்து கொண்டார்கள். வரதட்சணைக் கொடுமை, கல்வியறிவு இன்மை, பெண்களை பெண்களே கொடுமைப்படுத்துவது, பெண் சிசுக் கொலை என அத்தனை பெண்களின் பிரச்னைகளையும் அலசி எடுத்து விட்டார்கள். நடுவர்களாக வந்திருந்த நடிகர் ஆர். எஸ். மனோகரும், டைரக்டர் எஸ். வி. ரமணனும் வியந்து போனார்கள்.

''இன்னும் கொஞ்சம் ரிகர்சல் செய்து நடித்திருந்தால் இன்னும் பிரமாதமாக இருந்திருக்கும். இல்லத்தரசிகள் இவ்வளவு தூரம் நடிப்பது பெரிய விஷயம்'' என வியந்து போனார் மனோகர். இரண்டரை மணிக்கு ஆரம்பித்த நாடகப் போட்டி முடியும் போது மணி ஐந்தரை. அவ்வளவு நேரம் ஆவலோடு மனோகரும், ரமணனும் பார்த்து ரசித்தார்கள். கீழே அமர்ந்திருந்த






# காலம் கனிந்திருக்கிறது. இதுவே சரியான தருணம். உங்கள் வருங்காலத்தை வளமாக்கிக் கொள்ளுங்கள்.



மகிழ்வூட்டும் வகையில் அமைந்துள்ள பட்ஜெட் நம் அனைவருக்குமே புத்துணர்வையும் புதுத் தெம்பையும் ஊட்டு வதாக உள்ளது.

விலைவாசிகள் இறங்கப் போகின்றன. சேமிப்பதற்கு வசதியாகக் கைவசம் உபரியாகத் தொகைகள் மிஞ்சப் போகின்றன. நிறைவேறாமல் போன வாக்குறுதிகளை நிறைவேற்ற இது சரியான தருணம். தேவைகள் எதையுமே உங்களால் இப்போது பூர்த்தி செய்ய முடியும். அத்தனையும் உங்கள் சொந்த முயற்சியால். ஸ்ரீராம் சிட்ஸில் சேமியுங்கள். நிதி திரட்டும் உங்கள் திறனைப் பெருக்கிக் கொள்ளுங்கள். இன்றைய தேவை. நாளைய சேமிப்பு. இரண்டுக்கும்.

5,70,000 பேர் தங்கள் பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டு ஸ்ரீராம் சிட்ஸின் மூலம் பலனடைந்து வருகிறார்கள். நீங்களும் அவ்வாறே பலன் அடையலாமே!

## சந்தாதாரர் பரிசுகள்

| சீட்டின் மதிப்பு | | | | ரூ. | சந்தாதாருக்குக் கிடைக்கும் பரிசு |
|---|---|---|---|---|---|
| 250 | x | 40 | = | 10,000 | 4 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 500 | x | 30 | = | 15,000 | மூடியுடன் கூடிய எஸ்.எஸ். பேஸின் |
| 625 | x | 40 | = | 25,000 | கானி மினி லஞ்ச் செட் (6 பொருட்கள்) |
| 500 | x | 60 | = | 30,000 | ஹால் மார்க் ஹண்டி பாட் |
| 1,000 | x | 50 | = | 50,000 | 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 1,250 | x | 60 | = | 75,000 | கானி லாட் ஸ்கில்லெட், மூடி இல்லாமல் |
| 1,000<br>2,500 | x<br>x | 100<br>40 | =<br>= | 1,00,000<br>1,00,000 | கிட்லேர் டவா |
| 4,000 | x | 50 | = | 2,00,000 | 2 x 25 கிராம் வெள்ளிப் பதக்கம் |
| 5,000 | x | 60 | = | 3,00,000 | 2 கிராம் தங்கக் காசு |
| 10,000 | x | 50 | = | 5,00,000 | 4 கிராம் தங்கக் காசு |
| 20,000 | x | 50 | = | 10,00,000 | 8 கிராம் தங்கக் காசு |

* நகழுக்கட்டணம் தனி



